# இலக்கியத் தலைவர் கலைஞர்

சிந்தனைச் செம்மல்

பேராசிரியர் டாக்டர் ந. சஞ்சீவி

அருள் வாழ்வுப் பதிப்பகம்

4, டாக்டர் சஞ்சீவி தெரு (தலையாரித் தெரு)

[illegible]லை, சென்னை - 600 004

# இலக்கியத் தலைவர் கலைஞர்

சிந்தனைச் செம்மல்
**பேராசிரியர் டாக்டர் ந. சஞ்சீவி**

**அருள் வாழ்வுப் பதிப்பகம்**
4, டாக்டர் சஞ்சீவி தெரு (தலையாரித் தெரு)
மயிலை, சென்னை - 600 004

# பதிப்புரை

தமிழக—இந்திய — ஏன்? உலக — அரசியல் வரலாற்றிலும் கலை; இலக்கிய வரலாற்றிலும் நிலையான நிறைவான வாழ்வு பெற்றவர் மாண்புமிகு தமிழக முதல்வர் டாக்டர் கலைஞர் அவர்கள்: எழுத்து, சொல், செயல் என்னும் மூன்றிலும்—எதனைவிட எதில் வல்லவர் என இனங்காண முடியாத அளவிற்கு மூன்றிலும்—மேம்பட்ட மேம்பாடு உடையவர் இவரைப் போல் வேறொருவர் இல்லை.

அப்படிப்பட்ட பெருந்தகையாளரைப் பற்றி—வாழ் வாங்கு வாழ்ந்த வாழவைக்கும் பண்பாளரைப் பற்றி—என் தந்தையார் 'சிந்தனைச் செம்மல்' பேராசிரியர் டாக்டர் ந. சஞ்சீவி அவர்கள் கடந்த பதினேழு ஆண்டுகளாக எழுதிவந்த கட்டுரைகளின் தொகுப்பே 'இலக்கியத் தலைவர் கலைஞர்' என்னும் இந்நூல். பேராசிரியர் டாக்டர் ந. சஞ்சீவி அவர்கள் கலைஞர் மீது கொண்ட நீங்காத பற்றை அவரிடம் நெருங்கிப் பழகிய அனைவரும் அறிவர். இப்பற்றின் அடிப்படைக் காரணம் அவரிடம் ஆழமாக வேரோடியிருந்த தமிழ்ப்பற்றே. தமிழறிந்த தமிழர்தான் தமிழகத்தின் முதல்வராய் வருதல் வேண்டும் என்னும் தீராத வேட்கை கொண்ட பேராசிரியர் ந. சஞ்சீவி அவர்கள் டாக்டர் கலைஞர் அவர்கள் முதலமைச்சரானதும் துள்ளிக் குதித்தார்; நெருக்கடி வேளையில் நீக்கப்பட்டதும் துவண்டு போனார்; 'மீண்டும் கலைஞர் வருவார்' என்ற தொலைநோக்குப் பார்வையோடே வாழ்ந்தார் அவர் கனவு நனவாகியது; ஆனால் கனவு கண்டவர்தான் இன்று இல்லை.

எனது தந்தையின் மறைவு எனது சிறு குடும்பத்திற்கு ஏற்பட்ட பெரும் இழப்பு. இந்தச் சூழலில் எனது தந்தைக்கு, எங்களிடம் வாழும் அவர் நினைவுகளுக்கு நாங்கள் செய்யும் சிறு பணியே அவரது எழுத்துகளைத் தொகுத்தல். பேராசிரியர் டாக்டர் ந. சஞ்சீவி அவர்கள், அவரே பலமுறை சொல்லியிருப்பது போல், ஆய்வையும் எழுத்தையும் மட்டுமே அறிந்தவர்; தமது வாழ்வையும் இவ்விரண்டையும் பின்னியே அமைத்துக் கொண்டவர்.

அவர், முத்தமிழ்க் கலைஞரின் முத்திறன்களைப் போற்றி மூவகைச் சூழலிலும் எழுதிய—முக்கனிச் சாறென நினைக்கின் இனிக்கும் — கட்டுரைகளின் தொகுப்பே இந்நூல்.

இந்நூலில் இடம் பெற்றுள்ள கட்டுரைகளில் தமிழ்ப் பற்று, தமிழின உணர்வு, வரலாற்று நோக்கு, திறனாய்வுத் திறன், ஆர்வ இழை, உலக உணர்வு ஆகிய அனைத்தும் இழையோடி இருப்பதைத் தமிழ் உலகம் நன்கு உணர்தல் கூடும்.

பல்வேறு பணிகளுக்கிடையேயும் இந்நூலுக்குத் தக்க அணிந்துரை வழங்கிய மாண்புமிகு கல்வி அமைச்சர் க. அன்பழகன் அவர்களுக்கு எங்கள் உளமார்ந்த நன்றியை உரித்தாக்குகின்றோம்.

இந்நூலை வரிவரியாகப் படித்துத் தக்க மதிப்புரை வழங்கிய நல்லறிஞர் டாக்டர் சிலம்பொலி சு. செல்லப்பன் அவர்களுக்கும், புகழுரை வழங்கிய இணைப் பேராசிரியர் டாக்டர் மு. நாகநாதன் அவர்களுக்கும் நெஞ்சார்ந்த நன்றியுடையோம்.

இந்நூல் அச்சாகி வெளிவர முழு ஒத்துழைப்பு வழங்கியவர் சென்னைப் பல்கலைக் கழகத் திருக்குறள் ஆய்வு மைய இணைப் பேராசிரியர் — பேராசிரியர் டாக்டர்

ந. சஞ்சீவி அவர்களின் தலை மாணாக்கர் (இரு பொருளிலும்)—இளம் வள்ளுவர், முப்பால் மாமணி, குறள் ஞானி டாக்டர் கு மோகனராசு. அவர்கள், எனது தந்தைக்குப் பிறகும் நாங்கள் மேற்கொண்ட இப்பணிக்கு வழிகாட்டி, இசைந்து, பொறுப்பேற்று, ஊக்கமளித்து, வடிவமைத்து தரும் பாங்கு எங்கள் நெஞ்சை நெகிழ்த்து கிறது. அவர்களுக்கு நாங்கள் என்றும் நன்றி யுடையோம்.

எனது தந்தை வாழ்நாளில் எழுதியவை பல; அவரே வெளியிட்டவை பல; இன்னும் வெளியிடப்பட வேண்டிய வையும் தொகுக்கப்பட வேண்டியமையும் பல. இவ் வெழுத்துக்களைப் புத்தக வடிவில் கொண்டுவர வேண்டியது எங்கள் குடும்பக் கடமை. எனினும், இந்நூல் உருவாகக் கடந்த ஒருமாத காலம் இரவும் பகலும் பாராமல் அயராது ஓடியோடி உழைத்தவர்—இந்நூலை வெளி யிடுவது தம் தலையாய கடமை எனக் கருதி உழைத்தவர் —கைமாறு கருதாமல் உழைத்தவர்—தமிழரறிஞர்க்குச் செய்யும் தமிழ்ப்பணி என உணர்ந்து உழைத்தவர் என் அன்புக் கணவர் டாக்டர் ம. பெ. பாலசுப்பிரமணியன் அவர்கள். அவரைக் கணவராகப் பெற்றது நான் பெற்ற பெரும் பேறு !

இந்நூல் அச்சாகும்போது என் கணவருடன் உடனிருந்து உழைத்தவர்கள். டாக்டர் சா. ராசன், திரு. சி. சுப்புராசு, திரு. செல்வசேகர் ஆகியோர். அவர்கள் அனைவர்க்கும் என் நெஞ்சார்ந்த நன்றியை உரித்தாக்கு கின்றேன்.

இந்நூலில் வரும் கட்டுரைகளை வெளியிட்டுதவிய தென்னகம், எதிரொலி, காஞ்சி, உரிமை வேட்கை, தமிழ்ப் பணி ஆகிய இதழ்களின் ஆசிரியர்களுக்குப் பெரிதும் நன்றி யுடையோம்.

இந்நூலை நல்ல முறையில் அச்சிட்டுதவிய ஜீவன் அச்சகத்தார்க்கும் அங்கே பணியாற்றும் பணியாளர்கட்கும் அட்டைப்படம் வரைந்துதவிய திரு. ரைம் அவர்களுக்கும் எம் நன்றி.

'சிந்தனைச் செம்மல்' பேராசிரியர் டாக்டர் ந.சஞ்சீவி அவர்களின் மறைவுக்குப் பின் நாங்கள் வெளியிடும் இரண்டாவது நூல் இது (முதல் நூல் 'சீனம் தரும் சிந்தனைகள்'). இதனைத் தமிழ் உலகம் போற்றி வரவேற்கும் என நம்புகிறோம்.

சென்னை-4
நாள் : 2-6-1989

தங்கள்
எழிலரசி பாலசுப்பிரமணியன்

# அணிந்துரை

## மாண்புமிகு பேராசிரியர் க. அன்பழகன்
## (தமிழக கல்வி அமைச்சர்)

பேராசிரியர் டாக்டர் ந. சஞ்சீவி பல்லாண்டு காலம் பழந்தமிழ் பயின்று, பயிற்றுவித்து. தெளிந்து தெளிவுரைகளாக்கி, ஆய்விற் சிறந்த கட்டுரைகளாக்கி — தமிழ்த் தொண்டு ஆற்றியவர்.



பச்சையப்பன் கல்லூரியில் பயின்ற இளமை நாள் தொடங்கி, ஒரு குறிக் கோளுடன் செயற்படும் ஆர்வத்தினராகி, தமிழ் வளர்ச்சிக்கும் — தமிழர் நிலை உயர்வுக்கும் ஏற்றவற்றையே எண்ணத்தில் தேக்கி, அதனைப் பரப்பிடும் பணியினை ஓயாது நிகழ்த்தியவர்.

எதையும் கூர்ந்து நோக்கி, உண்மை நாடி, நன்மையைக் கண்டு நாட்டவர்க்கு உரைக்கும் நாவினர். துவக்கத்தில் அரசியல் வழியில் வேறுபட்ட சிந்தனையுடையவராய்ச் செயற்படினும் கால ஓட்டத்தில் பேரறிஞர் அண்ணாவின் பெருந்தகைமையினையும், பல துறை ஆற்றலையும் உணர்ந்து வியந்தவர். அதே வழியில்— 'அண்ணாவின் தம்பி' என்னும் அடைமொழிக்கு முற்றிலும் தம்மைத் தகுதியுடையவராக்கிக் கொண்ட — அவரது மொழியில் கூறுவதானால், கலைஞரை—பெருங் கலைஞரைப் பலகாலும் அவரது எழுத்தில் கண்டும், மேடையில் கேட்டும், பின்னர் வாய்ப்பு நேர்ந்துழி நேரில் உரையாடியும் அவரது ஆற்றலை உணர்ந்து போற்றுதற்கு முன் வந்தவர்.

தேசிய இயக்கம் — பாரத நாட்டுரிமை என்னும் வகையில் பொதுத் தொண்டில் ஆர்வம் கொண்ட டாக்டர் சஞ்சீவி—காலம் என்னும் ஏடு பக்கம் பக்கமாகப் புரண்ட போது—அவை எல்லாம் தாய்மொழி உரிமை—இனவழி வாழ்வு — மாநில மக்களின் தன்னாட்சித் தகுதி என்னும் பல பக்கங்கள் கொண்ட ஏட்டின் மேலட்டையே என்று தெளிந்தார் என்றே அவரை அறிந்த நான் கருதமுடியும்.

அவரது உள்ளம்—உண்மை நிலையை உணர உணர உணர்ச்சிப் பிழம்பாக மாறி, அநீதியையும் ஆதிக்கத்தையும் ஆணவத்தையும் எரித்து விடத் துடித்தது. அந்தத் துடிப்பின் ஒலியைத்தான்—இந்தத் தொகுப்பு நூலில் இடம் பெற்றுள்ள கட்டுரைகளில் கேட்கின்றோம்.

இலக்கியத் தலைவர்—கலைஞர்' என்னும் இத் தலைப்பு, நூலில் நுவலப்படும் பொருளுக்கு ஏற்புடையது மட்டுமின்றி—ஏற்றமும் தருவது.

பேரறிஞர் அண்ணா வழங்கிய 'முன்னுரை' ஒன்று, கலைஞரின் புகழுக்கு முகவுரையாக ஒளிர்கின்றது.

இளங்கோவின் சிலம்பு—கலைஞரின் தமிழாற்றலால் புதுவண்ணம் கொள்கிறது. அந்தப் புதுவண்ணத்தால் சிலம்பின் காவியச் சிறப்போ—பாத்திரங்களின் தகுதியோ இம்மியளவும் குன்றாது காக்கப்படுவதுடன் காலத்தின் தேவையும் நிறைவு பெறுகின்றது என்பதைப் பாராட்டிக் குறிப்பிடும் அண்ணா கலைஞரின் செழுஞ்சொல் ஓட்டத்தினையும் சீரிய அழகுப் படைப்பை உருவாக்கும் திறனையும் பாராட்டுகின்றார் ;

> 'இந் நாடக நூலை வெளிக் கொணர்வது மூலம் தம்பி கருணாநிதி—தமிழ் இலக்கியத்திற்கு நற்பணி ஆற்றி உள்ளார்' என்று குறிப்பிட்டுள்ளது—அண்ணா அவர்கள் அந்த நாளிலேயே கலைஞருக்கு வழங்கிய அறிவுலகம் மதித்தேற்கும் 'டாக்டர்' பட்டம் அன்றோ !

அண்ணாவின் அந்த முன்னுரையையே—சிந்தனைக்கு விருந்தளிக்கும் வகையில்—அதன் நுட்பத்திறன் காட்டித் தன் மதிநுட்பம் புலப்பட வரைந்துள்ளார் சஞ்சீவி.

தலைவர் கலைஞர்—தமிழ் மக்கள் தெய்வம்—என்னும் கட்டுரையில்—கலைஞரின் நுண்ணறிவு, நூலறிவு, செயலாற்றல், கண்டிப்பு, கருணை, அடக்கம், அறிவாய்வு ஆகியவற்றைப் போற்றி எடுத்துக்காட்டுவதுடன் 'தமக்காகக் கலைஞர் இனியும் வாழார்—தமிழர்க்காக, சமநீதிக்காகவே வாழ்வார்; இது காலத்தின் கட்டளை ; பட்டறிவின் பாடம்' என்று குறிப்பதன் மூலம் 'தெய்வம்' என்று போற்றுதற்கான விளக்கத்தைத் தருகிறார். டாக்டர் சஞ்சீவி—ஓரிரு குறைகாணினும் சுட்டும் இயல்பினரன்றோ! அதே வழியில் நான் சுட்ட வாய்த்தது இது—'தமக்காகக் கலைஞர் இனியும் வாழார்' என்னும் தொடர், 'இனியும் —தமக்காக வாழ்பவர் அல்லர் கலைஞர்'' என்று இடம் பெற்றிருக்க வேண்டும். அவர் இதயத்திலும் அப்படித் தான் இடம் பெற்றிருக்க முடியும்.

அடுத்து ஒரு கட்டுரையில், 'நம் கலைஞர் பட்டதாரி அல்லர் ; ஆனால் பட்டதாரிகட்குப் பட்டமளிப்பு விழா உரையாற்றும் அறிவாண்மை பெற்றவர்', என்று அவர்தம் அறிவின் உயர்ச்சியைச் சுட்டுகின்றார்.

'கலைஞர் ஒரு கவிஞர்' என்னும் தலைப்பில், கலைஞரின் உள்ளத்தைக் கொள்ளை கொண்ட தமிழ்—எத்தனை எத்தனை அடைமொழி என்னும் அணிகள்பூண்ட அணங்காக அவர்தம் கவிதை அடிகளிலே நடம்புரி கின்றாள் என்பதை வரிசைப்படுத்துகின்றார்.

கலைஞரின் கவியரங்கக் கவிதைகளும் அவற்றைப் படைத்தவர் கற்பனைத் திறனும் ஆய்வுப் பொருளாகி யுள்ளன ஒரு தலைப்பில்.

'கருத்துப் பரப்புக்கலை'—என்று கொள்கையைப் பரப்பும் திறனைக் குறிப்பிடும் டாக்டர் சஞ்சீவி அவர்கள் கலைஞரின் பாடுதிறனைப் புலப்படுத்துகின்றார்.

பாட்டாளியின் பெருமையையும்—பொங்கல் மாட்சி யையும்—கலைஞர் தீட்டும் பெற்றியை விளக்குவதுடன், வள்ளுவர் வழியில் கலைஞர்—அவரது அடி ஒற்றியும் நெறி தழுவியும் குறட்பாவை ஏற்ற விடத்து எடுத்தாளும் திறத்தை—வகை வகையாகத் தொகுத்தும்—தொடுத்தும் விளக்கம் செய்துள்ள பாங்கு ஒரு ஆய்வாக மட்டுமன்றிப் பயன்மிக்க கருத்து மலர்க் கொத்தாகவும் மணக்கின்றது.

'நெஞ்சுக்கு நீதி' ஒரு கருத்தீடு—என்னும் ஆய்வுக் கட்டுரையும் ஒரு செஞ்சொற் கருவூலமேயாம்.

ஆம்—டாக்டர் கலைஞரை ஆய்வு செய்யத் தலைப் பட்ட டாக்டர் சஞ்சீவியின்—தமிழ் உள்ளத்தை, ஆய்வுத் திறத்தை, சான்றாண்மைப் பண்பை, தியாகம் போற்றும் சிந்தையை, தமிழர் நலன் நாடும் ஆர்வத்தை இந்தத் தொகுப்பு ஏடு—உலகுக்கு உணர்த்துகிறது. ஆம், சஞ்சீவி அவர்கள் இன்னும் சிலகாலம் வாழ்ந்திருப்பாராயின்—தமிழுக்கு எத்தனை பெரும் பயன் விளைந்திருக்கும் ? என்று எண்ணிடத் தோன்றும் இவ் வேளையில்—அவரது மனம் எவரது வாழ்வு நீடித்திட வேண்டும்—தமிழும் தமிழரும் வாழ்வு பெற என்று விழைந்தாரோ—வேண்டினாரோ—அந்தப் பெருங்கலைஞர் மேலும் பல்லாண்டு வாழ்ந் திடட்டும்—என்று எண்ணுவதிலேயே மனதுக்கு ஒரு நிறைவு ஏற்படுகிறது.

கலைஞரின் அருமையும் பெருமையும் பல கோணத்தில் விளக்கிடும் இந்நூல்—டாக்டர். சஞ்சீவின் பெருமைக்கும் பேரறிவுத் திறனுக்கும் ஒரு சான்றாக விளங்குகிறது என்பேன்.

*30-5-89* க. அன்பழகன்

# மதிப்புரை

## டாக்டர் சிலம்பொலி சு. செல்லப்பன்
## (இயக்குநர், தமிழ் வளர்ச்சி இயக்ககம்)

'இலக்கியத் தலைவர் கலைஞர்' எனும் இந்நூல் கலைஞர் பற்றி, ஆய்வுச் செம்மல் பேராசிரியர் ந. சஞ்சீவி யார் எழுதியுள்ள பதினாறு ஆய்வுக் கட்டுரைகளின் தொகுப் பாகும்.

'பதினாறும் பெற்றுப் பெருவாழ்வு வாழ்க' என வாழ்த்துவது மரபு. 'என் கட்டுரைகள் பதினாறையும் பெறுகின்ற நீவிர் பல்லாண்டு பல்லாண்டு பயன் பெருக்கி வாழ்வீராக' எனப் பேராசிரியர் சஞ்சீவியாரின் எழுத்து வாழ்த்தாக தலைவர் கலைஞர் அவர்களின் 66ஆவது பிறந்த நாள் விழாவின்போது இந்நூல் வெளியிடப்பெறுகிறது. கலைஞர் பதினாறு பேறுகள் பெறுவது மட்டும் அன்று; அவர் 'என்றும் பதினாறாய்ப்' பெருமை பூத்துச் சிறக்க வேண்டுமெனும் சஞ்சீவியாரின் ஆவல் இந்நூலிலுள்ள பதினாறு கட்டுரைகளிலும் ததும்பி நிற்பதை நன்கு உணர லாம்.

கலைஞரின் 'சிலப்பதிகார நாடகக் காப்பியத்திற்கு'ப் பேரறிஞர் அண்ணா அளித்துள்ள முன்னுரையை விளக்கிக் கலைஞரைப் போற்றும் கட்டுரை 1; கன்னித் தமிழ்க் காவலராம் கலைஞரின் குண நலன்களைக் கொஞ்சு தமிழில் கூறுகின்ற கட்டுரைகள் 3; கவிஞர் முதல்வராம் கலைஞரின் கவிதைகள் பற்றிய திறனாய்வுக் கருத்துகளைத் தாங்கி நிற்கும் கட்டுரைகள் 9; தன் வரலாறு என்பதினும் நம் காலத்தின் தமிழ் வரலாறு—தன்மான இயக்க வரலாறு என்று போற்றுதற்குரிய 'கலைஞரின் நெஞ்சுக்கு நீதி'

பற்றிய கருத்தீடான கட்டுரை 1, அயலகத் தூதரகங்களில் பணிபுரிந்து ஓய்வுபெற்ற திரு. இராமன் என்பார் கலைஞர் பற்றி எழுதியுள்ளதை எடுத்து மொழிபெயர்த்துச் சஞ்சீவியார் தன் குறிப்பையும் சேர்த்துத் தந்துள்ள கட்டுரை 1; எனப் பதினாறு அரிய கட்டுரைகள் அடங்கிய கருத்துக் கருவூலமாக இந்நூல் அமைந்திருக்கிறது.

ஆயப்புகும் எதனையும் பட்டியலிட்டுக் காட்டுவது சஞ்சீவியாரின் ஆய்வு முறைகளுள் ஒன்று. அதனை இந்நூலுள்ளும் பல இடங்களில் காணலாம். இந்நூலுள் அவர் ஆய்வுக்கு ஆட்பட்டிருப்பவர் கலைஞர் கருணாநிதி யார்—கருணாநிதி யார்?

"நடுத்தர உயரம், வழுக்கை விழும் தலை, ஒளிவு மறைவு இல்லாத மனத்தைத் திறந்து காட்டும் முகம், தோற்றத்திலேயே மதிப்பைத் தோற்றுவிக்கும் தன்மை—இவற்றின் இணைப்பே கருணாநிதி.

அவர் தி. மு. க. இயக்கத்தின் ஒரு பெருந் தலைவராய்த் திகழ்பவர்; மக்கள் வெள்ளத்தைக் கிளர்ந்தெழச் செய்யக் கூடிய ஈடு இணையற்ற நாநலம் வாய்ந்தவர்; உயிர்த் துடிப்பூட்டுபவர்; திறமை மிக்க அரசியலாளர்: அனைவ ராலும் மதிக்கப்படுகின்ற தமிழறிஞர்.

அவரிடம் புலமை மட்டுமன்று, அடக்கமும் மனித நேயமும் உடன் உறைகின்றன. மரியாதை, பண்பாடு ஆகியவற்றின் உறைவிடம் அவர். உண்மையில் 'பண்பு' எனும் உயர் தனித் தமிழ்ச் சொல்லுக்கு உலவுகின்ற வடிவ மாக இலங்குபவர் கருணாநிதி" (இந்நூல் ப. 181)

இக்கருணாநிதியைச் சஞ்சீவியார் பல்வேறு கோணங் களில் கண்டு பாராட்டி மகிழ்கிறார்.

கலைஞர் :

(i) மக்கள் — மனிதர் தலைவர் (People leader) (ப. 61)

(ii) பேரறிஞர் புகழ்ப் பெருமையாளர் (ப. 18)

(iii) அறிஞர் வழியில் ஆட்சி நடத்தும் அண்ணல் (ப. 74)

(iv) வன்முறைக்கு எதிராக முரசொலி செய்யும் முதல்வர் (ப. 75)

(v) பூம்புகார் படைத்த பொன்னிப் புரவலர் (ப. 146)

இவை ஒப்பற்ற தொடரால் அமைந்துள்ள புகழுரைகள்.

பெருங்கலைஞர்—இன்றைய நம் முதல்வர்,

"படிப்படியாக வளர்ந்தவர்—படித்துப் படித்து வளர்ந்தவர். தம்பியுடையான் படைக்கஞ்சான் என்னும் பழஞ்சொல்லுக்கு எல்லாத் துறைகளிலும் புத்துரை காண்பவர்." (ப. 17)

"பின்னணி (சாதி, செல்வம், குடும்பப் பரம்பரை அல்லது வழிமரபு முதலிய) பலம் ஏதுமில்லா நிலையில் இயற்கை நுண்ணறிவுத் திறத்தாலும் ஓயாத உழைப்பாலும் மக்களின்—இனத் தெய்வமாய் உருவானவர்" (ப. 28)

"நூலறிவும் செயலாற்றும் கண்டிப்பும் கருணையும் அடக்கமும் அறிவாய்வும் ஒருங்கே படைத்தவர்" (ப. 28)

"ஒன்றாரும் ஒப்பும் சொல்லாற்றல்—செயலாற்றல் ஒருங்கிணைந்த ஒரு பெரும் முதல்வர்......தமக்குப் பிறவியிலேயே அமைந்த பேராற்றல்களைக் கூர்தீட்டிக் கொண்டவர், சீராட்டிக் கொண்டவர்......பதவி ஏறஏறப் புகழ் ஏறஏற அவர் பண்புகளும் ஏற்றம் பெறுகின்றன" (ப. 39)

எனப் பல்தொடர் ஓவியங்களாகப் படைத்துக் காட்டுமிடங்கள் பல. மேலும், "நம் கலைஞர் பட்டதாரி அல்லர் ; ஆனால் பட்டதாரிகளுக்குப் பட்டமளிப்பு விழா உரையாற்றும் அறிவாண்மை பெற்றவர். நம் கலைஞர் வழிவழிச் செல்வர் அல்லர் ; ஆனால் செல்வர்கள் எல்லோரையும் நல்வழிக்குக் கொண்டுவரத் தெரிந்த வல்லாளர்" (ப. 33)

"கலைஞரின் கை கன்னித் தமிழ் வளர்க்கும் கை; ஏழை எளியோர் கண்ணீர் துடைக்கும் கை; வயிற்றுக்காக நடிக்கும் புல்லரினும் வாய்மைக்காக இடிக்கும் புலவரைப் போற்றும் கை; உண்மைக்கும் உழைப்புக்கும், ஒழுக்கத்துக்கும் உயர்வு தரும் 'கை... அறிஞர் வழியைக் கலைஞர் வழியாக—அறிவைக் கலையாக மாற்றும் கை" (ப. 37)

"கலைஞர் பெருந்தகை தகுதி காக்கும் தகுதியாளர்—தயாளர். தன் தகுதி காக்கிறார்; தன் தாய்மொழியை—தாய்நாட்டைக் காப்பவரைக் காக்கிறார்"... (பக். 40)

"செயல் வீரத்தை உயிராகப் பெற்ற சிந்தனை வீரத்தை உள்ளமாகப் பெற்ற—சொல்வீரத் திருவுருவர் அன்றோ நம் கலைஞர் முதல்வர்" (ப. 137)

எனக் கலைஞரின் குணநலன்களைக் குன்றின் மேலிட்ட விளக்காக்கிக் காட்டுகிறார்.

"நடை—படை இரண்டிலும் பேரறிஞர் அண்ணாவை எதிரொலி செய்யும் ஏந்தல் கலைஞரே" (ப. 158)

"பேரறிஞர் அண்ணாவும் விண்ணிலிருந்து வியப்பும் விம்மிதமும் கொள்ள ஏடாளும்—நாடாளும்—நல்லோர் நெஞ்சமெல்லாம் ஆளும் சான்றோர் நம் முதல்வர் கலைஞர்" (ப. 140)

என அண்ணாவழி நின்று அருந்தொண்டாற்றிப் பெருமை கொள்பவர் எனப் பெருமிதத்துடன் எடுத்து மொழிகிறார்.

அண்ணாவைப் 'பெருந்தலைவன்' என்று கலைஞர் கொள்வது எவ்வளவு உண்மையோ அவ்வளவு உண்மை நம் முதல்வர் 'பெருங்கலைஞர்' எனத் தெரிந்து தெளிகிறார். இத்தகு கலைஞரின் கவிதைகளைச் சொல்லுக்குச் சொல் ஊன்றிப் படித்துத் திளைத்துத் தான் பெற்ற இன்பத்தை அனைவரும் பெறும் வகையில் அரிய கட்டுரைகளை ஆக்கித் தந்துள்ளார், திரு. ந. சஞ்சீவியார்.

கலைஞரின் கவிதைகளைத் துருவி ஆய்ந்து, கலைஞர் தமிழைப் போற்றும் சொற்களையும் சொற்றொடர் களையும் வகைதொகை செய்து வளங்கண்டு, இவ்வகை தொகை ஆராய்ச்சியால் தமிழிலக்கியப் பரப்புள் வேறு எந்தப் புலவரும் இந்த அளவிற்குப் பைந்தமிழின் பல் வளத் தையும் பல்திறனையும் ஒரு சேரப் பாடியவரில்லை என்பதைத் தெளிவுபடுத்துகிறார் (ப. 56)

கலைஞருடைய கவிதைகளின் அமைப்பு போற்றுதற் குரியது; உணர்ச்சி அளவிடற்கரியது; உவமை, உருவகம், கற்பனை ஊற்றெடுத்துப் பெருகுகின்றன. அவர் கவிதை களில் சிலேடை பேரிடம் பெறுகிறது. கவிதை நெடுக ஆங்காங்கே அண்ணாவைப் பற்றிய அருமை பெருமைகள் பொதிந்து நிற்கின்றன என்பவற்றைச் சான்றுகள் காட்டி நிறுவுகிறார்.

கலைஞரின் கவிதைகளை மையமாகக் கொண்டு ஆராய்ந்து, கலைஞர் அவர்களின் கவிதைகளில் வேறு எந்தத் தமிழ் இலக்கியத்தை விடவும் திருக்குறள் ஆட்சி மிகுதியாக இருப்பதை நிறுவிக் காட்டுகிறார். அவருடைய கவியரங்கக் கவிதைகளில் 53 குறட்பாக்களை எடுத்தாண்டுள்ள மையைப் பட்டியலிட்டுக்காட்டி மெய்ப்பிக்கிறார். சில குறட்பாக்களை ஒரே முறையும், சிலவற்றை இரண்டு

முறையும் ஆண்டுள்ள கலைஞர் அவர்கள், இரண்டு குறட்பாக்களை மும்மூன்று முறை எடுத்தாண்டுள்ளதை மிக நுட்பமாக ஆராய்ந்துள்ளார்.

**அருளில்லார்க்கு அவ்வுலகம் இல்லை; பொருளில்லார்க்கு இவ்வுலகம் இல்லாகி யாங்கு.**

**கடிதோச்சி மெல்ல எறிக நெடிதாக்கம்**
**நீங்காமை வேண்டு பவர்**

என்னும் இவ்விரண்டு குறட்பாக்களுமே மாண்புமிகு கலைஞரின் இரு மலர்விழிகள் என்பது தம் கருத்து என ஆசிரியர் கூறுவது நம்மைப் புல்லரிக்கச் செய்கிறது; அவரது ஆய்வின் ஆழத்தை எண்ணி இறும்பூதடைய வைக்கிறது (ப.123). கலைஞருடைய கவிதைகள் சுருங்கிய சொற்களில் சுடர்விடும் உணர்வுகளின் நிறைவாய் அமைந்திருப்பதை ஆய்வு வழி நின்று உணர்த்துகிறார்.

ஓர் இலக்கியத்துக்கு இருக்க வேண்டிய 'முன்னோர் மொழி பொருளே அன்றி அவர் சொல்லையும் பொன்னே போல் போற்றும் புலமை—பண்புநலன்' கலைஞரிடம் நிரம்ப உண்டு என்பதைத் தக்க எடுத்துக்காட்டுகள் கொண்டு மெய்ப்பிக்கிறார்.

'புலவர் புகழ் தமிழ்' என்றே இருந்த நிலையை இந் நூற்றாண்டின்—இருபதாம் நூற்றாண்டின் இயல்புக்கும் இன்றியமையாமைக்கும் ஏற்பப் 'பொது மக்கள் புகழ் தமிழ்' ஆக மாற்றிய பெருமை கலைஞரின் கவிதைக்கு உண்டு என்பதைச் சஞ்சீவியார் மகிழ்வு பொங்கக் கூறுகிறார்.

உண்மையும் தன் மனதுக்குச் சரியெனப் பட்டதை எது பற்றியும் கவலையின்றிச் சொல்லுதலும் ஆய்வாளனின் முக்கிய இரு பண்புகளாம். இந்த இரண்டையும் சஞ்சீவி யார் நிரம்பப் பெற்றிருந்தார் என்பதை ஆய்வுலகம் ன்கறியும். இந்நூலும் இதற்குத் தக்க சான்றாக அமை

கிறது. கலைஞரின் நெஞ்சுக்கு நீதியை மதிப்பீடுகின்ற சஞ்சீவியார், 'நான் முதன் முதலாகத் தன் வரலாறு ஒன்றை ஆய்ந்து எழுதும் கட்டுரை இதுதான்' எனத் தன்னடக்கத் தோடு உண்மையை ஒளிவு மறைவின்றிக் கூறுகிறார். கலைஞர் தம் நெஞ்சக் கூறாக 123 செய்திகளை அவர் பட்டியலிட்டுக் காட்டியிருப்பது அவரது பேருழைப்புக்கும் அழுத்தமான ஆய்வுக்கும் சான்றாம். அவற்றுள் ஒன்றாக அந்நூலில் பிறமொழிக் கலப்பு (நூல் முழுதும் அழகுத் தமிழ் முகத்தில் அம்மை வடுக்கள் போல) உள்ளது என அவர் சொல்வது 'காமம் செப்பாது கண்டது மொழியும்' ஆய்வுப் பண்புக்கு எடுத்துக்காட்டாம்.

தன் ஆராய்ச்சியைப் பற்றிய உயர்வான மதிப்பீடு— தன்னம்பிக்கை கொண்டிருந்தவர் சஞ்சீவியார். கலைஞரின் கவிதைகள், ஆராய்ச்சி நெறிமுறைகள் அத்துணைக்கும் ஈடு கொடுப்பனவாக அமைந்துள்ள சிறப்பைச் சொல்லப் புகுகின்ற அவர் "என் ஆண்மைகொள் ஆராய்ச்சிக்குரிய கருவூலமாய் விளங்குவன கலைஞர் கவிதைகள்" என்கிறார் (ப. 77). தன் ஆராய்ச்சியை 'ஆண்மைகொள்' ஆராய்ச்சி என்று சொல்லுகின்ற தன்வீறுகொண்ட தண்டமிழ்க் கொண்டல் நம் சஞ்சீவியார்.

> தாமரைத் தண்டா தூதி மீமிசைச்
> சாந்தின் தொடுத்த தீந்தேன் போலப்
> புரைய மன்ற புரையோர் கேண்மை
>
> (நற். 1: 2—4)

என்பன நற்றிணைப் பாடலடிகள். பொய்கையில் மலர்ந்த தாமரையின் தாதினை ஊதி, உயர்ந்த மலையிடத்து நின்ற சந்தன மரத்தில் வைக்கப்பெற்ற இனிய தேனைப் போல உயர்ந்தோருடைய நட்பு என்றும் உயர்ந்ததேயாம் என்பது இவ்வடிகளின் பொருள்.

பூக்களில் சிறந்தது தாமரை. மலைமீது நிற்கும் மரங்களில் சிறந்தது சந்தனம். சிறந்த பூவின் இனிமை

யான தேன் உயர்ந்த மரத்தில் சேர்ந்து மணம் பெறுவது போல மனிதருள் மாமனிதராகிய கலைஞரின் படைப்பு களை ஆய்வுலக மேருவாக விளங்கிய சஞ்சீவியார் ஆய்ந் திருப்பது 'சாந்தின் தொடுத்த தாமரைத் தீந்தேன் ஆகும். இத்தமிழ்த் தேனை மாந்தி மகிழ்வோமாக!

அன்புடன்

சு. செல்லப்பன்

சென்னை
30-5-1989

# புகழுரை

## (தமிழ்ப் புலவரின் கனவு நனவாகிறது)

டாக்டர் மு. நாகநாதன்

(பொருளியல் துறை, சென்னைப் பல்கலைக்கழகம்)

காலம், கண் இமைக்கும் நேரத்தின் வேகத்தைவிட விரைந்தோடுகிறது. பேராசிரியர் ந. சஞ்சீவியும் யாரும் எதிர்பார்க்காத வகையில் கண் இமைக்கும் நேரத்தில் நம்மை விட்டுப்பிரிந்து விட்டார். நின்றது போல் நின்றார்; நெடுந்தூரம் பறந்து விட்டார். ஆனால் அவர் விட்டுச் சென்ற எழுத்துகளும், நினைவுகளும் தமிழரின் நெஞ்சில் நிலைபெற்றவை.

செந்தமிழ்த்தேனி, சந்தனத் தமிழ்க்கோர் காவலர், இன்றைய தமிழக முதல்வர் கலைஞரை டாக்டர் ந. சஞ்சீவி அவர்கள் தாம் வாழ்ந்த காலத்தில் நினைக்காத நாளில்லை எனலாம். கலைஞர் தமிழக முதல்வராய்ப்பொறுப்பேற்கும் நாளே தமிழர்க்கு நன்னாள், பொன்னாள் எனக் கூறித் தாமும் அந்நாளைக் காணத் துடித்தார். அடிக்கடி கலைஞரைச் சந்தித்துத் தமிழ் நாட்டில் சூதுமதியினர் செய்யும் அரசியலை எடுத்து இயம்புவார். பேராசிரியர் சஞ்சீவி என்னைச் சந்திக்கும்போதெல்லாம் தலைவரைச் சந்தித்தீர்களா? நான் கூறிய கருத்துகளைத் தெரிவித்தீர் களா?' என்று கேட்பார். கலைஞரும் அவ்வாறே நான் பார்க்கும் போதெல்லாம் 'புலவர் என்ன கூறினார்?' என்று புன்முறுவல் புரிவார். அவர்கள் நட்பு காலத்தால் முகிழ்த்த நட்பு; தமிழால் வளர்ந்து செறிந்த நட்பு.

பேராசிரியர் ந. சஞ்சீவியின் துணைவியார் பேராசிரியை டாக்டர் கிருட்டிணா சஞ்சீவி மறைந்து விடுகிறார்; கலைஞர் ஊரிலில்லை. பயணம் முடிந்து வந்தவுடன்

பேராசிரியர் ந. சஞ்சீவி இல்லம் சென்று இரங்கலைத் தெரி விக்கிறார்; உடன் நானும் செல்கிறேன்.

தமிழர்த் தலைவரைக் கண்டவுடன் தமிழ் நெஞ்சம் கண்ணீர் மல்குகிறது. உணர்வே உருவான பேராசிரியர் ந. சஞ்சீவியை அணைத்து, கலைஞர் ஆறுதல் கூறுகிறார்.

சென்ற ஆண்டு, பேராசிரியர் ந. சஞ்சீவி மறைவ தற்குச் சில மாதங்களுக்கு முன்பு, டாக்டர் ந. சஞ்சீவி மாலை 4 மணி அளவில் பல்கலைக்கழகத்திலிருந்த என்னோடு தொடர்பு கொண்டு, 'உடனடியாகத் தலைவர் கலைஞரைப் பார்க்க வேண்டும்' என்று கூறினார். நாங்கள் தலைவர் கலைஞரைப் பார்க்க. அவர் இல்லத்திற்குச் செல்கிறோம். தலைவரின் மனைவியார் அன்புடன் எங்களை வரவேற்றுத் தயக்கத்துடன் 'கலைஞர் இல்லையே' என்கிறார். பேராசிரியரோ கலைஞரைக் காண துடிக்கிறார். பேராசிரியரின் ஆர்வத்தை உணர்ந்த அவர்கள் 'கலைத்துறைப் பணிக்காக ஏ. வி. எம். திரை அரங்கில் கலைஞர் உள்ளார்' என்றார்கள். பேராசிரியர் ந. சஞ்சீவியும் நானும் ஏ. வி. எம். அரங்கிற்கு விரைந்து செல்கிறோம். மாலை இரயிலில் தலைவர் தென் மாவட்டப் பயணத்தை மேற்கொள்கிறார் என்ற செய் தியும் சொல்லப்படுகிறது. 'பாசப்பறவை' திரைப் படத்தின் இறுதிக் காட்சிகளை ஒழுங்குமுறை செய்தற்கான பணியை முடித்து அரங்கிலிருந்து கலைஞர் வருகிறார். பேராசிரியர் ந. சஞ்சீவியையும் என்னையும் காரில் ஏற்றி இல்லம் சென்று உரையாடுகிறார். பேராசிரியர் சொல்ல வேண்டிய செய்தியை நேரில் சொல்லி விட்டோம் என்று களிப்படைகிறார். கலைஞரோ, பேராசிரியர் ந. சஞ்சீ வியின் உடல் சோர்வைக் கண்டு கவலைப்பட்டு, எந்தச் செய்தி கிடைத்தாலும் அதிர்ச்சி அடைய வேண்டாம் என்று பேராசிரியரிடம் கூறுகிறார். நாளெல்லாம், தமிழர் நலனையே நாடும் தாயுள்ளம் கொண்ட தமிழினத்தின் பாசப்பறவை, சஞ்சீவி எனும் தமிழ் நேசப்பறவையின் மீது

காட்டிய பரிவைக்கண்டு களித்த காதல் பறவையானேன் நான் என்றால் மிகையாகாது. 1987-ம் ஆண்டில் பேராசிரியர் பல்கலைக் கழகத்திலிருந்து ஓய்வு பெற்ற பிறகு, ஏறக்குறைய கலைஞர் நிகழ்ச்சிகளில் எல்லாம் பங்கு பெற்றார். கலைஞரின் ஒவ்வொரு பேச்சையும் பேராசிரியர் ந. சஞ்சீவி ரசித்து என்னிடம் உரையாடுவார். கலைஞரின் பேச்சாற்றல், திட்ப நுட்பத்துடன், அரசியல் இலக்கியம் அளவுடன் கலந்து எதிர் காலத் தமிழர் வாழ்வு சிறந்தோங்கும் உயர்ந்த நோக்குடன் தென்றலாக உலா வருவதை உணர்ந்த பேராசிரியர் ந. சஞ்சீவி அடைந்த மகிழ்ச்சிக்கு அளவே இல்லை. 1988-ம் ஆண்டு ஆகஸ்ட் மாதம் பல்வேறு நிகழ்ச்சிகளில் கலந்து கொண்ட பேராசிரியர் 20-ம் தேதி பல்கலைக் கழகத்திற்குத் தொலைபேசியில் தொடர்பு கொண்டு இறுதியாகப் பேசினார். 22-ம் தேதி, அதிகாலையில் இவ்வுலகத்தை விட்டு ஓய்வு பெற்றுவிட்டார். 22-ம் தேதி இந்த செய்தி எனக்கு எட்டவில்லை. பல்கலைக்கழகத்திற்குச் சென்று விடுகிறேன். தமிழினத் தலைவருக்குச் செய்தி எட்டுகிறது; அதிர்ச்சி அடைகிறார். தலைவரின் உதவியாளர் திரு. சண்முக நாதன், என்னிடம் இந்தச் செய்தியை அறிவித் தவுடன் கலங்கினேன்; கதறினேன். தலைவர் கலைஞர் டாக்டர் ந. சஞ்சீவி வீட்டிற்கு விரைகிறார். பேராசிரியர் குடும்பத்திற்கும் எனக்கும் ஆறுதல் கூறுகிறார். சில மாதங்கள் நகர்கின்றன. 1989-ம் ஆண்டு சனவரி மாதத்தில் சட்டமன்ற தேர்தல் நடைபெறுகின்றது.

திராவிடர் இயக்க வரலாற்றிலும், தமிழக வரலாற்றி லும் எந்தவொரு தலைவரும் சந்திக்க இயலாத கடும் எதிர்ப்பையும், கொடுஞ் சிறைவாசத்தையும் நெஞ்சுரத் துடன் சந்தித்து வெற்றி கண்ட கலைஞரின் ஆட்சி தமிழகத் தில் மலர்கிறது. தந்தை பெரியாரும் பேரறிஞர் அண்ணா வும் காட்டிய நெறிமுறைகளின் அடிப்படையில் கடந்த 50 ஆண்டுகளாக நிறைவான பணியை அயராத உழைப்பின் மூலம் தமிழர்களுக்குத் துவளாது தொண்டு

செய்யும் தமிழினத்தலைவரின் ஆட்சி அமைகிறது: பேராசிரியர் டாக்டர் ந. சஞ்சீவியின் கனவு நனவாகிறது. ஆட்சிக் கட்டிலில் அமர்ந்த தமிழக முதல்வர் கலைஞரின் தமிழ் நெஞ்சம் பேராசிரியர் ந. சஞ்சீவியை மறக்கவில்லை. சென்னைப் பல்கலைக் கழகத்தில் ந. சஞ்சீவி பணியாற்றிய துறையில் மார்ச்சுத் திங்களில் நடக்கவிருக்கும் "தமிழ் மேம் பாட்டுத் திட்டம்" ஆய்வுக்கலந்தரங்கின்போது, 'சிந்தனை செம்மல்' டாக்டர் ந. சஞ்சீவியின் படத்தை, சங்கத் தமிழை எளிமையாக்கி இனிமையாக்கி வழங்கிய தங்கத் தலைவர் தமிழக முதல்வரின் கையால் திறக்க வேண்டும் என்று முடிவெடுக்கின்றனர். மார்ச்சுத் திங்கள் 27-ம் தேதி தமிழ்ப் பேராசிரியர்களின் தொண்டர்களின் கூட்டம் அணி வகுத்து வெற்றி முரசம் கொட்டிக் கலைஞரை வரவேற் கிறது. பல்கலைக்கழகத்தில் பேராசிரியர் டாக்டர் ந. சஞ்சீவியின் படத்தினைக் கலைஞர் திறந்தார்; பேராசிரியர் வாழ்ந்த தெருவிற்கு 'டாக்டர் சஞ்சீவி தெரு' என்று அறிவித்தார்; சஞ்சீவி பருவதத்தின் சாரலிலே தமிழ் உணர்வை, தமிழர் உணர்வைப் போற்றினார்.

இவ்வாறு பேராசிரியர் ந. சஞ்சீவியைக் கலைஞர் போற்றிய நிகழ்ச்சிகளும், பேராசிரியர் ந. சஞ்சீவி கலைஞரைப் போற்றிய நிகழ்ச்சிகளும் ஏராளம் உண்டு. தமிழர்கள் வாழ்வில் பொற்காலத்தைப் படைக்கும் கலைஞரின் 66-வது ஆண்டு முழுமை பெறும் பிறந்தநாளில் பேராசிரியர் சஞ்சீவி கலைஞரின் திறன்போற்றிய கட்டுரை களை எடுத்துத் தொகுத்து வெளியிடுவதைக் கண்டு மகிழ் கிறேன்; வரவேற்கிறேன். பேராசிரியர் ந. சஞ்சீவி எழுத்துப்புகழ் பரப்பும் இந்த அரிய நூலைத் தங்களது சொந்த செலவில் வெளியிடும் பேராசிரியர் மகள் டாக்டர் எழிலரசி, மருமகன் டாக்டர் பாலசுப்பிரமணியன் முயற்சி வெல்க!

வாழ்க தமிழ்! வாழ்க கலைஞர்!
வளர்க தமிழ்நாடு!

# பொருளடக்கம்

# பேரறிஞர் புகழ் பெரும் கலைஞர்!

1

பேரறிஞர் அண்ணாவிடம் இருந்த பெரும் பண்புகளுள் எல்லாம் தலைசிறந்தது திறமையைப் பாராட்டும் திறம். கொஞ்சம்கூட அழுக்காறு இல்லாத அவர் நெஞ்சத்தில் 'தாழ்வு மனப்பான்மை' எப்போதும் இருந்தது இல்லை; பிறரைப் புகழ்வதால்—போற்றுவதால்—அவர்கள் வளர்ந்து விடுவார்களே என்ற அச்சம் அவருக்கு அணுவளவும் கிடையாது. காரணம் (1) தன்னம்பிக்கை; (2) தனி மரம் தோப்பாகாது என்ற தெளிவு. தன்னை அரசியல் முதலிய துறைகளில் முற்றிலும் சாராதவரிடமும் திறம் கண்டு பாராட்டும் திறம் அவர்க்கு இருந்ததாலேயே அவர் பலர் புகழ் - ஏன்? பகைவர் புகழ் - பரிசினையும் பெற்றார். தன்னை முற்றிலும் சாராதவரிடமே சார்ந்திருக்கும் திறங் களைக் கண்டு சாற்றும்—போற்றும், புலமை நலமும் பண்பு நலமும் அவர்க்கு இருந்தது என்றால் தன்னைச் சார்ந்தவர் களின் தனித் திறமைகளைப் போற்றுவதில் பேரறிஞர் அண்ணா இன்னொருவருக்குத் தம்பி ஆவாரோ? ஒரு சிறந்த இலக்கியத் திறனாய்வு எடுத்துக்காட்டின் வாயிலாக இவ்வுண்மையை உலகறியச் செய்வதே இக்கட்டுரையின் நோக்கம்.

2

பெருங்கலைஞர் - இன்றைய நம் முதல்வர் படிப்படி யாக வளர்ந்தவர்; படித்துப் படித்து வளர்ந்தவர் - 'தம்பி உடையான் படைக்கஞ்சான்' என்னும் பழஞ் சொல்லுக்கு

---

* தென்னகம் அண்ணா பிறந்தநாள் சிறப்பு மலரில் வெளி வந்த கட்டுரை (17-9-1972).

எல்லாத் துறைகளிலும் புத்துரை காண்பவர். இந்திய விடுதலை இயக்க வரலாற்றில் முதல் பெரு மாறுதலை ஏற்படுத்தியவர் திலகர் எனலாம்; அவரை அடுத்து காந்தி அடிகள். இவ்விரு அனைத்திந்தியப் பெருமக்களை அடுத்துத் தமிழக வரலாற்றில் தனி மாறுதல்களை ஏற்படுத்தியவர் தந்தை பெரியார் ஈ. வெ. ரா. அவர் செய்த மாறுதலையும் செப்பனிட்டவர் பேரறிஞர் அண்ணா அவர்களே. அவரை அடியொற்றி அரசியல் பணியும் கலைப்பணியும் செய்யும் ஆற்றல் படைத்தவர் நம் முதல்வர் - டாக்டர் கலைஞர். இவ்வுண்மைக்கு இலக்கியத் துறையில் சிறந்ததோர் எடுத்துக்காட்டாக இருப்பது 'சிலப்பதிகாரம் நாடகக் காப்பியம்' என்னும் நூலாகும். இந்நூலின் ஆங்கில ஆக்கம் இரண்டாவது உலகத் தமிழ் மாநாட்டின்போது வெளி யிடப்பெற்றது. அதற்கோர் அழகிய ஆங்கில முன்னுரையை (9-1-68 இல்) அளித்துள்ளார் பேரறிஞர் அண்ணா. அம் 'முன்னுரையின் தமிழாக்கம் இது' என்ற குறிப்புடன் தமிழ் நூல் காட்சி அளிக்கிறது. அக்குறிப்பால் அத்தமி ழாக்கம் நேரடியாக அண்ணா செய்யவில்லை என்று தோன்றுகிறது. ஆனால் தக்கார் ஒருவரால் -அண்ணாவின் உணர்வுகளுள் ஊறிய ஒருவரால் - அது ஆக்கப்பட்டு அவர் ஒப்புதல் பெற்றிருக்க வேண்டும் என்பதில் ஐயம் இல்லை. மூலத்தை வெல்லும் முத்தமிழ்ச் சுவையோடு அமைந்துள்ள இத்தமிழாக்கத்தின் துணை கொண்டே இப்போது 'பேரறிஞர் புகழ் கலைஞர்' பெருமையைக் காண்போம்.

## 3

பேரறிஞர் அண்ணாவின் தமிழாக்க முன்னுரையில் காணப்படும் உணர்வுகளுள் எல்லாம் தலையாயது அவர் இளங்கோவின் இலக்கியத்தைத் தன் தம்பியின் வழியாக வும் கண்டு காட்டுவதே ஆகும்.

ஆம், பேரறிஞர் அண்ணாவின் முன்னுரையில் இரு பெருங் கூறுகளைக் காணலாம்; ஒன்று, இளங்கோவின்

பெருமை; மற்றொன்று, தன் தம்பி கலைஞரின் தனித் திறமை. இவ்விரண்டுள், இக்கட்டுரையில், பேரறிஞர் அண்ணா தன் தம்பி பெருங்கலைஞரைப் பாராட்டும் திறத்தை மட்டும் பார்ப்போம்.

சிலப்பதிகாரச் சிந்தனையிலேயே நெடுந்தொலைவு சென்றுவிட்ட பேரறிஞர் அண்ணா திடீரென அந் நினைவுகள் தமக்கு உடனடியாகத் தோன்றக் காரணமா யிருந்த கலைஞரின் சிலப்பதிகார உரைநடை நாடக ஆக்கத்தை நினைவு கூர்கிறார். 'பயனிலை'யை இந்த 'எழுவாய்' மொழிகளில் காணலாம் :

'சேரமான் தம்பி தந்த சிலப்பதிகாரத்தை—என் தம்பி கருணாநிதி-தனது வளமிகு செந்தமிழ்ச் சொல்திறத்தால் நாடகமாகத் தருவது பொருத்த மானதே. கருணாநிதியின் தமிழ் ஆளுந்திறன் பாத் திரங்களைப் படைக்கும் உயர் தனி ஆற்றல் ஊரும் உலகும் அறிந்தது; அறிந்து மகிழ்ந்தது; மகிழ்ந்து பாராட்டியது.

அத்திறன் — சிலப்பதிகாரத்தை அவர் நாடக உருவில் ஆக்குவதற்குரிய உரிமையைத் தருகிறது. அக்காவியத்தின் உயர்தரத்தை அப்படியே வைத்துக்கொண்டு சில நிகழ்ச்சிகளை மாற்றியிருக் கிறார். நம்மால் விளக்கமளிக்க முடியாதது போலவும் நமக்குத் தேவையில்லாதது போலவும் தோன்றுகின்ற சம்பவங்கள் சிலவற்றிற்குக் காரண காரியத் தொடர்புடையதும் நம்பத்தக்கதுமான மாற்றங்களைச் செய்திருக்கிறார்.

கருணாநிதி எழுதியுள்ள இந்நாடக நூலில் கிரேக்க வணிகன் என்னும் பாத்திரம் வருகிறது. கோவலனை மாதவி தன் மாளிகைக்கு அழைத்துச் செல்லும் காட்சிக்கு அந்தப் பாத்திரம் ஒரு சாதன மாக - கருவியாக அமைகிறது.

இது கோவலனின் செயலுக்குப் பொருத்த மான விளக்கமாகும் !

கோவலன் மகிழ்ச்சியும் களியாட்டமும் வேண்டி மாதவி வீட்டிற்குச் செல்லவில்லை.

தமிழ்நாட்டின் பெயரைக் காக்க-தமிழ் அணங்கு ஒரு கிரேக்கக் கிழவன் பிடியில் விழாம லிருக்க - கோவலன் செயற்பட்டதாக அக்காட்சி அமைக்கப்பட்டிருக்கிறது !

"தாங்கள் ஏன் ஒரு முறை மாதவியைச் சந்தித்து அடைய முடியாத பொருளைப் பற்றி ஏங்காதே என அறிவுரை கூறி அவள் மனத்தை மாற்றக்கூடாது?"

இது மாதவி இல்லம் போக விரும்பாத கோவலனிடம் கண்ணகி விடுத்த வேண்டுகோள் ! மாதவியின் அழகுதரும் நெறி மயக்கத்தால் எழுந்த உணர்ச்சிப் பிழம்பல்ல — கோவலனை மாதவியிடம் சேர்த்தது.

கோவலன் மாதவியிடம் கலையின் குறை வில்லா நிறையுருவைக் கண்டான் ; வேறொன் றையுமல்ல !

கோவலன் தானே உருவாக்கிக் கொள்ளாத சூழ்நிலைதான் கோவலனை மாதவி இல்லத்திற்கு அழைத்துச் சென்றது.

அவன் அறிவுரை கூற அங்குச் சென்றான். ஆனால் இசைமயமான புதுவாழ்வின் துணைவ னாக அங்கே இருந்து விட்டான்.

ஃ ஃ ஃ

பேரறிஞர் அண்ணா தம் முன்னுரையில் முன் குறிப்பிட்டதுபோலச் சிலப்பதிகாரச் சிந்தனையில் நெடு நேரம் ஈடுபட்டுவிட்டு அச்சிந்தனைகட்கு உடனடிக் காரணமாய் இருந்த கலைஞரின் எழுத்தோவியத்தை எண்ணியதும்—மடை திறந்தாற்போல அவர் மனம் திறந்ததும்—வந்த சொற்களின் முதற்பகுதியைத்தான் இப்போது பார்த்தோம்—அதில் இரு கூறுகள் : (1) பெருங் கலைஞர் சிலப்பதிகாரக் காப்பியத்தை உரைநடை நாடக மாக ஆக்குவதற்குப் பெற்றுள்ள உரிமை—பேரறிஞர் அண்ணாவின் ஆராய்ச்சியில் அந்த உரிமைக்கு உரிய தகுதிகள் (1) தமிழ் ஆளுந்திறன், (2) பாத்திரங்களைப் படைக்கும் உயர்தனி ஆற்றல். இந்த இருதிறனுமே 'ஊரும் உலகமும் அறிந்தது ; அறிந்து மகிழ்ந்தது ; மகிழ்ந்து பாராட்டியது' என்று அந்தாதித் தொடையில் போற்றப் படுகிறது.

இனி, கலைஞர் கதையில் செய்த மாற்றங்கட்கும் காரணம் சொல்கிறார் பேரறிஞர் அண்ணா. அது இது :

1. நம்மால் விளக்கமளிக்க முடியாதது போலவும், நமக்குத் தேவையில்லாதது போலவும் தோன்றுகின்ற சம்பவங்கள் சிலவற்றிற்கு, 1. காரண காரியத் தொடர் புடையதும், 2. நம்பத் தக்கதுமான மாற்றங்களைச் செய்திருக்கிறார்.

பேரறிஞர் அண்ணாவின் சொற்கள் எவ்வளவு அளவை நெறி (Logical) பற்றியன என்பதும் எவ்வளவு பகுப்பாய்வுத் திறம் (Analytical) பற்றியன என்பதும் தெளிவு.

இனி, கலைஞர் கதையில் செய்த முதற்பெரு மாறுதலை- கிரேக்க வணிகன் பாத்திரத்தை - நியாயப்படுத்துகிறார். அதில்தான் எவ்வளவு அறிவு! ஆற்றல்! துருப்புச் சீட்டைத் தூக்கி எறிவது போலத் தானாக மாதவி வீட்டுக்குப் போக விரும்பாத கோவலனை அறிவுரை புகட்டப் போகுமாறு

கண்ணகியே தூண்டுகிறாள் என்று கலைஞர் கூறுவதை எடுத்துக்காட்டி அத்தகைய பாத்திரப் பண்பில் அடியோடு ஈடுபட்டுப் பேசுகிறார் அண்ணா.

இனி, பேரறிஞர் அண்ணா கலைஞரின் கருத்தோவி யத்தைத் திறனாய்வு செய்யும் வகையில் அடுத்துக் காட்டும் எடுத்துக் காட்டைக் காண்போம்; அது வருமாறு:

> இன்னொரு முக்கியமான மாறுதல்; சிலப்பதி காரத்தில் கண்டுள்ள ஒரு நிகழ்ச்சியில் கருணா நிதியால் சிறப்புமிகு முறையில் அமைக்கப்பட்டிருக் கிறது.
>
> சிலப்பதிகாரம் தரும் விளக்கப்படி அரண் மனையின் தலைமைப் பொற்கொல்லர்தான் உண்மையான குற்றவாளி என்பது அறிந்த ஒன்று. இதனால்—இப்பழியால் பொற்கொல்லர் சமுதா யத்தின் சுயமரியாதையே பாதிக்கப்படும் உணர்வு ஏற்படுகிறது.
>
> இளங்கோவடிகளுக்கு அத்தகு உள்நோக்கம் இருந்ததெனக் யாரும் கூறிட முடியாதெனினும் அந்தப் பொற்கொல்லர் சமுதாயம் முழுமையுமே பெரியதொரு வெறுப்பை ஏற்க வேண்டியிருக் கிறது.
>
> இந்த வெறுப்பை—பழியைக் கருணாநிதி துடைத்தார். பல்வேறு சமூகங்களுக்கிடையே யுள்ள நல்லெண்ண—நல்லுறவில் அசைக்க முடி யாத நம்பிக்கை உடையவராதலால் இப்பழியைத் துடைத்திட விரும்பினார். அவரது எழுத்தோவி யத்தில் போற்றத்தகும் முறையில் அந்த நற்பணி யைச் செய்தார்.

பொற்கொல்லர் அல்ல—பாண்டிய நெடுஞ் செழியனின் அரண்மனைக் காவலன் ஒருவன் தான் உண்மையான குற்றவாளி என இந்நூலில் குறிக்கப் படுகிறது.

சமூக நீதிக்காக இந்த மாற்றம் செய்யப் பட்டது. இத்தகைய மாற்றங்களைப் பழம்பெரும் இலக்கியங்களில் செய்வது மிக மிக நியாய மானது; தேவையானது. இந்த மாற்றம் மிகச் சிறந்த நோக்கோடு செய்யப்படுகிறது.

இந்த மாற்றத்தைப் பாராட்டி—வாழ்த்திய வர்கள் பழிக்கூறப்பட்ட அந்தச் சமுதாயத்தினர் மட்டுமல்லர்; பழம்பெரும் இலக்கியங்களினை நவீன முறையில் தருபவர்களும் வாழ்த்தி யுள்ளனர்; பாராட்டியுள்ளனர்.

ஆம், பேரறிஞர் அண்ணா பாரதியின் 'பாஞ்சாலி சபதம்' போன்ற பல நூல்களைப் படித்தவர்தானே! அதனால் பேரறிஞர் அண்ணாவின் புகழுரை முற்றிலும் பொருந்தும். இங்குக் கருதத்தக்க சிறப்பெல்லாம் அப் புகழுரையின் உயிராய் ஒளிரும் ஆய்வுரையே ஆகும். அவ்வாய்வுரையின் பயனாகப் பெருங்கலைஞரின் சமுதாயப் பொதுவுள்ளம்—ஒருவர் செய்த பிழைக்காக ஓரினமே தண்டிக்கப்படுவதைத் தாங்காத உயர்ந்த உள்ளம்—மலை மேல் வைத்த மணி விளக்கு ஆகின்றதல்லவா?

இனி, பேரறிஞர் அண்ணா கதை மாற்றங்களைக் கடந்து இளங்கோ அடிகளும் அவர் தம்பியும் பெரிதும் ஒன்றுபடும் இடத்தை மறுபடியும் சுட்டிக் காட்டுகிறார்.

இந்த மாற்றம் தவிர—இக்காப்பியத்தின் முழு உருவம்-உரைநடையில் பாராட்டத்தகும் வழியில் அமைக்கப்பட்டிருக்கிறது.

சிலப்பதிகாரத்தின் இலக்கிய எழிலோ உருவோ சிதையா வண்ணம் - சிலம்பில் காணும் செந்தமிழ் இனிமை - இளங்கோ தந்த இன்றமிழ் இனிமை- மாற்று குறையாது இந்நூலில் இருப்பது மெச்சத் தகுந்தது !

எடுத்துக்காட்டுகளுடன் இவ்வுண்மையை மெய்ப்பிக்கும் பேரறிஞர் தம் திறனாய்வின் முடிவை முழங்குகிறார்.

நூல் முழுவதும் கருணாநிதி ஒரு காவியப் படைப்பிற்குத் தேவையான செழுஞ் சொல்லோட்டத்தை—சீரிய அழகு அமைப்பை உருவாக்கித் தருகிறார்.

இந் நாடக நூலை வெளிக் கொணர்வதன் மூலம் தம்பி கருணாநிதி தமிழ் இலக்கியத்திற்கு நற்பணி ஆற்றியுள்ளார்.

இந்நூலின் ஆங்கில மொழிபெயர்ப்பைக் கொண்டு வந்ததன் மூலம் சிலப்பதிகாரம் வழியாய் இளங்கோவடிகள் தந்த உணர்வும்—உயர்ந்த செய்தியும் தமிழகத்தை விடப் பெரிதான உலகிற்குப் பரவ வழி ஏற்பட்டிருக்கிறது !

வாழ்க தமிழ் !

வாழ்க தமிழகம் !

இவ்வாறு நிறைவுறும் பேரறிஞர் மதிப்பீட்டால் நம் பெருங்கலைஞர் எழுத்தின் பண்பும் பயனும் இனிது விளங்கும்.

உண்மை—உயர்ந்த-மதிப்பீட்டால், 1. மதிப்பீடு செய்பவர், 2. செய்யப்படுபவர், 3. செய்யப்படும் பொருள் ஆகிய மூன்றுமே உயர்வுறுகின்றன. பேரறிஞர் அண்ணா ஒரு சிறந்த இலக்கியத் திறனாய்வாளர் என்பதற்கும் பெருங்கலைஞர் தம் முதல்வர் பேராற்றல்களை நன்குணர்ந்த பெருமகனார் என்பதற்கும் 'சிலப்பதிகாரம் —நாடகக் காப்பியம்' பெற்ற இச்சிறந்த முன்னுரை பெருஞ் சான்றாகும்.

# தலைவர் கலைஞர் தமிழ் மக்கள் ‘தெய்வம்’

ஐயப் படாஅ தகத்த துணர்வானைத்
தெய்வத்தோ டொப்பக் கொளல்

(குறள். 702)

பல்கலைத் தலைவர்-கலைஞர்-டாக்டர் மு. கருணாநிதி அவர்களை யான் கடந்த கால் நூற்றாண்டுக் காலமாகப் பார்த்தும் படித்தும் கேட்டும், இப்போது அவ்வப்போது - சிறிது பழகியும் அறிவேன்.

யான் உலக உணர்வு - ஏன் ? - பலவுலக அகிலாண்ட (Universal) உணர்வுடையவன். ஆயினும் என் தாய் மொழிக்கும் அம்மொழி வழங்கும் மாநிலத்திற்கும் அம்மொழி பேசும் மக்கட்கும் ஆற்ற வேண்டிய கடமை களை மறக்க முடியாதவன், மறக்கக் கூடாதவன். மனிதக் கடமை — பண்பு - என்பதால். இதற்குக் காரணம் காந்தி அடிகளின் தேசியமும் தெய்வீகமுமே. இதை என் உள்ளத்தில் செயலாக்கம் பெறச் செய்தவர் - இந்திய விடுதலைக்கு (1947) முன்பே - சிலம்புச் செல்வர் ம. பொ. சிவஞானம். சில கருத்து வேறுபாடுகள் இருப் பினும் ம. பொ. சி. யின் இந்த வழிகாட்டலுக்கு என்றும் நன்றியுடையேன்.

எந்த ஒரு தலைசிறந்த கலைஞரையும் - மனிதரையும் போலவே டாக்டர் கலைஞரும் அனைத்துலக - பலவுலக அகிலாண்ட (Universal) உணர்வினரே. இது அவர் தம்

---

* எதிரொலி - கலைஞர் பொதுவாழ்வுப் பொன்விழா மலரில் வெளிவந்த கட்டுரை (1988)

இலக்கியப் படைப்புகளால் சிறப்பாக விளங்கும். ஆயினும் பகுத்தறிவும், பண்பாடும் படைத்த எவராலும் தனிவளத்தைச் சார்ந்த கோடிக்கணக்கான மக்களின் மொழியையும் வாழ்வையும் மறந்து செயல்படுதல் இயலாத ஒன்று. அவ்வாறு செயற்படலும் சிறப்பன்று. அதன் காரணமாகவே அவர் தமிழ் இனத்தின் காவல் கடவுளாய் இன்று இலங்குகிறார். மண்ணாய்-மலையாய் - கடலாய் இருக்கும் எல்லைகளைக் காத்தால் மட்டும் போதாது. எல்லைக் காவல் இனக் காவலுக்கே. அந்தக் காவலும் வரலாற்றின் வற்புறுத்தல்கள் காரணமாகக் கடந்த முந்நூறு ஆண்டுகளில் (சரியாகச் சொன்னால் 1801 முதல்) மானங்காத்த மருது பாண்டியர் வீழ்ந்தது முதல் - இல்லை-துரோகத்தால் வீழ்த்தப்பட்டது முதல் முற்றிலும் அயலார் ஆட்சி காரணமாகவும் பெரிதும் இந்து மத அடிப்படையிலும் ஒரு குடைக் கீழ் அடி(மை)ப்பட்ட பல்வேறு இந்தியத் தேசிய இனங்களில் (Nationalities) ஒன்றான தமிழினத்தைக் காக்க அரசியலாண்மை(Political acuman/Sagacity/Leadership) மிகமிக இன்றியமையாதது. அந்த இன்றியமையாமையே இந்நாள் மாற்றார் மனைச்சான்றும் மனமார ஒப்புக்கொள்ளும் வகையில் எதிரொலி செய்து தலைமை தாங்கிவரும் கலைஞர்.

தலைமைப் பண்பு (Leadership) இயற்கை/பிறவிப் பண்பு; கருவில் அமையும் திரு. முன்வினையை-அதைக் கட்டுவிக்கும் இறைவனை என்னாலும் இப்போது (முற்றிலும் கண்மூடி) நம்புவது முடியாததாகவே உள்ளது. பொதுவுடைமைச் சமுதாயத்தில் வள்ளுவரும் நம்பும் (?!) 'வகுத்தான் வகுத்த வகை' (குறள். 277) இல்லையே! அந்நிலையில் இயற்கைவழி உயிரணுக்களையே (genes) காரணமாக நம்ப வேண்டி உள்ளது. எவ்வாறோ கூட்டல், கழித்தல், பெருக்கல், வகுத்தலால்- பெரிதும் உயிரணுக்கள் வேறுபட்டால் - வீறுபட்டால் தலைமைப் பண்பும் அமைகிறது. ஒரே வழி அதற்குத் துணையாகச் சிறிய அளவிலோ

பெரிய அளவிலோ குடும்பச் சூழல் உதவுகிறது. (அண்மை! நம் கால எடுத்துக்காட்டு ராஜீவ் காந்தி) காலச் சூழலும் சிலரையே பற்றுவதும் பலரைப் பற்றாமல் விடுவதும் விளங் காத விளக்கமே: வள்ளுவரும் சொல்லுவதுபோல் நினைக்கப்படும் (குறள். 279).

பெருந்தலைவர் காமராசருக்கு அடுத்தபடியாகப் பின்னணி (சாதி, செல்வம், குடும்பப் பரம்பரை அல்லது வழிமரபு முதலிய) பலம் ஏதுமில்லா நிலையில் இயற்கை நுண் அறிவுத் திறத்தாலும் ஓயாத உழைப்பாலும் மக்களின்- இனத் தெய்வமாய் உருவானவர் டாக்டர் கலைஞர். இவ்வாறு ஒருவர் உருவாவது அவர் கையிலும் இல்லை; இயற்கையின் கையிலேயே - உறவுடைய பலர் கையிலேயே- உள்ளது எனலாம்,

பெருந்தலைவர் காமராசருக்கும் அருந்தலைவர் கலைஞருக்கும் உள்ள இரு பெரு வேறுபாடுகள் நூலறிவும் நாவன்மையும் (நாவன்மைக்குக் கருத்தாற்றலும் கற்பனை ஆற்றலும் கட்டாயம்). இந்த இரண்டும் டாக்டர் கலைஞருக்குத் தமிழ் மக்கள் செய்த தவத்தால் வாய்த்தமை யால் தலைவர் கலைஞர் மணமுடைய பொன்மலராய் விளங்குகிறார்; மணம் வீசுகிறார். ஆட்சிச் செயலாற்றலில் (Administrative ability skill ) தொண்டார் தொண்டில்- இருவரும் ஒருவரே. நுண்ணறிவும் நூலறிவும் (intelegence / commonsense) இருவரும் ஒருவரே.

திருவள்ளுவர் இரு கண்களெனப் போற்றிய நுண்ணறி வும் நூலறிவும் செயலாற்றலும் கண்டிப்பும் கருணையும் அடக்கமும் அறிவாய்வும் ஒருங்கே படைத்தவர் தலைவர் கலைஞர். இப்பண்புகள் இன்றைக்கும் அவரிடம் வளர்பிறையாய் வளர்ந்து வருவது தமிழினம்-ஏன்? பாரதம் செய்த பெரும்பேறு. இதனை உணராதவர் உலராதவர்!- சரம்!

ஒருமுறைக்கு இருமுறை தலைவர் கலைஞர் முதல்வ ராகாததும் ஒருவகையில் அவருக்கும் நமக்கும் நல்லதே. நம் நாட்டுப் பாமர (mass) போலி (tale) மக்களாட்சியை அது அம்பலப்படுத்துகிறது. 'எதையும் தாங்கும் இதயம்' உடையவர் தலைவர் கலைஞரே என்பதும் தெளிவாகி விட்டது. அத்துடன் கற்பனை கடந்த இராட்சத ஊழலை யும் அரக்க (இராட்சத) மனம் போன போக்கையும் போன எதேச்சதிகாரத்தையும் ஆட்சியையும் தன்னால் வாழ்வு பெற்றவர்களே காட்டிய கயமைகளையும் பொறுத்துக் கொண்டு புன்முறுவல் பூக்கும் கடமை-கண்ணியம்-கட்டுப் பாடு காக்கும் மனித 'தெய்வம்' கலைஞரே என்பதும் தெளிவாகிவிட்டது. நடிப்பால் (காதல், பொய்க்கத்தி, குத்துச் சண்டைக் காட்சிகளால்) பாமர மக்களை - கிராமப் பெண்களை - மயக்கிய - ஒருவரின் தன்னல வல்லாள (சர்வாதிகார) வாழ்க்கை ஒரு சில நன்மை-நயப்பு-நடிப்பு களை உடையதாயினும் எவ்வளவு பயங்கர மோசடியானது என்பது உலகமே சிரிக்கும்- இல்லை- நடுங்கும் வகையில் உண்மையாகி விட்டது. (எம். ஜி. ஆரிடமே யான் நேரில் சொல்லியன அறிந்த திருமதி ஜானகி இச்சொற்களைப் பொறுத்திடல் போற்றத்தக்கது) கொடுமையிலும்கொடுமை தாமாகவே கலைக்கப்பட வேண்டிய அந்த அ.தி.மு.க. அரசியல் கட்சி நஞ்சுதடவிய கத்தரிக்கோல் போல் ஆகி எஞ்சியிருக்கும் தன்னையும் தமிழினத்தின் நற்பண்பு களையும் கத்தரித்தெறிய முற்படுவதுதான்! அடித்த கொள்ளை போதாதா?

தலைவர் கலைஞரின் வெற்றியும் தோல்வியும் தமிழினத்தின் வெற்றி தோல்வியே ஆகும். நீர்க்கும் நுரையுண்டு ; பூவுக்கும் புல்லிதழ் உண்டு. மனிதன் என்ன? —மகாத்மாவும் 'இமாலயத் தவறு' செய்தல் இயற்கை. 'செங்கோல்' இதழில் இராமன் செய்த தவறுகளைச் சிலம்புச் செல்வர் எழுதி வருகிறாரே ! இந்த உண்மை உணராமல் தமிழ் மக்கள் நடிப்புக்கும் பணத்துக்கும்

மயங்கிப் புத்தாண்டுகளைப் பாழ்படுத்தி விட்டனரே ! ஒரு பாடத்தை இப்போதேனும் (தலைவர் கலைஞர் உள்ளிட்டோரும்) கற்க வேண்டும். சிறு கருத்து வேறு பாடுகட்காகச் சிங்கத்தை வெறுத்து சிறு நரியிடம் சிக்கக் கூடாது; ஒட்டகத்துக்கு இடங்கொடுத்துப் பின்னர் ஒப்பாரி யிடக் கூடாது ! செந்நீர் தண்ணீரிலும் வலுவானது (Blood is thicker)

கலைக்கும் காசுக்கும் மயங்கிப் பொருளல்லாதாரைப் பொருளாளர் ஆக்கக்கூடாது. இரத்தம் என்ற இனப் பார்வை எப்போதும் வேண்டும்; இல்லையேல் களை பயிராகும், கழுத்தருக்கும். 'பழிமலைந்து எய்தும் ஆக்கம்' (குறள்.657) பாழ் என்பதையும் உத்தமர் காந்திவழி வந்த காங்கிரசும், அண்ணா வழிவந்த நாவலரு மேனும் நன்குணர வேண்டும். இதற்குமேல் என் போன்றார் சொல்ல என்ன இருக்கிறது ?

எளிமையாக - இனிமையாக - ஏழையர் தொண்டில் - எல்லோரும் மகிழ்ந்து மதிக்கப் பொதுவாழ்வின் பொன் விழாவைக் கொண்டாடும் தலைவர் கலைஞர் தம் பொது வாழ்வின் மணிவிழாவைக் கொண்டாடும் முன் மன்பதையே மகிழும்படி தமிழ் மக்கள் புத்தாண்டுக் காலத்திற்கு அவரைக் கட்சி வேறுபாடின்றித் தமிழக முதல்வராக்கி மகிழ்ந்து பயன்பெறல் வேண்டும். நாட்டு நலங்கருதி - நடுநிலையோடு - தலைவர்கள் இதைச் சிந்தித்தால் சிக்க லின்றிச் செய்யலாம். நமக்காகக் கலைஞர் இனியும் வாழார்; தமிழர்க்காக சமநீதிக்காகவே வாழ்வார்; இது காலத்தின் கட்டளை - பட்டறிவின் பாடம்.

ஒரு தலைவரின் - ஒரு கட்சியின் - வெற்றி அந்தக் கட்சியில் உறுப்பினர்கள் முதல்நிலை (அல்லது முன் னோடித்) தலைவர்களை மட்டும் பொறுத்தது இல்லை ; இவர்கள் பங்கெல்லாம் கால் பங்குதான். ஆனால் -

அதனால் - அளவால் கால் ($\frac{1}{4}$) எனினும் ஆற்றலாலும் கால் (காலூன்றல்) ஆகும். எனவேதான் மயக்கங்களுள் கொடிய மயக்கமாகிய குடும்ப மயக்கத்துக்குத் தலைவர்கள் சிறிதும் இரையாகக் கூடாது. அடுத்து, கண்ட வரும் - தம் குடும்பத்தாராலேயே கூட - எவர் மீது சொல்லப்படும் குறை - குற்றத்தையும் நேரில் ஆய்வதே நேர்மை. கால் மூன்றிலும் அதைப் பயன்படுத்தி முட்டியி லிருந்து மூளை வரை எல்லா உறுப்புகளும் ஒன்றாக (ஒருங் கிணைந்து) நன்றாக இயங்கினாலே நல்வாழ்வு! முட்டி முதலான மூளை ஈறான உறுப்புகளே கட்சிக்காரர்கள் அல்லாத பரந்துபட்ட சமூகம்! வேறு வகையாகச் சொன்னால் தனியொரு உடல்நலத்துக்கு மண்ணிலும் விண்ணிலும் நிறைந்திருக்கும் ஒவ்வோர் அணுவின் உதவியும் இன்றியமையாதது. எனவே சமூக நன்மதிப்பே கட்சியின் இன்றியமையாத் தேவை. இதை மனதில் வைத்துக் கொண்டே தலைவர்களும் தொண்டர்களும் செயற்படல் வேண்டும். திராவிட மனோன்மணியம் கற்பிக்கும் மணி மொழியும் இதுவே. சிறப்பாக ஒவ்வொரு கட்சியாளனும் தனது சொல்லும் செயலும் தலைவரையும் கட்சியையும் ஆக்கும் அழிக்கும் என்று அறிந்து உணர்ந்து செயற்படல் வேண்டும். இந்தக் குறிக்கோளுக்கு மனிதக் கணனியாக விளங்கும் (human computer) டாக்டர் கலைஞர் தலைமையில் இயங்கும் தி. மு. க. சிறந்த எடுத்துக் காட் டாய் இருக்கிறது எனலாம். இதில் நெகிழ்வு - தொய்வு ஏற்படாமல் தி. மு. க. வும் தி. மு. க. வுக்குள் அடங்கும் மு. க. வும் இடையீடின்றிக் கண்காணித்தல் வேண்டும்.

இனி எல்லோரும் ஆர்வத்துடனும் நம்பிக்கையுடனும் எதிர்நோக்குவது கடமை செய்வோர் தொகை கடலாய்ப் பெருக வேண்டும். கால்காசும் கைமாறு வேண்டாமல் இன்னொன்று போல் தி.மு.க. மீண்டும் பதவி பெற்றதும் செய்ய வேண்டிய பெருங்கடமை தமிழகத்தில் தமிழ்வழிக் கல்வி கற்றவர்க்கும் சாதி ஒழிப்பு செய்தவர்க்கும் மேல்

அதனால் - அளவால் கால் ($\frac{1}{4}$) எனினும் ஆற்றலாலும் கால் (காலூன்றல்) ஆகும். எனவேதான் மயக்கங்களுள் கொடிய மயக்கமாகிய குடும்ப மயக்கத்துக்குத் தலைவர்கள் சிறிதும் இரையாகக் கூடாது. அடுத்து, கண்ட வரும் - தம் குடும்பத்தாராலேயே கூட - எவர் மீது சொல்லப்படும் குறை - குற்றத்தையும் நேரில் ஆய்வதே நேர்மை. கால் முன்றிலும் அதைப் பயன்படுத்தி முட்டியி லிருந்து மூளை வரை எல்லா உறுப்புகளும் ஒன்றாக (ஒருங் கிணைந்து) நன்றாக இயங்கினாலே நல்வாழ்வு! முட்டி முதலான மூளை ஈறான உறுப்புகளே கட்சிக்காரர்கள் அல்லாத பரந்துபட்ட சமூகம்! வேறு வகையாகச் சொன்னால் தனியொரு உடல்நலத்துக்கு மண்ணிலும் விண்ணிலும் நிறைந்திருக்கும் ஒவ்வோர் அணுவின் உதவியும் இன்றியமையாதது. எனவே சமூக நன்மதிப்பே கட்சியின் இன்றியமையாத் தேவை. இதை மனதில் வைத்துக் கொண்டே தலைவர்களும் தொண்டர்களும் செயற்படல் வேண்டும். திராவிட மனோன்மணியம் கற்பிக்கும் மணி மொழியும் இதுவே. சிறப்பாக ஒவ்வொரு கட்சியாளனும் தனது சொல்லும் செயலும் தலைவரையும் கட்சியையும் ஆக்கும் அழிக்கும் என்று அறிந்து உணர்ந்து செயற்படல் வேண்டும். இந்தக் குறிக்கோளுக்கு மனிதக் கணனியாக விளங்கும் (human computer) டாக்டர் கலைஞர் தலைமையில் இயங்கும் தி. மு. க. சிறந்த எடுத்துக் காட் டாய் இருக்கிறது எனலாம். இதில் நெகிழ்வு - தொய்வு ஏற்படாமல் தி. மு. க. வும் தி. மு. க. வுக்குள் அடங்கும் மு. க. வும் இடையீடின்றிக் கண்காணித்தல் வேண்டும்.

இனி எல்லோரும் ஆர்வத்துடனும் நம்பிக்கையுடனும் எதிர்நோக்குவது கடமை செய்வோர் தொகை கடலாய்ப் பெருக வேண்டும். கால்காசும் கைமாறு வேண்டாமல் இன்னொன்று போல் தி.மு.க. மீண்டும் பதவி பெற்றதும் செய்ய வேண்டிய பெருங்கடமை தமிழகத்தில் தமிழ்வழிக் கல்வி கற்றவர்க்கும் சாதி ஒழிப்பு செய்தவர்க்கும் மேல்

கலைஞருடன் டாக்டர் ந. சஞ்சீவி



# கன்னித் தமிழர் மானம் காத்த தலைவர்

கண்ணாரக் காண நமக்கு ஒரு கலைஞர் கிடைத்திருக்கிறார். அவர் எழுத்துக் கலைஞர் மட்டும் அல்லர், எண்ணக் கலைஞர். நாடகக் கலைஞர் மட்டும் அல்லர், நாடாட்சிக் கலைஞர்; கதைக் கலைஞர் மட்டும் அல்லர், கருத்துக் கலைஞர்.

ஃ ஃ ஃ

நம் கலைஞரின் நல்வெற்றி ஏழை எளியோரின் இணையிலா வெற்றி ; உணர்வின்! உழைப்பின் ஒரு பெரு வெற்றி; நாவன்மையின், பாவன்மையின், ஏடாண்மையின், நனியுயர் வெற்றி.

ஃ ஃ ஃ

நம் கலைஞர் பட்டதாரி அல்லர் ; ஆனால் பட்டதாரிகளுக்குப் பட்டமளிப்பு விழா உரையாற்றும் அறிவாண்மை பெற்றவர். நம் கலைஞர் வழிவழிச் செல்வர் அல்லர்; ஆனால் செல்வர்கள் எல்லோரையும் நல்வழிக்குக் கொண்டு வரத் தெரிந்த வல்லாயர்.

ஃ ஃ ஃ

"பேரறிஞர் அண்ணா போய் விட்டாரே! கழகம் என்னாகும்? நாடு என்னாகும்?" என்று கலங்கியவர் பலர். அவர் கலக்கத்தைக் கலைத்தவர் கலைஞர். அவர் திறம் வாழ்க! வெல்க!

ஃ ஃ ஃ

---

* தென்னகம் 3-6-1971 (கலைஞர் பிறந்த நாள் மலர்)

3223—3

கலைஞர் இன்று பெற்றிருக்கும் வெற்றி அரசியல் வரலாறு அறிந்தவர்கட்கு மகிழ்ச்சி தருவதுதான் ; ஆனால் அந்த அரசியல் வெற்றியை அறிவு வெற்றியாக—ஆக்க வேலை வெற்றியாக—மாற்றி வருவதே கலைஞரின் மாபெருஞ் சிறப்பு. இந்த வகையில் இமாலய வெற்றிகளைக் கொட்டிக் குவிக்க நம் கலைஞரினும் அறிவாற்றல் படைத்தவர் இந்திய அரசியலிலேயே வேறு எவரும் இல்லை என்றும் துணிந்து கூறலாம். திருமதி இந்திரா காந்தியும் கலைஞர் பெருந்தகையும் இணைந்து செயல்பட்டால் இன்றைய இந்தியா உலக நாடுகளின் இலட்சியப் பூங்காவாக மாறல் உறுதி. கடந்த பொதுத் தேர்தலில் இந்திரா அம்மையார் கலைஞர் கைகளில் பெற்ற கைம்மாறு கருதா உதவிகளை எழுமையிலும் மறவாது கலைஞரின் கைகளைப் பலப்படுத்த வேண்டியது நாடாளும் பிரதமராகிய அவருடைய நல்லாட்சிக்கு இன்றியமையாதது.

ஃ ஃ ஃ

தொன்றுதொட்டு இன்றுவரை தமிழகம் அடைந்துள்ள இழிவுகட்கு எல்லாம் காரணம் புறநானூற்றுப் புலவர் புகல்வது போல, நாடாள்வோரிடம் 'நல்ல போலவும் நயவ போலவும்' நடித்து வயிறு வளர்க்கும் கூட்டம் புறங்கூறிப் பொய்த்துயிர் வாழ்தலே ஆகும். இவ்வுண்மையை நன்குணர்ந்து ஒன்றுபட்ட தமிழகத்தின் ஒரு பெரு முதல்வர் நடுநிலை பிறழாது நாடாண்டு வருவது அவரின் நயத்தக்க நாகரிகமாகும். கட்சியாளர்கட்கு இரக்கம் காட்ட வேண்டிய கட்டாயத்திலும் உழைப்பையும் தகுதியையும் திறமையையும் மதித்துவரும் அவர் மாண்பு மாற்றார்க்கும் மகிழ்ச்சி தருவதாகும்.

ஃ ஃ ஃ

கட்சியாளரே அல்லராயினும் நடுநிலை நல்லாரையும்—கடமைத் தமிழரையும்—அவர் காத்துவரும் திறம் கைகுவித்து வணங்கத்தக்கக்கது. அரசியலாளர் கல்விபற்றி

மதிப்பீடு செய்யும் உரிமை பெற்றுள்ள இந்த நாட்டில் கல்வியாளருக்கும் அரசியல் பற்றி மதிப்பீடு செய்யும் உரிமையை வழங்குதல் வாயிலாக நம் கலைஞர் 'சமன் பாட்டுச் சான்றோர்' என்னும் 'புரட்சிப் புதுப்புகழ்' எய்தி வருகிறார்.

ஃ ஃ ஃ

வையகத்தில் சங்க காலச் சமுதாயம் ஒப்புவமை இல்லாத பொற்காலச் சமுதாயமாய்ப் போற்றப்படுவதற் கெல்லாம் காரணம் அஞ்சா நெஞ்சாண்மை படைத்த அருந்தமிழ்ப் புலவோர் சொல்லை மதித்து வாழ்ந்த மன்னர் வாழ்ந்தமையே ஆகும். 'செவி கைக்கும் சொற்பொறுக்கும்' செம்மை சான்ற சங்க கால ஆட்சியின் மாட்சியே. இந்த நாட்டில்—இந்தத் தலை முறையில்—மறு பிறப்பும்—மறு வாழ்வும் கொள்ளச் செய்து வருபவர் நம் கலைஞர் ஒருவரே. இது 'உண்மை; வெறும் புகழ்ச்சி இல்லை !'

ஃ ஃ ஃ

எந்த நாட்டில் கட்சிகளுக்கு ஆட்படாது கருத்துகளுக்கு மட்டுமே ஆட்படும் கலைஞர்களும் கருத்தாளர்களும் ஆதரிக்கப்படுகின்றனரோ அந்த நாடு அமரவாழ்வு எய்தும் என்பது பேரறிஞர் அண்ணாவின் பெருங் கொள்கை. அக்கொள்கை நடைமுறையாக நல்வழி காட்டும் கலைஞர்க்கு அறிவுலகம் அழியாப் புகழ் வழங்கும்.

ஃ ஃ ஃ

கலைஞர் ஆட்சியில் கல்வி உலகம் பெற்ற இருபெரும் பரிசுகள் திரு. நெ. து. சுந்தரவடிவேலும் டாக்டர் மு. வரதராசனாரும் துணை வேந்தரானமையே ஆகும். முன்னவர் கடமையால்—கல்வித் தமிழால்—தமிழர் உள்ளத்தைக் கொள்ளை கொண்டவர்; பின்னவர் கதை

யால் கதைத் தமிழால்—தமிழர் நெஞ்சங்களில் தனியிடம் பெற்றவர். இவ்விருவரையும் துணை வேந்தராக்கிய பெருஞ்செயல் இன்பத் தமிழகத்தின் உயர் கல்வியின் மறுமலர்ச்சிக்கு நம் கலைஞர் தந்த 'நல்விழிகள்' என்று என்றென்றும் போற்றப்படல் உறுதி.

ஃ ஃ ஃ

கலைஞர் வளர்க்கும் தமிழ் கற்கண்டுத் தமிழ். இத்தமிழ் வளர்க்கும் கைக்கு இந்த ஆண்டு தமிழ் எழுத்தாளர் சங்கம் கேடயம் தர முடிவெடுத்திருப்பது மெத்த பொருத்தம். பேரறிஞர் அண்ணாவுக்குக் கேடயம் வழங்கியதை அடுத்து, கலைஞருக்கு வழங்குவதும் கடவுள் பொருத்தம்.

ஃ ஃ ஃ

கலைஞரின் எழுத்தோவியங்களும் பேச்சோவியங்களும் ஆண்டுக்கொரு தொகுப்பாகவேனும் வெளிவர ஏற்பாடுகள் செய்வதே நற்றமிழ் உலகம் அவர்க்கு ஆற்றவல்ல எளிய நன்றிக் கடனாகும்.

ஃ ஃ ஃ

இன்னும் இரண்டு ஆண்டுகளில் நம் அருமைத் தமிழக முதல்வரின்—கலைஞரின் பொன்விழா வர இருக்கிறது. அதை ஒட்டியேனும் தமிழ் மானம் காத்த—தமிழர் மானம் காத்த கலைஞர் தலைவருக்குச் செமினி சதுக்கத்தில் பொன் விழாப் பொற்சிலை எடுப்பது பொருத்தமாகும். கலைஞரின் பொன்விழாவைத் தமிழ் நாட்டின் தேசியப் பெருவிழாவாகக் கொண்டாடுவதற்குத் திட்டமிடும் வகையிலேயோ இந்த ஆண்டுவிழா அமைவதும் இன்றியமையாதது. கலைஞரின் பொன்விழாவை ஒட்டி—அண்ணாமலை — மதுரை — சென்னை ஆகிய பல்கலைக் கழகங்களும் அவருக்கு 'டாக்டர்' பட்டம் வழங்கிச் சிறப்புச் செய்யவேண்டும் என்பதும் என் பேரவா. உயர் கல்வித் துறையிலும் இலவசக் கல்வியை ஊட்டிய கண்மணிக்கு —அண்ணன் தயங்கியதையும் தயங்காமல் செய்த அருந்தம்பிக்கு— இந்தத் தமிழ் நாட்டு மக்கள் ஒவ்வொருவரும் ஏழேழ்

பிறப்புக்கும் பல்லாற்றானும் நன்றி பாராட்டக் கடமைப் பட்டுள்ளார்கள்.

> 'எந்நன்றி கொன்றார்க்கும் உய்வுண்டாம்; உய்வில்லை
> செய்நன்றி கொன்ற மகற்கு'

ஃ ஃ ஃ

கலைஞர் எண்ணியது எண்ணமாகும்; சொல்லியது சொல்லாகும்; செய்தது செயலாகும்; வாழ்வாகும்.

இந்த ஆண்டு கலைஞரின் பிறந்த நாள் பிறக்கும் அதே நாளில் தொல்காப்பியர் தோன்றிய நாட்டில்—மாவட்டத்தில்—முதல் அனைத்திந்திய திராவிட மொழியியல் மாநாடு கூடுவது தெய்வப் பொருத்தம். இதன் பயனாகவும் கலைஞர் ஆட்சியில் திராவிட அரசியல் ஒருமைப்பாடும் சாதி சமயச் சழக்கற்ற திராவிட நாகரிக மறுமலர்ச்சியும் ஏற்படுதல் திண்ணம்.

கலைஞரின் கை கன்னித் தமிழ் வளர்க்கும் கை; ஏழை எளியோர் கண்ணீர் துடைக்கும் கை; வயிற்றுக்காக நடிக்கும் புல்லரினும் வாய்மைக்காக இடிக்கும் புலவரைப் போற்றும் கை; உண்மைக்கும் உழைப்புக்கும் ஒழுக்கத்துக்கும் உயர்வு தரும் கை; உண்மையும் உணர்ச்சியும் நிறைந்த ஒளிவு மறைவு அற்ற உத்தமரைக் காக்கும் கை; அழுக்காறு அகற்றும் கை; அருட் கடல் பெருக்கும் கை; அறிஞர் வழியைக் கலைஞர் வழியாக—அறிவைக் கலையாக —மாற்றும் கை.

அந்தக் கையே—தமிழ்த் தாயின் தனிப்பெருங்கை அந்தக் கையே—செந்தமிழ் நாடு முழுவதுக்குமான செங்குட்டுவன் செங்கை. அந்தக் கையின் வாழ்வே அறிவின் வாழ்வு! அந்தக் கையின் வெற்றியே அருளின் வெற்றி! நம் கலைஞர்—நாட்டின் மாண்புமிகு முதல்வர்—வாழ்க! வெல்க!!

# தகுதி காக்கும் தயாளர்

தாய் தெய்வம்; தந்தை தெய்வம்; ஆசிரியர் தெய்வம்; அரசரும் தெய்வம்—இது பழைய மரபு. என்றாலும் இது இன்றும் காக்கவேண்டிய இனிய மரபு. அந்த வகையில் நாலரைக்கோடித் தமிழ் மக்களின் நல் வாழ்வுக்குப் பொறுப்பேற்றிருக்கும் நம் மாண்புமிகு முதல்வர் அவர்களும் என் தெய்வம்—இல்லை—நம் தெய்வம். 'திருவுடை மன்னரைக் காணின் திருமாலைக் கண்டேன்' என்னும் திருவாக்கு தெய்வவாக்கு என்போரும் இவ் வுண்மையை ஒப்புவர்.

எனவே, மாண்புமிகு தமிழக முதல்வரை நாவார மனமார வாழ்த்துவதும் வணங்குவதும் நம்மைக் காக்கும் தமிழ்த் தெய்வத்தை—தமிழர் தெய்வத்தை வாழ்த்து வதும் வணங்குவதும் போன்றதே ஆகும். மாண்புமிகு முதல்வர் அவர்கட்கு என்னைப் பிடிக்கவில்லை என்றாலும் அவர் எனக்குப் பிடிக்காமல் இருக்கக்கூடாது. காரணம் அவர் என் தாய்நாட்டில் தமிழ் முதல்வர்; தனி முதல்வர். என் வாழ்வால் தமிழுக்கும் தமிழருக்கும் ஏற்படக் கூடிய வளம் எள்முனை—காரணம் நான் வெறும் ஆராய்ச்சி யாளன்; ஆனால், என் தாய்நாட்டின்—தமிழ்நாட்டின் முதல்வரால் தமிழுக்கும் தமிழருக்கும் ஏற்படக்கூடிய நல் வளம்—பெருவளம்—இமய முனை. காரணம் அவர் பெரும் அரசியலாளர். எள் முனை—இமயமுனை—எது பெரிது? சின்னக் குழந்தையும் விடை சொல்லும்!

என்னினும் நான்கே ஆண்டுகள் மூத்தவர் என் முதல்வர். தமிழ்நாட்டில் வாழும் உலகம் போற்றும் அரசியல் மேதை கள் ஓரிருவரின் வயதில் ஏறத்தாழ சிறிது பாதியே உடையவர். ஆனால் கலைஞர் இந்த நாட்டின் முதல்வர்!

ஒப்புயர்ந்த தமிழ் முதல்வர்! ஒன்றாரும் ஒப்பும் சொல்லாற்றல் — செயலாற்றல் ஒருங்கிணைந்த ஒருபெரு முதல்வர். என்ன காரணம்? ஊழ் வினையா? சூழ்நிலையா? முன்னதைப் பகுத்தறிவு பழிக்கும்; பின்னதைச் சமயம் மறுக்கும். சூழ்நிலையும் யாரால் உருவாகிறது? என் விடை: ஊழ்நிலை இல்லையாயினும் உழைப்பு நிலை. 'கருவிலே அமைந்த திரு' யான் மறுக்கவில்லை. அஞ்சுகத்தின் அருள்! ஆமாம். ஆனால் அதை ஒப்பினால் அங்கும் ஊழ்நிலை உதிக்கும்! எனவே, கலைஞர் காலம் நமக்குத் தந்த பரிசு எனப் பகரலாமா? எவ்வாறாயினும் தமக்குப் பிறவியிலேயே அமைந்த பேராற்றல்களைக் கூர்தீட்டிக் கொண்டவர்— சீராட்டிக் கொண்டவர் நம் கலைஞர். இதை எவரும் மறக்க—மறுக்க முடியாது. நாளும் வளரும் நம் கலைஞரின் வாழ்க்கையை ஊடுருவிப்பார்ப்பவர்க்கு இவ்வுண்மை விளங்காமல் போகாது. பதவி ஏற ஏறப் புகழ் ஏற ஏற—அவர் பண்புகளும் ஏற்றம் பெறுகின்றன! அவர் எழுத்து—பேச்சு—எண்ணம்—எல்லாம் ஏற்றம் பெறுகின்றன. அவர் உழைப்பு—உணர்வு இரண்டும் உயர்கின்றன! வெள்ளத்தனைய மலர் நீட்டம் போல் அவர் உயர்வுக்கு உள்ளம் உயர்வதைக் காண—கண்டு புதுக்குறள் எழுத—ஒரு புது வள்ளுவர் இன்று இல்லையே!

மக்கள் தீர்ப்பு தெய்வத்தின் தீர்ப்பு! எப்படித்தான் பொருத்தமாகப் பட்டங்கள் பொருந்துகின்றனவோ? அறிஞர்—கலைஞர்— பேராசிரியர்.

கலைஞர் கையெழுத்திலேயே கலை மணக்கும் என்றால் அவர் இந் நாட்டிற்கு எழுதும் தலையெழுத்திலா கலை மணக்காது.

இந்த நாட்டு—இந்திய நாட்டு—உலக நாட்டு முதல்வர்களுள் ஒருவர் கவிதை—கதை—கட்டுரை—நாடகம்—திரை உரை இத்தனையும் எழுத வல்லவர்—மாற்றாரும் மருள மேடைத் தமிழ் மகுடி வாசிக்க வல்லவர்—எந்த அரசியல் சாணக்கியரின் 'அவுரங்கசீப் அணைப்பிலிருந்தும் தப்பிய

சிவாஜி, என வெளிவர வல்லவர்—தன் தாய் மொழிக்காகவும் தாய் நாட்டிற்காகவும் உயிரும் கொடுக்கத் துணியும் உத்தமர்—ஒருவர் உண்டென்றால் அவர் மாண்புமிகு நம் கலைஞர்—டாக்டர் அவர்களே !

எதையும் எவரிடமும் எதிர்பார்க்கும் இயல்பைப் பெரிதும் பிறவியிலேயே பெறாத ஒருவன் எண்ணிப் பார்க்கிறேன்—கலைஞர் பெருந்தகையிடம் நாம் காணும் உயர்வுகளுள் எல்லாம் உயர்ந்தது எது? எண்ணி எண்ணிப் பார்க்கிறேன்—தெளிவின்பத்திற்காக — அதனினும் பேரின்பம் எனக்கு இல்லை என்பதால்.

ஒரே ஒரு விடைதான் திரும்பத் திரும்பக் கிடைக்கிறது: தகுதி காக்கும் தகுதி.

ஆம். கலைஞர் பெருந்தகை தகுதி காக்கும் தகுதியாளர்—தயாளர்.

தன் தகுதி காக்கிறார்; தன் தாய் மொழியின்—தாய் நாட்டின் தகுதி காக்கிறார்; தன் தாய் மொழியை—தாய் நாட்டைக் காப்பவரைக் காக்கிறார். உழைப்பாளரை—உண்மையாளரை—ஒழுக்கத்தாரை—தன் விருப்பு வெறுப்புகளைத் தள்ளி வைத்துவிட்டுத் தயவுடன் காக்கிறார்; பொதுநலம் போற்றி, எதிரி என்று மருள்வதில்லை; நண்பர் என்று மயங்குவதில்லை. தன் தோட்டத்து எட்டியாயினும் வெட்டுவார்; மாற்றான் தோட்டத்து மல்லிகையாயினும் மணம் பார்ப்பார்.

ஆம். தகுதியின் தொகுதி அவர்!
வாழ்க டாக்டர் கலைஞர் அவர்கள்!

# நீதிக்கட்சியின் சேதி

## 1

அண்மையில் வெளிவந்த சென்னைப் பல்கலைக் கழகத்தின் 44 நூல்கள் வெளியீட்டு விழாவில் மாண்புமிகு முதல்வர்—டாக்டர்—கலைஞர் அவர்கள் புதுமைத் துணிவு நிறைந்த ஒரு கருத்தைப் புலப்படுத்தினார்கள். அது நம் நாட்டின்—தம் கால—அரசியல் கட்சிகளையும் நாம் ஆராய வேண்டும் என்பதாகும். இத்தகைய ஆராய்ச்சிகளே— திறனாய்வுகளே—நடப்பு அரசியலை மேலும் நலம்பெறச் செய்யும் என்னும் பேருண்மை இதனால் புது வாழ்வு பெறும். முதல்வரின் முத்தாய்ப்பான கருத்தை முழு மனதுடன் போற்றும் முதல் முயற்சியாகவே இவ்வெளிய ஆய்வுக் கட்டுரையை அமைக்க அளாவுகிறேன்.

## 2

தமிழ்நாட்டின் தனிச் சிறப்பு அது இந்தியாவின் பிற பகுதிகளைப் போல ஆரியத்துக்கு முழு அடிமை ஆகாமையே ஆகும். இந்தத் தனித் திராவிடத் தன்மைக்குத் தந்தை தொல்காப்பியரே. அவர் வடமொழி ஒலியை அப்படியே தமிழில் வழங்கக் கூடாது; தமிழாக்கியே தமிழில் வழங்க வேண்டும் என்று இட்ட தொல்லாணையே — நல் லாணையே—தனித் தமிழ் வெறியை இன்றளவும் வாழ் வித்து வருகிறது. இத்தனித் தமிழ்மொழி—பண்பாட்டுப் பற்றுக்குப் பல சிறந்த சான்றுகளைச் சங்க நூல்களிலும்— சிலம்பிலும், மேகலையிலும்—திருமுறைகளிலும், பிரபந்தங் களிலும்—வீர சைவ நூல்களிலும்—மறைமலை அடிகளார் நூல்களிலும் காணலாம். இவ்வாறு இலக்கிய—சமய— எல்லையில் மட்டுமே பெரிதும் இருந்த தனித்தமிழ்

வளர்ச்சிக்குப் புதுவாழ்வு தரப்பிறந்த அரசியல் இயக்கமே நீதிக்கட்சி இயக்கம். அரசியல் கருவி கொண்டன்றி மொழியையோ மொழிவழிப்பட்ட இனத்தையோ காக்க இயலாது என்று தெளிவின் விளைவே நீதிக் கட்சியின் இயக்கம்.

## 3

இனி, இவ்வியக்கத்தின் தோற்றத்தையும் அது நிகழ்த்திய மாற்றங்களையும் வரலாற்றுக் கண்கொண்டு ஆராய்வோம். நீதிக்கட்சி 1916-இல் தென்னிந்திய நலவுரிமைச் சங்கம் என்ற பெயரில் (இந்திய தேசிய காங்கிரசு தோன்றிய 31 ஆண்டுகட்குப் பின்) பிறந்தது. இக்கட்சியின் தாயும் தந்தையுமாய் விளங்கியோர் அறிஞர் (டாக்டர்) நாயரும். அருளாளர்—வெள்ளுடை வேந்தர்—சர். தியாகராயரும். இக்கட்சி தோன்றிய நான்கே ஆண்டுகளில் 1920-இல் அந் நாளைய மாநிலத்தில் இரட்டை ஆட்சி அடிப்படையில் பொதுத் தேர்தல் நடைபெற்றது. அத்தேர்தலில் நீதிக் கட்சி பெரு வெற்றி பெற்றுப் பேரும் புகழும் எய்தியது. இந்நிலை இந்திய தேசிய காங்கிரசு தோன்றி 31 ஆண்டு கட்குப்பின் இருந்தது ஆழ்ந்து ஆராயத்தக்கது. மூன்றாண்டு ஆட்சிக்குப்பின் மீண்டும் 1923-இல் நடந்த தேர்தலில் நீதிக் கட்சியே பெருவெற்றி கண்டது. (இந்நாளில் இந்திய அரசியலில் காங்கிரசில் காந்தி அடிகளும் தலைமை பெற்று விட்டார் என்பதும் எண்ணத் தக்கது). இந்த நீதிக்கட்சி ஆட்சியில்தான் முழு அளவில் சென்னை ஆந்திரம் அண்ணா மலைப் பல்கலைக் கழகச் சட்டங்கள் நிறைவேறின. 1926-இல் இந்து அறநிலையப் பாதுகாப்புச் சட்டமும் நிறைவேறியது.

1926-ஆம் ஆண்டில் நடைபெற்ற மூன்றாவது பொதுத் தேர்தலில் நீதிக்கட்சி நேரடிப் பெரும்பான்மை பலம் பெறாவிடினும் சூழ்நிலைகள் காரணமாக அதுவே ஆட்சிப் பொறுப்பை ஏற்றது. நான்காண்டு நல்லாட்சிக்குப்பின்

1930-இல் நடைபெற்ற நான்காவது பொதுத் தேர்தலினும் நீதிக்கட்சியே பெரும்பான்மை பலம் பெற்றது. ஏழாண்டுக் குப்பின் 1937-இல் நடைபெற்ற பொதுத்தேர்தலில் 'நீதிக் கட்சிக்கு ஒரு சில இடங்களே கிடைத்தன. காங்கிரசே வென்றது. முப்பதாண்டுக் காலத்திற்குப்பின் இன்று காலச் சக்கரம் மறுபடியும் தலைகீழாகச் சுழன்று விட்டதைக் காண்றோம். இப்போது காங்கிரசுக்கு ஒரு சில இடங்களே கிடைத்தன என்னும் நிலை; நீதிக்கட்சியின் தீவிரப் பாராளுமன்ற வடிவமாகிய தி. மு. க. ஈடிணையற்ற வெற்றி கண்டு தமிழகத்தைத் தன்குடைக் கீழ்கொண்டு வந்து விட்டது. இதுபற்றி நீதிக்கட்சியின் முதுபெருந் தலைவராகிய சர். பி. டி. இராசனின் இதயத்துடிப்பு நிறைந்த மொழிகள் வருமாறு:

> 1937-ல் நீதிக் கட்சிக்குக் கிடைத்த தோல்வி யைவிட 1967-ல் காங்கிரசிற்குக் கிடைத்த தோல்வி மிகவும் பரிதாபமானது. சென்னைப் பாராளுமன்றத் தொகுதியில் அதற்குக் கடைசி அடி விழுந்தது. பெரிய காங்கிரஸ் தலைவர்கள் அனைவரும் ஒன்று திரண்டு முயன்றும் இளைஞ ரான முரசொலிமாறனைத் தோற்கடிக்க முடிய வில்லை

1937-இல் இராசாசியின் தலைமையில் முதல் காங்கிரசு அரசு சென்னை மாநிலத்திற்கு ஏற்பட்டது. இராசாசியின் கட்டாய இந்தித் திணிப்புக் கொள்கையால் அது ஆட்டங் கண்டது. உலகப் போர் மூண்டதும் விடுதலை இயக்கம் காரணமாக இராசாசி பதவியை விட்டார். கட்டாய இந்தித் திட்டமே ஒழிந்தது.

1940-இல் திருவாரூரில் நடைபெற்ற கட்சி மாநாட்டில் தந்தை பெரியார் ஈ. வெ. ரா. நீதிக் கட்சியின் தலை வராகத் தேர்ந்தெடுக்கப்பட்டார். தந்தை பெரியார் தனிப் பெரும் காங்கிரசுத் தலைவராக இருந்தவர். அக்கட்சியின்

எதிர்ப்பாளராய் மாறி நீதிக் கட்சியின் தலைமைப் பொறுப்பை ஏற்றது அக்கட்சியின் வரலாற்றிலேயே மிகப் பெரிய திருப்பத்தை ஏற்படுத்தியது எனலாம் கனவிலும் பதவிப் பற்று அற்ற தந்தை பெரியார் நீதிக் கட்சியை மிட்டா—மிராசுதார் கட்சி என்ற நிலையிலிருந்துவிடுவித்து, மக்கள் இயக்கமாக—இனப்போர் இயக்கமாக மாற்ற எண்ணியது இயற்கை ; சரியும் கூட. இதன் பயனாக 1944-ல் சேலத்தில் நீதிக்கட்சி திராவிடக் கழகமாக மாறியது. இப்பேர் மாற்றத்துக்கும்—பேர் வாயிலாகப் பெருங் கொள்கை மாற்றத்துக்கும் வழி செய்த தலைவர் தந்தை பெரியாருக்கு வாகை சூடித்தந்த தளபதி பேரறிஞர் அண்ணா எனலாம். எனக்குத் தெரிந்த வகையில் நாற்பது களில் அரும்புகட்ட ஆரம்பித்த பேரறிஞர் அண்ணாவின் அரசியல் வாழ்வு சேலம் மாநாட்டிலேதான் போதாகியது எனலாம்.

1946-இல் நடைபெற்ற பொதுத் தேர்தலில் நீதிக்கட்சி பங்கு பெறவில்லை. ஆறாண்டுக் காலம் காங்கிரசு ஆட்சி நடந்தது—சென்னை மாநிலத்தில், உலகப் போருக்குப் பின்—உள்நாட்டு விடுதலைப் போருக்குப்பின்—ஏற்படும் எல்லாச் சிக்கல்களும் ஏற்பட்டன. உணவுப் பற்றாக்குறை, மொழி இன மாநில—மாவட்ட சாதிப் பூசல்கள் கிளம்பின.

பொதுவுடைமையாளர் கை வலுத்தது. இந்நிலையில் 1952-இல் நடைபெற்ற பொது தேர்தலில் தென்னக—தமிழக அரசியலில் புதுத் திருப்பம் ஏற்பட்டது. அதன் விளைவாகக் காங்கிரசு ஆட்டம் கண்டது. அந்நிலையை நன்றாகப் பயன்படுத்திக் கொண்டார் பேரறிஞர் அண்ணா. திராவிடப் பிரிவினைக் கொள்கையை ஒப்புக்கொள் வோரை—ஒப்புக் கொண்டு கையெழுத்துப் போடுவோரை —தாம் புதிதாகத் தொடங்கிய தி.மு.க. ஆதரிக்கும் என்றார், துணிந்து. தம்முடைய சிந்தனைச் சிறப்பாலும்—அரசியல் தொலை நோக்காலும்—பாராளுமன்ற வாழ்வில் கொண்ட பற்றாலும் பேரறிஞர் அண்ணா தம்முடைய—

தம் தம்பிகளுடைய — அறிவாற்றலையும் — உழைப்பாற்றலையும்—சொல்லாற்றலையும்—செயலாற்றலையும் நம்பித் தம் கொள்கையை ஆதரிப்போரைத் தாம் ஆதரிக்க எடுத்த முடிவு—துணிவு மிக்க தொலைநோக்கு நிறைந்த—கட்சி வளர்ச்சி—கருத்து வளர்ச்சிப் பணியாகும். நாட்டு மக்கள் கருத்தின் ஆழமறிய பேரறிஞர் செய்த அடக்கமும் ஆண்மையும் நிறைந்த பெரு முயற்சியே அது ஆகும். இதன் பயனாகத் தி.மு.க. நாடாளுமன்ற நன்னெறியில் தன் வலக் காலைப் பலமாக ஊன்றியது எனப் போற்றலாம்.

1952-பொதுத் தேர்தல்கள் முடிந்ததும் சென்னை சட்டமன்றத்தில் எந்த ஒருகட்சிக்கும் பெரும்பான்மை பலம் இல்லை. காங்கிரசுக்குள்ளே ஏற்பட்ட மொழி—இன—சாதிப் பூசல்கள் அக்கட்சியை! உருக்குலைத்து விட்டன. 1952 - லேயே— இந்திய விடுதலை இயக்கம் முடிந்த பத்தாண்டிலேயே காங்கிரசுக்கு இக்கதி நேர்ந்தது இரங்கத்தக்கதுதான்—ஆனால் பல்வேறு காரணங்களால் அது தவிர்க்க முடியாதது. இந்நிலையில் வேண்டா வெறுப்பாய் — பார்ப்பன எதிர்ப்பில் — தந்தை பெரியார் வளர்த்த தன்மான உணர்வில் இதற்குள் ஊறிவிட்ட காங்கிரசு கட்சியினரே—பதுங்கும் புலிகளாக மாறி—இராசாசியிடம் நாட்டாட்சியினை ஒப்படைத்தனர். முன்னர் கட்டாய இந்தித் திணிப்பால் ஏற்பட்ட நிலையை இம்முறை இராசாசி குலக்கல்வித் திட்டத்தால் உண்டு பண்ணினார் ; ஓய்வு பெற்றார் !

இந்நிலையில் இம்முறையும் காங்கிரசுக்கு ஏற்பட்ட தோல்வி இராசாசியாலேயே—அவர் தம் ஆரிய மனப் பான்மையாலேயே—என்பது மட்டும் ஆழ்ந்து நினைக்கத் தக்கது.

இந்நிலையில், 1. திராவிட இயக்கம், தீவினைப் பயனால் இரு பிளவாகிக் கிடந்தது; 2. பார்ப்பன எதிர்ப் புணர்ச்சியைத் தென்னக காங்கிரசே—சிறப்பாகத் தமிழ்

நாடு காங்கிரசே மேற்கொண்டது. ஆந்திரம் பிரிந்தது ; கன்னடப் பகுதிகள் பிரிந்தன ; கேரளப் பகுதிகள் பிரிந்தன ; ஏறத்தாழ இன்றைய தமிழகம் அமைந்தது. இந்நிலையில் தந்தை பெரியார் நேரடியாகவும் பேரறிஞர் அண்ணா மறைமுகமாகவும் தந்த ஆதரவைப் பயன்படுத்திக் கொண்டு காமராசர் நாடாளும் பொறுப்பை உறுதியாகப் பிடித்துக் கொண்டார்.

1757-ல் நடைபெற்ற பொதுத் தேர்தலில் முதன் முதலில் தி.மு.க நேரடியாகக் கலந்து கொண்டது. இத் தேர்தலில் அது 15 இடங்களை மட்டுமே பிடிக்க முடிந்தது. சட்டமன்றத்தில் தி.மு.க. கட்சித் தலைவராய்ப் பேரறிஞர் அண்ணா விளங்கினார். இத்தேர்தலில் பெரிய விந்தை நீதி கட்சியின் ஒரே தலைவரான சர் பி.டி. இராசன் தோற்றார் - அக்கட்சியின் பெயரால் நின்று. இதிலிருந்து நீதிக் கட்சியின் தீவிர வடிவமாகிய தி.மு.க.வே மக்கள் மன்றத்தில் செல்வாக்குப் பெறத் தொடங்கியது என்பது தெளிவாகும். ஆயினும் தந்தை பெரியோரின் தனிப் பெரும் ஆதரவைப் பெற்றிருந்தமையாலும் ஒப்பற்றப் பொதுவாழ்வு ஒழுக்கத் தூய்மையாலும் பெருந்தலைவர் காமராசர் இட்டது சட்டமாய் இருந்தது தமிழ்நாட்டில்— பதினைந்தாண்டுக் காலம் !

1926-ல் நடைபெற்ற பொதுத் தேர்தலில் தி. மு. க. தலைவர்கள் குறிபார்த்து சுடப்பட்டார்கள். அதன் விளை வாகப் பேரறிஞர் அண்ணா, பேராசிரியர் அன்பழகன் முதலியோர் வெற்றி வாய்ப்பை இழந்தனர். ஆனால் தி. மு. க. பலம் சட்டமன்றத்தில் 15-லிருந்து 52 ஆக உயர்ந்தது. இது தி. மு. க. செல்வாக்கு ஏறுமுகமாதலை எண்பிக்கும். ஆனால் இந்நிலையைக் காங்கிரஸ் உணர்ந்து செயல்படத் தவறியது. சிறப்பாக 1967 பொதுத் தேர் தலுக்கு முன் ஆட்சிக் கலைவல்ல பெரும் தலைவர் திரு. பக்தவத்சலம் தீவினைப் பயனாக மாணவர் கிளர்ச்சியின்போதும் அரிசிப்பற்றாக் குறையின்போதும்

நடந்துகொண்ட முறையாலேயே காங்கிரசாட்சி கவிழ்ந்தது எனலாம். பொதுவாக வெளிப்படையான தீவிர தமிழுணர்ச்சியும் ஏழை மக்கள்பால் உண்மையாகச் செயல் வழிப்பட்ட இரக்கமும் இல்லாப் போக்கே காங்கிரசின் வீழ்ச்சியை உறுதிப்படுத்திற்று எனலாம். இதன் விளைவாகவும் தி. மு. க. திராவிடக் கழகப் பெயரால் முதல் சில ஆண்டுகளிலும் பின் தன் பெயராலும் இடையீடின்றிச் செய்து வந்த கால் நூற்றாண்டுக்கு மேற்பட்ட காங்கிரஸ் எதிர்ப்புக் கருத்துப் பரப்பாலும் (பிரச்சாரத்தாலும்) 15 - 52 ஆகி 1967-ல் 150 இடங்களைக் கைப்பற்றியது. இருபதாண்டுக்காலம் காங்கிரஸ் இருந்த இடத்தில் தி. மு. க. வும் தி. மு. க. இருந்த இடத்தில் காங்கிரசும் அமர்ந்தன. ஆம், இடம்மாறின. இந்தத் தலைகீழ்நிலை ஒருவகையில் நீதிக்கட்சியின் தீவிர வடிவத்தின் வெற்றியே; தெளிவாகச் சொன்னால் நீதிக்கட்சியால் கனவிலும் காண முடியாத வெற்றி இதுவெனலாம்.

காரணம், 1. தி. மு. க. வெற்றியின் விளைவாக (காங்கிரசுக்கு எதிராக இராசாசியின் ஆதரவு இருந்தும்) ஒரு பார்ப்பனர் கூட இல்லாத அமைச்சரவை முதன் முதலாக இந்திய வரலாற்றில்—தமிழ வரலாற்றில் அமைந்தது. 2. இந்தத் தேர்தலில் இந்தியத் தலைவர்களுக்குள்ளேயே மிக முதியவராகிய இராசாசி பேரறிஞர் அண்ணாவின் அருமை நண்பராகவும்—இந்தி எதிர்ப்பில் முன்னணி வீரராகவும் தோற்றம் தந்தார்; 3. காமராசரையும் காங்கிரசையும் கவிழ்க்கும் உள்நோக்குடன் எழுந்திருக்கக்கூடிய இந்தச் சாணக்கியத்தைப் பேரறிஞர் அண்ணா மிகத் திறமையாக ஜீரணித்தார்.

தம்மிடைய 'சாணக்கியம்' தி. மு. க. விடம் பலிக்காது எனத் தெரிந்த இராசாசி மெல்ல மெல்லத் தன் வடிவத்தில் காட்சி அளிக்கலானார்.

இதை உணர்த்த தமிழ் மக்கள்—ஏழை எளிய மக்கள்—1971-இல் கலைஞர் தலைமையில் ஒன்று திரண்டனர். சாதி—கல்விச் செருக்குகட்குச் சாவுமணி அடித்தனர். தி. மு. க., பேரறிஞர் அண்ணாவும் இல்லாத பேரவல நிலையில்—இராசாசியும் காமராசரும் கூட்டுச் சேர்ந்த இக்கட்டான நிலையில்—தி. மு. க.வை அரியணையில் வைத்த மாணவ சமுதாயமும் ஒரு சிறிது பிளவுபட்டுப் போன நிலையில்—முன் எப்போதும் காணா வகையில் ஒரு சில மாத ஏற்பாடுகளில் பெற்ற வெற்றி ஈடு இணையில்லாப் பெரு வெற்றியாகும். இந்த வெற்றி தமிழ்மொழியும் பார்ப்பனர் அல்லாத சமுதாயமும் ஏழை எளியோரும் பெற்ற 'இமய' வெற்றி. இதற்காகத் தி. மு. க. தந்த ஒரே பலி மயிலைத் தொகுதியில் ம. பொ. சி. இதுகாறும் கூறிய வற்றால் நீதிக்கட்சியின் சேதி (1) தென்னிந்திய நலவுரிமை என்பதும், (2) அதன் தீவிர வடிவங்களே தி. க. வும் தி. மு. க.வும் என்பதும், (3) தி. மு. க.வின் வெற்றி அது பாராளுமன்றத் துறைக்குப் பண்பட்ட அரசியல் பேரறிஞர் அண்ணாவால் திருப்பப்பட்டதால் வந்த பயனே என்பதும், (4) பெரியாரும் பேரறிஞரும் வளர்த்த தன்மானத் திராவிட இயக்கம் தற்போது இறுதி எதிர்ப்புகளை முறியடித்துத் தமிழ்வேள்—டாக்டர்—கலைஞர் முதல்வர் அவர்கள் கையில் உறுதியாக ஒப்படைக்கப்பட்டுள்ளது என்பதும் (அதிகமான்) கையில் (அவ்வை தந்த) நெல்லிக் கனியென விளங்கும்.

கலைஞருடன் டாக்டர் ந. சஞ்சீவி



# கலைஞர்—ஒரு கவிஞர்

*இச்சாதாரணன்*
*புவியாள வந்தாலே பொறுப்பதில்லையென்னும்போது*
*கவியாளவும் வந்துவிட்டால் என்கதிதான் எங்கே ?*
*அவிசொரிந்து ஆயிரம் வேள்விகள் செய்வோன்*
*அந்நாள் ஆள்வோன்*
*கவிதெரிந்து ஆயிரம் பாடல்கள் புனைவோன்*
*இந்நாள் ஆள்வோன் (110)*

ஃ ஃ ஃ

*பலவரிகள் நானேதான் பாடி விட்டேன்......*
*— இது*
*பதவியிலே உள்ள மோகமல்ல;*
*பாட்டினிலே உள்ள மோகமென்பேன் ......... (118)*

ஃ ஃ ஃ

*ஏடெடுத்தேன் எழுதிமுடித்தேன் என்றே*
*என் வழக்கம் இதுவரை (84)*
*(கவியரங்கில் கலைஞர், 1971)*

(1)

நம் முதல்வர்—கவிஞர் முதலாம் கவிஞர்—முதல்வர். ஆம். ஈராயிரம் ஆண்டுத் தமிழக வரலாற்றில் ஒன்றுபட்ட தமிழகத்தின் முதல் முதல்வர்—கவிஞரும், கவிஞர்—முதல் வரும் அவரே. சிறுகதை, நாவல், நாடகம், கடிதம், கவிதை, திரை, பேச்சு ஆகிய கலைகளில் வல்ல ஒருவரை முதன்முதல் முதல்வராகப் பெற்றிருக்கும் பெருமையும் நம் தமிழகத்திற்கே உண்டு எனலாம்.

---

* சென்னைப் பல்கலைக் கழக வெளியீடான இந்திய விடுதலையும் தமிழ் இலக்கியமும்'' என்னும் புத்தகத்தில் வெளிவந்த கட்டுரை (1974)

'கவியரங்கில் கலைஞர்' (1971) என்னும் தலைப்பை ஏற்றுள்ள கவிதைத் தொகுப்பை வகை தொகை செய்து வளம் கண்டால் விளங்கும் வாய்மைகள் பற்பல. அவற்றுள், தலையாய சிலவற்றை மட்டும் ஈண்டுக் கருதுவோம்.

முதலாவது மொழிப்பற்று. இது இல்லா நிலையில் உணர்ச்சி மிக்க கவிதைகள் ஒரு மொழியில் உருவாதல் அரிது. எனவே, அவ்வுண்மைக்கான சான்றுகளைப் பட்டியல் செய்து பார்ப்போம்.

## பட்டியல் 1

1. அருமை மிகு செந்தமிழ் (5)
2. இனிய தமிழ் (5) ஒ. நோ. 36 (131); 41 (144]
3. சந்தத் தமிழ் (7)
4. தங்கக் குன்றே ! தமிழே ! தாயே ! (7)
5. பகைவர்க்குத் தாழாமல்
   படைகண்டு வீழாமல்
   பல்லூழி வாழ்கின்ற தமிழ் (8)
6. பழந்தமிழ் (10)
7. தேன் தமிழ் (13) ஒ. நோ. 12 (20, 156); 48 (171)
8. தமிழ் மணம் (15)
9. செந்தமிழ் (16, 22)
10. வீணைத் தமிழ் (17, 29)
11. முத்தமிழ் (17, 147)
12. ஏலத்தின் மணம் வீசும் தமிழ்ச்சொல் (20)
    ஒ. நோ. 39 (137)
13. தமிழ்த்தேன் (20, 156)
14. ஆவேசத் தமிழ் மாரி (23)
15. ஆணிப்பொன் தமிழ் (25)
16. முத்துத் தமிழ் (27) ஒ. நோ. 32 (122)
17. முருகுத் தமிழ் (27)
18. .................... தமிழ்ப் பூவாரம் (28)
19. தேனே ! கனியே ! தினையே ! அமுதே !

ஊனே ! உயிரே ! தமிழே ! தாயே !
வணக்கம் சொன்னேன் வாழ்க நன்று ! (43)

20. தமிழாறு (44)
21. தமிழ்த்திரு (70, 169)
22. பைந்தமிழ், பைந்தமிழ்ச் செல்வம் (70, 139)
23. சுடர் வழங்கத் தமிழிருக்கச் சோர்வுதான் மேவிடுமோ ? (71)
24. அடலேறு மொழித் தமிழே ! — இன்பக்
கடலேறு மலைத் தமிழே ! — நீ என்
உடலேறி உயிரேறி வாழ்விக்கின்றாய் ; வணங்கு கின்றேன் (71)
25. பைந்தமிழ்த்தேர் (75)
26. சிந்துத் தமிழ் (77)
27. தித்திக்கும் தமிழ் (79)
28. உரித்த சுளைத் தமிழ் (83)
29. ஆட்சி மொழித் தமிழ் (88)
30. வளமலியும் தமிழ் (88)
31. தண்ணிலவாம் தமிழன்னை (91)
32. முத்தனைய தமிழ் (122)
33. வண்ண மணித்தமிழ் (122)
34. ........................மக்கள்
தூவிய மலர்மலைமேல் மாத்தமிழாள் நடந்துவர (125)
35. அழகு தமிழ் (126)
36. இன் தமிழ் (131)
37. கூராய்த் தமிழ் (133)
38. அன்று பார்த்த இளமையுடன் இருக்கின்ற தமிழ் (135)
39. ஏலம் போல் மணக்கின்ற இன்தமிழ் (137)
40. ஞாலம் பெய் தமிழ்மறை (137)
41. இன்பங் கொழித்திருக்கும் செந்தமிழ் (144)
42. சங்கத் தமிழ் (17)

43. ................................தமிழ்
அன்னை மடி சுகம் அளிக்க (147) ஒ. நோ. 46, 51
(165, 166, 167, 744)
44. தெள்ளு தமிழ் (154)
45. வண்ணத் தமிழ் (165)
46. அன்னைத் தமிழ் (165, 166, 167)
47. பயிற்று மொழி தமிழ் (168)
48. தேன்கொண்ட தமிழ் (171)
49. கவின் தமிழ் (169)
50. தமிழ்த்தாய் (174)
51. ஊன்று கோலாகத் தமிழ் (176) ஒ. நோ. (131)
52. ஈராயிரம் ஆண்டின் முன்னும் இன்றுபோல் இளையவளாய் இருந்திட்ட தமிழாம் அன்னை (182)
ஒ. நோ. 38 (135)

(பிறை வளைவுள் இருக்கும் எண் பக்க எண் ; பிற, வரிசை எண் ; ஒ.நோ. ஒப்பு நோக்கு)

தம் தாய்மொழியாம் தமிழைக் கலைஞர் போற்றும் சொற்களையும் சொற்றொடர்களையும் வகை தொகை செய்து வளங்கண்டாலே (பிண்டத்துள் அண்டத்தைக் காண்பது போல்) அவர் ஓர் அரிய பெரிய கவிஞர் என்பது விளங்கும். என்றாலும் மேலே காட்டிய மேற்கோள்களை மேலும் பாகுபடுத்திப் பின்வரும் பட்டியலிட்டுப் பார்க்கலாம்.

## பட்டியல் 2

### 1. வாழ்வியற் பண்புகள் (32)

அருமை 1
இனிமை 2, 24, 36, 41
வீரம், முதுமை 5
பழமை 6
மணம் 8

*செம்மை 9*
*முக்கூறு 11*
*ஆவேசம் 14*
*முருகு 17*
*பசுமை 22, 25*
*திரு, செல்வம் 21*
*சுடர் 23, 139*
*இன்பம் 24, 36*
*வாழ்வித்தல் 51*
*இசைமை 26, 33*
*எளிமை 28*
*தித்திப்பு 27*
*ஆட்சி 29*
*வளம் 30*
*தாய்மை 43, 46, 50, 52*
*வண்ணம் 45*
*பெருமை 34*
*பயிற்சி 47*
*மக்கள் மதிப்பு 34*
*அழகு 33, 35*
*கூர்மை 37*
*இளமை 38, 52*
*பொதுமை, அருள் 40*
*தெளிவு 44*
*உறுதிபயத்தல் 51*

**2. இயற்கைப் பொருள்கள் (6)**

*குன்று 4*
*மாரி 14*
*ஆறு 10*
*கடல் 24*
*மலை 24*
*நிலவு 31*

**3.** நவமணிப் பொருள்கள் (2)

*முத்து 32*
*மணி 33*

**4.** திண்மப் பொருள் (*1*)
*தங்கம் 4 ; ஆணிப்பொன் 15*

**5.** விலங்குப் பொருள் (*1*)
*அடலேறு 24*

**6.** தானியப் பொருள் (*1*)
*திணை 19*

*7.* கனிப் பொருள் (*1*)
*கனி 19, உரித்த சுளை 28*

*8.* மணப் பொருள் (*1*)
*ஏலம் 12, 39*

*9.* மலர்ப் பொருள் (*1*)
*பூ 18*

*10.* சுவைப் பொருள் (*1*)
*தேன் 7, 13, 19, 48*

*11.* இசைப் பண்புகள் (*2*)
*சந்தம் 3*
*சிந்து 25*

*12.* இசைப் பொருள் (*1*)
*வீணை 10*

*13.* கைவினைக் கலைப் பொருள் (*1*)
*தேர் 25*

*14.* உடற் பொருள் (*1*)
*ஊன் 19*

*15.* உயிர்ப் பொருள் (*1*)
*உயிர் 19*

16. இலக்கியச் சிறப்பு (1)
சங்கம் 42

17. தெய்வப் பொருள் (1)
அமுது 19

18. உறவுப் பெயர் (1)
தாய் 4, 19, 31, 43, 46, 51

பொருள்களை ஒட்டியுள்ள எண்கள் பட்டியல் 1-இல் உள்ள வரிசை எண்).

(3)

இவ் வகைதொகையால் கலைஞர் எத்தகைய கவிஞர் என்பது எளிதாகவும் இனிதாகவும் விளங்கும். முதலாவதாக அவருடைய சொற்களிலேயே சொன்னால் அவர் ஒரு கருத்துக் கவிஞர் (ப.97)— எண்ணக் கவிஞர் (ப. 122). இது அவர் 32 பண்புகளின் அடிப்படையில் இன்பத் தமிழைப் போற்றுவதால் விளங்கும். அதிலும் அவர் தமிழ் கூரியது (வ. 37) என்றும், ஊன்றுகோல் தன்மை (வ. 51) உடையது என்றும் குறிப்பிடல் அருமை பெருமைக்குரியதாகும். வீணையின் இசையும் (வ. 50) ஏலத்தின் மணமும் (வ. 12) புதியன, இனியன.

பண்புகட்கு அடுத்த நிலையில்—பாவலர் முதல்வரைக் கவர்வது இயற்கையே ஆகும். இவ்வகையில் தமிழின் அருள், நிலைகுலையா ஆண்மை, ஓட்டம், வளம், பரப்பு, தன்மை முதலியன அவரைப் பெரிதும் கவர்ந்துள்ளமை காணத்தக்கது. ஓரிடத்தில் மழை ஆவேசத்தின் (வ. 14) அறிகுறியாக இருத்தல் கருதிப் புது மகிழ்வு கொள்ளலாம். இனி, இயற்கையை அடுத்துக் கலைஞரைக் கவர்வது இயற்கை விளை பொருள்கள்.

அவற்றுள் உயிருள் பொருள்களுள் விலங்கு (வ. 5) தானியம் (வ. 6), கனி (வ. 7), மணம் (வ. 8), மலர் (வ. 9), சுவை (வ. 10) வகைப் பொருள்கள் இடம்

பெற்றுள்ளன. ஏலம் (வ. 8), மணம் சுவை இரண்டும் தருவது. தேனின் (வ.3. 10) இடம் தனி; இவற்றை அடுத்து இசைப் பண்புகளும் இசை கைவினைக் கலைப் பொருள் களும் (வ.13) உடலுயிர்ப் பொருள்களும் (வ. 14, 15), இலக்கியச் சிறப்புகளும் (வ. 15), தெய்வப் பொருளும் (வ. 17), உறவுப் பெயரும் (வ. 18) இடம் பெற்றுள்ளன.

தமிழின் இலக்கியச் சிறப்பாகச் சங்கச் சால்பும் இசைச் சிறப்பாகச் சந்தமும் சிந்தும் சிறப்பிக்கப்படுகின்றன. உடலுயிர்ப் பொருள்களாக இவைகளே போற்றப்படு கின்றன. தெய்விகப் பொருளில் அமுதும் பெருமை பெறுகிறது. உறவு முறைப் பெயர்களுள் தாய்க்கே தனியிடம்— சிறப்பிடம் இருப்பது கலைஞரின் வாழ்வோடு பொருந்தியிருக்கும் வாய்மைப் பண்பை — தூய்மைப் பண்பை நிலை நாட்டுவதாகும்.

இத்தகு வகை தொகை ஆராய்ச்சியால் தமிழிலக்கியப் பரப்புள் வேறு எந்த ஒரு புலவரும் இந்த அளவிற்குப் பைந் தமிழின் பல்வளத்தையும் — பல்திறனையும் ஒருசேரப் பாடியுள்ளார் என்று எண்ண இடமில்லாமல் இருக்கிறது.

(4)

கலைஞர் காட்டும் தமிழின் வாழ்வியற் பண்புகளாகிய அருமை, இனிமை, வீரம், முதுமை, பழமை, மணம், செம்மை, முக்கூறு, ஆவேசம், முருகு, பசுமை, திரு, சுடர், இன்பம், வாழ்வித்தல், இசைமை, எளிமை, தித்திப்பு, ஆட்சிவளம், தூய்மை, வண்ணம், பெருமை, பயிற்சி, மக்கள் மதிப்பு, அழகு, கூர்மை, இளமை, பொதுமை, அருள், தெளிவு, உறுதிபயத்தல் ஆகிய 32 பண்புகளும் கலைஞர் கவிதையிலேயே — ஏன்? தமிழ்த்தாய் பற்றிய அவர்தம் புகழுரைகளிலேயே காணப்படலே இன்பத்துள் இன்பம் பயப்பதாகும். இது ‘விரிப்பின் பெருகும்; தொகுப் பின் எஞ்சும்.’

இனி ஓர் நல்ல இலக்கியத்தில் ஊறிக் கிடக்கும்—ஊடுருவிக்கிடக்கும் இயல்புகளுள் தலையாயவற்றை ஒரு சில எடுத்துக்காட்டுகளுடனேயே கண்டு களிப்போம்.

1. வளர்ச்சி - உருவம்

கவிதையின் உயிர் உணர்ச்சி; உள்ளம் பொருள்; உடல் உருவம். இம் மூன்றும் இணைந்து அமைந்தாலே வாழ்க்கை—இன்பம். கலைஞர் கவிதைகளில் உயிருக்கும் உள்ளத்துக்கும் பற்றாக்குறை இல்லை. ஆனால் உடலுக்கு?........ கவிதையின் உடல் உருவ வளம் அமைவது யாப்பறிவாலேயே ஆகும். ஆனால் இதைத் தாம் பெறவில்லை என்பதை எவ்வளவோ துயரத்துடன் கலைஞரே திரும்பத் திரும்பச் சொல்லும்போது (6, 36, 48, 70, 89, 90, 137-8) நம்மை அறியாத பரிவுணர்ச்சியே அவர்பால் பற்றுகிறது. இதை எண்ணும்போது அண்மையில் சிலம்புச் செல்வர் ம. பொ. சி. அவர்கள் நம் கலைஞர் உடல்—உள்ளம் பற்றிச் செய்த ஒரு மதிப்பீடுதான் நினைவுக்கு வருகிறது.

> கலைஞரை நேரில் கண்டால், அவர்—நோஞ்சான் உடம்பினர்தான்! அவர் இரவு பகலென்று பாராமல்உழைப்பதைப் பார்த்தால், இவர் உடம்பென்ன கல்லோ, இரும்போ என்று கருதி வியப்புற வேண்டியிருக்கிறது
>
> (செங்கோல் 3—6—1973)

கலைஞரின் கவிதைகளில் உணர்ச்சியும் உருவமும் ஒன்றுபட்டும் இருக்கும் என்பதற்குச் சிறந்ததோர் எடுத்துக் காட்டு இயற்சீர்களாலேயே இயன்ற பின்வரும் வரிகள் :

> **தேனே ! கனியே ! தினையே ! அமுதே !**
> **ஊனே ! உயிரே ! தமிழே ! தாயே !**
> **வணக்கம் சொன்னேன் வாழ்க நன்று ! (43)**

கலைஞரின் கவிதைகளில் உள்ள வரிப் பிளப்புகள்—அமைப்புகள் பற்றிய என் கருத்து: அவை நாடகத் திரைக் கலையின்—தமிழின் பழக்கத் தாக்குதலாக இருக்கக்கூடும்

என்பதுதான். இப் பண்பின் காரணமாகவே கலைஞர் கவிதைகளைத் தொட்டால் போதும் அவை விட்டால் போதும் என்னும் வகையில் நம்மை 'அமுக்குப்பிடி போட்டு விடுகின்றன.

## 2. உவமை – உருவகம் – கற்பனை

ஐந்திலக்கணத்துள் எழுத்து, சொல், யாப்பு மூன்றும் இயைந்தால் உணர்ச்சியும் உருவமும் கிடைத்து விடும். பொருள் பொது அணிகளுள் அணியது—அடிப்படையானது உவமை. உவமையின் சுருங்கிய வடிவமே உருவகம். எனவேதான் பழந்தமிழ் இலக்கணம் தொல்காப்பியம் அணியியல் என்னாது உவமவியல் எனவே ஓதுகிறது. இவ்வகையில்,

### பட்டியல் 3

வரிசை எண்

7. தேன் தமிழ்
10. வீணைத் தமிழ்
13. தமிழ்த்தேன்
15. ஆணிப்பொன் தமிழ்
16. முத்தமிழ்
17. முருகுத் தமிழ்
18. தமிழ்ப் பூவாரம்
19. தேனே! கனியே! தினையே! அமுதே!
    ஊனே! உயிரே! தமிழே! தாயே!
20. தமிழாறு
24. அடலேறு மொழித் தமிழே!—இன்பக்
    கடலேறு மலைத் தமிழே!
25. பைந்தமிழ்த் தேர்
28. உரித்த சுளைத் தமிழ்
31. தண்ணிலவாம் தமிழன்னை
32. முத்தனைய தமிழ்

33. வண்ணமணித் தமிழ்
39. ஏலம்போல் மணக்கின்ற இன்தமிழ்
ஒ. நோ. 12
40. அன்னைத் தமிழ்
(எண்கள் பட்டியல் 1-இல் உள்ள வரிசை எண்)

எனக் கால்நூறு உவமை-உருவகங்கள் காணக்கிடக் கின்றன. 52 தமிழ்ப் புகழ் மேற்கொள்களுள் பாதிக்கு உவமைப் பகுதிகள் என்பது எண்ணத்தக்கது. மேலும் உவமைகளுள் உருவகங்களும் கற்பனைத் தாயின் குழந்தை களே என்பதும் கருதத் தக்கது.

## 3. சிலேடைச் சிறப்பு

கலைஞர் முதல்வர் கவிதைகளில் பேரிடம் பெறும் அணி சிலேடை எனவே செப்பலாம். இதற்குக் காரணம் கலைஞரின் சொல்லுணர்வே (Word consciousness). உலகுணர்வு (World consciousness) போலவே சொல் லுணர்வும் நம் கவிஞர் முதல்வருக்கு நிரம்ப உண்டு என்பதற்கு அவர்தம் கவிதைகளை நிரம்ப உண்டுகளித்தார் நிரம்ப சான்று பகரலாம். தமிழ் பற்றிய அவர்தம் புகழ் மொழிகளை மட்டும் நுண் ஆய்வுக்கு (Micro analysis) எடுத்துக்கொண்டுள்ள இக்கட்டுரையில் காட்டப்பட்டுள்ள மேற்கோள்களில் இருந்தே சில சான்றுகள் இயம்பலாம்.
1. முருகுத் தமிழ் : நம் முதல்வர்—கவிஞரிடம் உள்ள சிறப்பு களுள் எல்லாம் ஒப்புயர்வற்ற ஒரு பெருஞ்சிறப்பு கவிஞர் களிடையே அவர் தாய்போல்!;சேய்போல் நடந்து கொள்ளும் தன்மையே. நம் கலைஞர் கவிஞர்களை அறிமுகப்படுத்தும் கலையே கலை ; கருணை ! அவ்வகையில் கவிஞர் முருக சுந்தரம் பெயரால் பிறந்த பெருமையே 'முருகுத் தமிழ் '

2. நீர்க்குடும்பத்துள் ஒன்றாகி 'ஆறு' பற்றிக் கவிஞர் தமிழன்பன் பாட வந்தபோது கலைஞர் நிகழ்த்திய அறிமுகத்தில் ஒரு முகமாக ஓடிய ஆறே 'தமிழாறு'.

இனி, கருத்துக் கவிஞராய்—எண்ணக் கவிஞராய் விளங்கும் நம் கலைஞரின் தனிச்சிறப்புக் கவி அருமையை (Poetic Personality) காட்ட மூன்று சான்றுகள்:

## 1. கலைஞரின் தமிழ் காக்கும் தறுகண்மை

தமிழுக்குப் பகைவன் தமிழனே ! அழுக்காறே அவன் தனிப்பண்பு ; பெரும் பண்பு. இதன் விளைவாகவே பாரி போன்றார் அழிவும், முடி உடை (!) மூவேந்தர் வீரத்தால் முத்தமிழ் நாடு சொத்தையாய்ப் போனதும். இன்றும் இந்த நிலை வேறு வேறு வேடங்களில்! இதை நம் கலைஞரே முன்னினும் அதிகமாக உணரும் நிலை. கூட இருந்து குழிபறிப்போரே மிகுதி. வள்ளுவர் சொல்லியது போல வாள் போல் பகையைக் கண்டு அஞ்ச வேண்டுவதில்லை; கேள் போல் பகை கண்டே அஞ்சல் வேண்டும். 'உடன்பிறந்தே கொல்லும் வியாதி' மாமலை மேல் இருக்கும் மருந்து. ஈராயிரம் ஆண்டு களாய்த் தன்னலத்தின் காரணமாகவே தோன்றும்—இல்லை கண் உடைக்கும் அழுக்காற்றால் தமிழர் அறிவா றெல்லாம் அழிவாறாகி வருகிறது. நல்லது பொறுக்காத இந்த நஞ்சர்களால் பகைவர் படை—பலம் பெருகுவது இயற்கை; 'திண்டுக்கல்' நம் தலைமேல் விழுவது இயற்கை. கலைஞர் உள் மனத்துள் இருக்கக்கூடிய இக் கருத்துக்கள்,

> பகைவர்க்குத் தாழாமல்
> பகைகண்டு வீழாமல்
> பல்லூழி வாழ்கின்ற தமிழ் (8)
>
> ஆவேசத் தமிழ் மாரி (23)
> அடலேறு மொழித் தமிழே !— இன்பக்
> கடலேறு மலைத் தமிழே (70)
>
> (எண்கள் பக்க எண்கள்)

என்னும் வரிகளில் பீறிடுவதைக் காணலாம். இவ் வரிகளில் அகமும் புறமும்—வீரமும் காதலும்—கடலும் மலையும்—கொஞ்சிக் குலாவுதல் 'கோவா' வாக இனிக்கிறது எனக்கு!

ஆம். உட்பகையையும் புறப்பகையையும் ஒழித்து இன்பங் காண வீரமே வேண்டும். மேலும்,இவ்வரிகள் நம் கலைஞர் தமிழ்ப் பகையை எதிர்க்கும் எதிர்ப்பிலே—இயக்கத்திலே—வளர்ந்த வலிமையையும் வலியுறுத்தும். ஆட்சிமொழி, பயிற்சி மொழி பற்றிய அவர் குறிப்புகள் அவர்தம் ஆக்க அரசியல் ஆண்மைக்கு அடையாளங்கள்.

## 2. மக்கள் மதிப்பையே மதிப்பாக மதிக்கும் மதிப்பீட்டு மாண்பு

முன் பத்தியின் முடிவிலேயே நம் கலைஞர்—முதல்வர்—ஓர் இயக்கத் தலைவர்—அரசியலாண்மையாளர் என்பது எவ்வாறு அவர்தம் கவியாண்மையாலேயே விளங்குகிறது எனக் கண்டோம். ஈண்டு மேலும், அவர் ஒரு மக்கள் மனிதர்—தலைவர் (People's Leader) என்பதைக் காண் போம்.

வரிசை எண் ..................................மக்கள்

34 தூவிய மலர் மலைமேல் மாத்தமிழாள்
நடந்துவர (ப.125)

இவ் வரிகள் வாயிலாக மேற்குறித்த உண்மை உறுதி பெறும். 'புலவர் புகழ் தமிழ்' என்றே இருந்த நிலையை இந்நூற்றாண்டின் — இருபதாம் நூற்றாண்டின் —இயல் புக்கும்—இன்றியமையாமைக்கும் ஏற்ற 'பொதுமக்கள் புகழ் தமிழ்' ஆக மாற்றிய முதல் புலவர் நம் கலைஞர்—முதல்வர் எனலாம்.

## 3. ஊன்றுகோலாய் உதவும் உயர்வு

கலை இலக்கியம் கவிதை மாந்தர் வாழ்வுக்கு விருந் தாய் அமைந்தால் போதாது; மருந்தாயும் அமைய வேண்டும்.

இழுக்கல் உடையுழி ஊற்றுக்கோல் அற்றே
ஒழுக்க முடையார்வாய்ச் சொல் (415)

என்னும் வள்ளுவர் வாய்மொழியின் எதிரொலியை,

வ. எண். 51 ஊன்றுகோலாகத் தமிழ் (ப. 176)

என்னும் கவிதைப் பகுதியில் கேட்கலாம். ஓர் இலக்கிய யனுக்கு இருக்கவேண்டிய 'முன்னோர் மொழி பொருளே அன்று அவர் சொல்லையும் பொன்னேபோல் போற்றும் புலமைப் பண்புநலன் நம் கவிஞர் முதல்வரிடம் நிரம்ப உண்டு என்பதற்கு இவ்வரி ஓர் (சிறந்த) எடுத்துக் காட்டாகும். உயர் தமிழைத் தூண்டுகோலாக மட்டும் பயன்படுத்தித் தூர எறிந்துவிடாமல் ஊன்றுகோலாகவும் பயன்படுத்த உந்தும்—முந்தும்—கலைஞரின் கருத்து தமிழர் செய்த தவப்பேறு.

இவ்வாறு கலைஞர் கவிதைகளில் அவர் தம் தாய் மொழியைச் சுட்டும் பகுதிகளில் சொட்டும் கவிதைக் கலையுணர்வை நுண்ணாய்வு (Micro analysis,) அடுத்திடும் எண் ஆய்வு (Frequency-count analysis) செய்து பார்த் தாலே அவருடைய கவிதை ஆளுமையின் (Poetic Perosnality) அருமை பெருமை விளங்குமன்றோ?

அறங்கூறும் வள்ளுவர்க்கு வாய்த்தநல் தொண்டர்களாய்ப்
புறங்கூறல் புறக்கணித்துப் புவியாண்டால்—நம்
திறம் கூறப் புலவர் கூட்டம்
திரண்டு வரும்............தேசம் வாழ்த்தும்.........
(கவியரங்கில் கலைஞர், ப. 118)

# கலைஞர் புகழ் அறிஞர்

அண்மையில் வெளிவந்திருக்கும் அருந்தமிழ்—புதுத் தமிழ்—இலக்கியம் 'கவியரங்கில் கலைஞர்'. 5-8-67 முதல் 5-5-71 முடிய நான்காண்டுக் காலத்தில் தமிழ்வேள் டாக்டர் கலைஞர் மு. கருணாநிதி அவர்கள் 15 (பதினைந்து) கவியரங்களில் தலைமை தாங்கிப் பாடிய 15 (பதினைந்து) கவியரங்கத் தலைமைக் கவிதைகளும் பேரறிஞர் அண்ணா பிரிவாற்றாது படைத்த கண்ணீர்க் கவிதாஞ்சலி ஒன்றும் கொண்ட தொகுப்பே 'கவிரயங்கில் கலைஞர்'. இந்நூலுள் 1. விடுதலை வீரர்கள், 2. ஐம் புலன், 3. காதலா வீரமா?, 4. நீர்க் குடும்பம், 5. பிலவங்க ஆண்டு, 6. புதிய பாதை, 7. அறுமறையில் அறுவர், 8. உடமைகள் பத்து, 9. பாரதிதாசன், 10. வாழ்வெனும் பாதையில், 11. பொங்கல் திருநாள், 12. கணக்கு, 13. நேரு கண்ட ஜனநாயகம், 14. பாரி விழா, 15. பாரதியார், 16. இதயத்தைத் தந்திடு அண்ணா என்ற தலைப்புகளில் உள்ள கவிதைகளுள் முதல் பதினைந்து கவியரங்கக் கவிதைகளிலும் பேரறிஞர் அண்ணாவைப் பற்றி வரும் செய்திகளை மட்டும் திறனாய்வு செய்வதே இவ்வெளிய கட்டுரையின் பெரிய நோக்கம்.

'இதயத்தை தந்திடு அண்ணா' என்ற தலைப்பில் இதயத்தைப் பிழிந்திடும் வகையில் கலைஞர் கண்ணீரால் எழுதியுள்ள கவிதையைத் தனியே திறனாய்வு செய்வதே அக் கண்ணீர்க் கவிமலரின் தனிச் சிறப்பைத் தினையள வேனும் உணர்தற்குரிய பனையளவு சான்றாகும்.

இவ்வகையில் 5-8-67-ஆம் நாள் திருச்சி (ராப்பள்ளி) வானொலியில் 'விடுதலை வீரர்கள்' பற்றிய கவியரங்கில் தலைஞர் தலைமையேற்றுப் பாடிய தலைமைக்

---

* காஞ்சி, பொங்கல் மலரில் (1972) வெளிவந்த கட்டுரை.

கவிதையே நமக்குத் தலைமைச் சான்றாய் அமைகிறது. அக்கவிதையில் முதல் வரிகள் இவை:

> இமிழ் கடல் வேலித் தமிழகம் ஈன்ற
> என்னுயிர் அண்ணன் அன்னையர் தந்தையர்
> பொன்னொளிச் சோதரர் புகழ்மிகு பாவலர்
> கண்மணித் தமிழின் காவலர் யாவரும்
> இற்றைத் திருநாள் ஏற்பீர்; வணக்கம்

இவ்வரிகளில் முதல் ஒன்றரை அடிகள் ஊன்றிக் கவனிக்கத் தக்கன. 'என்னுயிர் அண்ணன்' என்பது பொதுவாக இருப்பினும் கலைஞர், பேரறிஞர் அண்ணாவையே குறிக்கிறார் என்பது வெளிப்படை. வேறு யாரை அவர் 'என்னுயிர் அண்ணன்' என்று வாழ்த்தி வணங்க முடியும்? இனி, இந்த முதல் இரு வரிகளிலேயே கலைஞரின் சொற்றொடர் கருத்துச்சிலேடை (இந்த இடத்தில் சொற்சிலேடை அன்று) அவரை அறியாமலே அமைந்துள்ளதோ என்று கருத வேண்டியுள்ளது. (அப்படி ஒரு கவிஞர் வாக்கு அமையின் அது தனிச் சிறப்பே ஆகும்!) காரணம் சிலம்பு புகழ் 'இமிழ்கடல் வேலித் தமிழகம்' அண்ணாவை ஈன்றதா அல்லது முன்னை ஆட்சிகளால் மறுக்கப்பட்ட 'தமிழகம்' என்ற பெயரைத் தர உறுதிகொண்ட பேரறிஞர் அண்ணா 'இமிழ்கடல் வேலித் தமிழகம்' ஈன்றாரா என்ற கேள்வியே!

(2)

பேரறிஞர் அண்ணா பற்றிய இரண்டாவது குறிப்புக்கு இடந்தருவது 13—8—'68ஆம் நாள் குடந்தை 'மூர்த்தி கலை அரங்கில்' 'புதிய பாதை' என்ற தலைப்பில் நடைபெற்ற வேளாண்மைக் கவியரங்கில் கலைஞர் அவர்கள் தந்த தலைமைக் கவிதையே ஆகும். இயற்கை வளமும் இலக்கிய வளமும் கொஞ்சிக் கூத்திடும் இக் கலையரங்கக் கவிதையின் முடிவாக அண்ணா முழக்கம் கேட்கிறது. அது வருமாறு:

அமோக விளைச்சல்—அண்ணா
அரசின் இலட்சியமாம்
அதற்கென உறுதி
அளிப்போம்—நிச்சயமாய்!

(3)

*மூன்றெழுத்து முதல்வராய் —மூலவராய்— விளங்கிய பேரறிஞர் பற்றிக் கிடைக்கும் மூன்றாவது சான்று 12-9-1969ஆம் நாள் சென்னை வாணிமகாலில் நடைபெற்ற பாரதிவிழாக் கவியரங்கில் கலைஞர் தந்த தலைமைக் கவிதையிலாகும்.*

*ஈண்டுக் கருதத்தக்க ஒரு குறிப்பு பேரறிஞர் அண்ணாவின் பிரிவாற்றாமல் கலைஞர் பெருந்தகை 9-2-69ல் கண்ணீர்க் கவிதாஞ்சலி படைத்தபின் பல மாதங்கள் கவி பாடவில்லை என்று தோன்றுகிறது. இந்நிகழ்ச்சியை அடுத்து அவர்கள் கவியரங்கக் கவிதை பாடியது—ஏழு மாதங்கள் ஏகிய பின் — 12-9-69-ல் தான். 69-ல் இந்த ஒரு முறை தவிர வேறு ஒரு முறையும் கலைஞரின் கவிக் குரலைக் கேட்க முடியவில்லை. காரணம் வெளிப்படை— பாட்டுவிக்கும் பெருந்தலைவர் மறைந்துவிட்டார்! இதன் விளைவே 68-ல் எட்டுக் கவியரங்குகளில் தலைமை தாங்கிய கலைஞர் 69-ல் ஒரே கவியரங்கில் தலைமை தாங்கக் காண்கிறோம்.*

*பாரதியார் பற்றிய இந்தக் கவியரங்கில் பேரறிஞர் அண்ணா மறைந்த எட்டு மாதங்கட்குப் பின்னும் கலைஞர் உள்ளத்துள் அழுது எழுதும் எழுத்து வருமாறு:*

தாயாகத் தமிழாகத்—தாயகத்தில் மூத்த
சேயாகத் தடைபடா அன்புருவாக —
அண்ணன் கண்டவன் நான்

*கண்ணன் கண்டவன் பாரதி! பாரதிக்குக் கண்ணன்! கலைஞர்க்கு அண்ணன்!*

(4)

நான்காவது சான்றாக நமக்குக் கிடைப்பது 12-1-70-இல் சென்னை வானொலியில் 'பொங்கல் திருநாள்' என்ற தலைப்பில் நடந்த கவியரங்கில் கலைஞர் தந்த தலைமைக் கவிதை.

இக் கவியரங்கக் கவிதையில்தான் முதன்முதலாகப் பேரறிஞர் அண்ணா அவர்களின் பிரிவாற்றாமை பீறிட்டு வருகிறது எனலாம். அதன் வலி (இரு பொருளிலும்) பின் வரும் வரிகள் காட்டும்:

உரம் மலிவாய் வழங்குதற்கும்—ஈகைக்
கரம் வேண்டுமன்றோ? அதனைத்
தரமறிந்து அண்ணன் தந்துவிட்டே
போயுள்ளார்.

உரம்—கரம்—தரம்! எதுகை மதுகை இனிது.

இக்கவிதையில் இன்னுமோர் இடத்தில் புறத்தார்க்கு மிகமிகக் குறிப்பாகவும் அதத்தார்க்கு மிகமிக வெளிப்படையாகவும் பேரறிஞர் அண்ணாவுக்குப் பெருங்கலைஞர் சூட்டியிருக்கும் புகழ்மாலை என்றும் வாடா சொல்மாலை ஆகும். அது இது:

ஊமைகள் வாழ உயிரைக் கொடுத்த
உத்தமன் காலில் முகத்தைப் புதைத்தல்
எந்தன் தொழிலாம்

(5)

கலைஞர் புகழ் அண்ணாவைக் காட்டும் ஐந்தாம் பகுதி 'நேரு கண்ட ஜனநாயகம்' என்ற தலைப்பில் நடந்த கவியரங்கத்தில் கலைஞர் வழங்கிய தலைமைக் கவிதையே ஆகும். இதில் தொடக்கத்திலேயே பேரறிஞருக்குப் பெருங் கவிஞர் வணக்கம் கிடைக்கிறது.

**வங்கக் கடலருகே உறங்குகின்ற நம்அண்ணன்**
**அடிதொழுது தொடங்குகின்றேன்**
**தலைமையுரை!**

இப்பகுதியில் இரண்டாவது வரியில் காணப்படும் அடி—தலை இணைப்பு கவிதைக்கு முரணரண்! இத்தொழுகையால்—உள்ளார்ந்த அழுகையால்—விளைந்த விளைவே 'நேரு கண்ட ஜனநாயகம்' என்ற தலைப்பில் கவிஞர் பாடியிருக்கும் அற்புதக் கவிதை. நேருவைப் பற்றி இதனினும் சிறந்த ஒரு கவிதை இந்திய இலக்கியத்திலேயே உண்டா என்று ஐயுறச் செய்யும் அரிய பெரிய கவிதை இதுவாகும். எந்தத் தேசியவாதிக்கும் கலைஞர் நேரு நெஞ்சில் இளைத்தவரில்லை என்பதற்கு இக்கவிதை அழியாப் பெருஞ் சான்றாகும். எந்த அரசியல் கட்சியாரும் இந்தப் புது ஆண்டிலிருந்தேனும் உணர்ந்து போற்ற வேண்டிய உயர்வு, என்றோ ஒரு காலத்தில் எதற்காகவோ மாறாய் இருந்தவர்கள் இன்று மனம்மாறி இருக்கும்போது அந்த மனம்—மணம்—மாறாமல் பார்த்துக் கொள்ள வேண்டுவதே அறிவுடைமை—அருளுடைமை. எந்த ஒரு அரசியல் கட்சி நேற்று மாறாயிருப்பினும் இன்று மாறி வருபவரை மதிக்காமல் மிதிக்கிறதோ அது காலச்சுழற்சியில் வீழ்ந்து படும் இவ்வுண்மையை உணர்ந்தவர்—உரைத்தவர் பேரறிஞர் அண்ணா. ஆனால் அதை உணராத உள்ளங்களிலும் உணர்த்துபவர்—உரைப்பவர் (இரு பொருளிலும்) நம் பெருங் கலைஞர். அந்த வகையில் நேருவும் மதிக்கத் தக்க நேருவாக விளங்கும் கலைஞரையும் அவர் ஆருயிர் அண்ணனையும் அவர்கள் வழிச் செல்லும் கழகத்தையும் காந்தியும் நேரும் கண்டு களிக்க முடியாமல் காலம் சதி செய்து விட்டது நம் குறையே.

இவ்வாறெல்லாம் நம்மை எண்ணச் செய்து உள்ளம் எல்லாம் உருகச் செய்வது நேருவின் பேரும் (ஆம். உண்மையிலேயே) புகழும் விளக்கும் அப்பாடலில் வரும் பின்வரும் வரிகள்:

கருத்தில் மாறுதல் இருந்த போதிலும்
காலமானார் நேரு என்றதும்—
கண்ணீர் உகுத்தார்
கலங்கி அழுதார்
காராக்கிரகம் கிடந்த அண்ணா

*ஆம். 'நான்சென்ஸ்' என்ற நேருவை எதிர்த்தவர்—காராக்கிரகம் கிடந்தவர்—ஆயினும் அண்ணா*

காலமானார் நேரு என்றதும்—
கண்ணீர் உகுத்தார்
கலங்கி அழுதார்

*என்கிறார் கவிஞர் கலைஞர்.*

*புரந்தவன் கண்ணீர் மல்க சாவதே மேல் என்று பாடினார் பழைய வள்ளுவர். அவர் வாழ்வே தம் வாழ்வு எனக் கருதும் கலைஞரோ—புதிய வள்ளுவரோ—எதிர்த்தவர்கண்ணீர் மல்க இறப்பதே இறப்பு—சிறப்பு என்று புது அறம் புகல்கிறாரோ?*

*வாழ்க ! வெல்க! அவர் பேருள்ளம்!—பேரனைய பேருள்ளம்!*

# கலைஞர் கவிதைகளில் கருத்துப் பரப்புக் கலை

'என்றும் பதினாறாய்' விளங்கவல்ல 16 கவிதைகளைக் கொண்ட தொகுப்பு 'கவியரங்கில் கலைஞர்'. 187 பக்கங்கள் கொண்ட இந்நூலில் உள்ள கவிதைகளைப் பற்பல தலைப்பு களில்—அகலமாகவும் ஆழமாகவும்—ஆராயலாம். இது 'உண்மை—வெறும் புகழ்ச்சி இல்லை'. கடந்த ஒருவார காலமாக நூல் முழுதும் நூல் போல் ஊடுருவிச் செல்லும் உணர்வுகளையும் உண்மைகளையும் இனங்கண்டு வகை தொகை செய்ய முயன்றேன். கடமைகளும் கவலைகளும் தடையாயின. எனவே அம் முயற்சியைக் கைவிட்டு (இப்போதைக்கு!) 'பொங்கல் திருநாள்' பற்றியே கலைஞர் அவர்கள் 12-1-70 ஆம் நாள் சென்னை வானொலியில் நிகழ்த்திய கவியரங்கத் தலைமையுரையில் ஓர் இயல்பை யேனும்—ஒரு கூறையேனும் ஆராயலாம் என்று எண்ணு கிறேன். பெருநிலை ஆய்வு (Macro study) முடியா விட்டால் நுண்கலை ஆய்வு (Micro study) தானே!

கருத்துப்பரப்பு—பிரசாரம் இல்லாத கலையே இல்லை. ஒவ்வொரு படைப்பும் ஒவ்வொரு வகை—ஒவ்வொரு அளவு கருத்துப் பரப்புச் செய்வதற்கே பிறக்கிறது. மணி வாசகரையும் சேக்கிழாரையும் போல் கவிபாடவும் காதல் கொண்ட கலைஞராய் விளங்கும் நம் கவிஞர்—முதல்வர்—தன் கட்சியை—அரசின் பணிகளை விளக்க கவியரங்கை எவ்வளவு திட்பமாகவும் நுட்பமாகவும் பயன்படுத்துகிறார் என்பதைப் 'பொங்கல் திருநாள்' கவியரங்கத் தலைமை யுரைக் கவிதை ஒன்றனுள் மட்டுமேனும் புகுந்து பார்ப்போம்:

---

* உரிமை வேட்கை—பொங்கல் மலரில் (1973) வெளிவந்த கட்டுரை.

வாவி, குளம், வாய்க்கால்கள் நீரெல்லாம்
ஆவியாகி வறட்சிப் புயல் வந்துற்றுப் பயிரெல்லாம்
சாவியாகிப் போன நிலை கண்டுவிட்டுத் தமிழ் அரசு
தாவியோடித் திடுதிடென வெப்பத்துயர் தணித்தாலும்
ஓவியமுகில் அனைத்தும் கருக்கொண்டு புவி
மேவிட மழைக் குழந்தை ஈன்றதாலும்
உணவுக் கட்டுப்பாடென்று முன்பு
ஏவிய அரசாணை திரும்பப் பெற்று—இன்பக்
காவியத் திருநாளாம் பொங்கல்

இப்பகுதியில் உள்ள இலக்கிய நயங்களை எல்லாம் இப்போதைக்கு எவ்வளவு ஆர்வம் இருந்தாலும்—இருப்பது இயற்கை, சரியும்கூட—ஒதுக்கி! ஒடுக்கி வைத்துவிட்டு அரசியல் பொருண்மைகளை மட்டும் எண்ணுவோம்; எண்ணி 'நம் முதல்வர் நா நலம்!' என்று இறும்பூதும் இறுமாப்பும் கொள்வோம்.

கலைஞர் பெருந்தகை தம் அரசை—இல்லை—நம் அரசை 'தமிழ் அரசு' என்றே அல்லவா சொல்கிறார். இப்படி ஒரு முதல்வர்—சொல்ல மாட்டாரா என்றல்லவா செந்தமிழ்ச் சிலம்புச் செல்வர் — என் சிந்தை கவர்ந்த தலைவர்—அச்சுக்கோக்கும் தொழிலாளியாய் இருந்து அரசியல் அறிஞராய் ஆன அண்ணல்—கடந்த முப்பதாண்டுக் காலமாய் கனவு கண்டார்; சிறை சென்றும் கடமைகள் புரிந்தார்.

'தாவியோடி திடுதிடென வெப்பத்துயர் தணித்தாலும்'

கலைஞர் தன் அரசின்—தன்னரசின் (!?)—தொண்டின் விரைவை எல்லாம் இத்தொடரில் காட்டுகிறார் அன்றோ?

அரசு அறம் செய்தால் அழகு மழை பொழியும் என்று நம் கலைஞர்—முதல்வர் நம்புகிறாரோ இல்லையோ அவர் சொற்கள் நம்மை நம்ப வைக்கின்றன. மேலும்

*அரசன் அறமே செய்தால் இயற்கையும் இன்னருள் சுரக்கும்—இரண்டும் இணைந்தால் என்ன நிகழும் ?*

**'உணவுக் கட்டுப்பாடென்று முன்பு**
**ஏவிய அரசாணை திரும்பப் பெற்று'**

*ஆம், 'ஏவிய' என்ற சொல்லைச் சொல்வதன் வாயிலாகவே அந்த அரசாணை அம்பு என்பதையல்லவோ ஆசிரியர் (ஆம் ! ஆசிரியர்தான்) உணர்த்துகிறார் !*

ஃ ஃ ஃ

*இனி, கலைஞர் தம் அரசு எவ்வாறு பாடுபடுகிறது என்பதை அண்ணாவின் 'இதயத்தை'ப் பெற்ற அருமைப் பாட்டால் எவ்வளவு தன்னடக்கத்தோடு சொல்கிறார் பாருங்கள் :*

**—எம்**
**சக்திக்கு ஏற்றவாறு உழைக்கின்றோம்**

*திராவிட முன்னேற்றக் கழகத்துக்குப் பேரறிஞர் அண்ணா அறிவித்த பெருஞ்சின்னம் எழுஞாயிறு—உதய சூரியன். அவன் நம் கலைஞர் வாக்கில் எப்படி உதயமாகிறான், பாருங்கள்:*

**பொங்கல் நாளில் புதுப்புது இன்பம்**
**எங்கணும் தோன்ற எழுந்தான் கதிரோன் !**
**எதையும் அன்பால் அணுகி வென்றிட**
**உதய சூரியன்**

ஃ ஃ ஃ

*'உதய சூரியன்' உதித்துவிட்டால் போதுமா ? அதன் பயன் ?*

**கடன்பெற்று வேளாண்மை புரிகின்ற முயற்சிக்கெல்லாம்**
**உடன்பட்டு உறுதுணையாய் நிற்கின்ற அரசு காண்க!**

நம் கலைஞருக்குத்தான்—தன்னரசு என்ற 'தருக்கு' இல்லை அது மட்டுமன்று வேறு எதுமாட்டும் சிந்தனை யற்றோர் சிந்திக்கத் தக்கது :

**உரம் மலிவாய் வழங்குதற்கும் - ஈகைக்**
**கரம் வேண்டுமன்றோ ? அதனைத்**
**தரமறிந்து அண்ணன் தந்துவிட்டே போயுள்ளார்.**

இறுதி அடியில் ஈற்றயல் சீரில் இருக்கும் ஏகாரம் இரக்க இதயம் படைத்தார்க்கு ஆகாரம் அன்றோ ? அண்ணன் கொடுக்காமல் போகவில்லை—கொடுத்துவிட்டே போயுள் ளார் என்பதும்—கொடுத்த அண்ணன் போய்விட்டாரே என்பதும் 'ஏ'காரத்தால் விளங்குகின்றனவன்றோ ?

ஃ ஃ ஃ

'செவி கைக்கச் சொற்பொறுத்தல்' நாடாள்வோர்க்கு இருக்க வேண்டிய நற்பண்பு—சொற்பண்பு. ஆம், புடம் போடப்போட ஒளிவீசும் பண்பு. தன்னை அல்லது தமரைப் பற்றிச் சொல்லப்படும் குறைகள் உண்மையா என்று எப்போதும் ஆராய வேண்டும். இது ஒவ்வொருவர் கடமையும்.

உண்மையாக இருந்தால் சிந்தித்துத்திருந்த வேண்டும்; பொய்யாக இருந்தால் பொய்க்கும் உரிய காரணங்களை ஓரளவேனும் எண்ணிச் சிரித்து ஒதுக்க வேண்டும் : நம் கலைஞர் முதல்வரோ சிந்தித்து! சிரித்து ஒதுக்கவில்லை; 'சிந்து' சிந்துகிறார் :

**சிரம் ஆட்டி எமை ஏற்காமல் சிலர்**
**ஒட்டைகளைக் காட்டுகின்றார்—நாத**
**சுரம் காட்டும் ஒட்டையெல்லாம்**
**நல்லிசைக்கே என்றிடுவேன்.**

'சிரம் ஆட்டுதல்' ஏற்றல்—ஏற்காமை இரண்டுக்கும் பொருந்தும் ! இப்பொருத்தமும் நம் உள்ளத்தில் பொருந்த உரைக்கிறார் ஆசிரியர் !

ஃ ஃ ஃ

திராவிட முன்னேற்றக் கழகத்தின் பொருளியல் குறிக்கோளும் மென்முறை—நன்முறை சமதர்மம்தான்; வேறு வகையில் விளம்பினால் சட்ட வழி—சட்டமன்ற வழிச் சமதர்மம்தான். இதோ கலைஞரின் கருத்துக் கதிர்—கவிதை ஒளி !

**நான் படித்த மருந்ததற்குச் சமதர்மந்தான் !**
**அந்நிலைதான் வருதல் மட்டும்**
**இந்நிலையில் உழைப்போர் வாழ**
**வகை காணல் மிகவும் நன்று — அதற்கு**
**வாய் திறந்து சூளுரைப்போம் இன்று**
**பூட்டுப் போடவில்லை; பொதுவுடைமைக்**
**கொள்கைதனைப்**
**புறக்கணித்தும் பேசவில்லை.**
**ஏட்டுக்குள் இருக்கின்ற அக் குறிக்கோள்**
**நாட்டுக்குள் மெல்ல மெல்ல**
**வந்தேதான் தீரவேண்டும்.**
**— சமதர்மப்**
**பாட்டுக்குள் பொதிந்துள்ள கருத்தெல்லாம்**
**பரவுமுன்னே பாங்காகத் தொழில் அமைய**
**— நம் நாட்டில்**
**கூட்டான அமைப்புக்கள் பெருகிடவே**
**பொங்கல் நாளில் புதிய பாதை ஏற்றிடுவோம் !**
**இனிய பாதையிதை இடைக்காலப் பாதை யென்போம் :**
**பின்னர்**
**கனிய வைப்போம் கற்களையே !**

இந்த ஈற்றடியில் இருக்கும் இலக்கிய ஆற்றல்தான் என்னே !

பேரறிஞர் அண்ணாவிடம் கலைஞர் கொண்டுள்ள பேரன்பு — பெருமதிப்பு ஈடு இணையற்றது. அண்ணாவின் பேரைக் குழு அரசியலுக்குப் பயன்படுத்தும் புழு உணர்ச்சி— 'அருட்பெருஞ்சோதி இந்து மிலிட்டரி ஓட்டல்' வியாபார முறை. இது கலைஞருக்குக் கனவிலும் வராது. ஆம். கனவு ஒரு மனிதனின் உள்ளத்து உண்மைகளை எந்த எந்த விந்தை வடிவுகளிலோ விளக்கிவிடும். அப்படியேதான் கவிதையும். இதோ சான்று ;

**ஊமைகள் வாழ உயிரைக் கொடுத்த**
**உத்தமன் காலில் முகத்தைப் புதைத்தல்**
**எந்தன் தொழிலாம்**

'புதைத்தல்' என்ற சொல்லை ஒட்டிச் சிலேடைச் சிலம்பம் ஆடும் நேரத்தில் தன் தலையில் வைத்திருக்கும் 'அண்ணா கலச'த்தை அன்றோ கலைஞர் கண்ணாகக் காக்கிறார் !

ஃ ஃ ஃ

அறிஞர் வழியில் ஆட்சி நடத்தும் கலைஞர் பேருக்கு அன்று — சீருக்கு நடத்தும் சமுதாயப் புரட்சியைச் சித்தரித்துக் காட்டும் சித்திரம் பாரீர் :

**பட்டா இரு லட்சம் பெற்றவர்கள் வாழ்த்துகிறார் !**
**தட்டாமல் தண்ணீர் தருவதற்கும் திட்டமிட்டு**
**எட்டாத பழமென்று இருந்தோர்க்கும் வளவங்கி**
**முட்டாது கடன் தரவே தனி முயற்சி !**
**கிட்டாதோ அதிகாரி பார்வையென அலைந்ததுயர்**
**வெட்டாமல் வெட்டியின்று மாதமோர் நாள்**
**கட்டாயம் சிற்றூர் சென்று மனுநீதி வழங்குகின்றோம்!**
**பொன்சாரம் இட்டழைக்கும் பூமான்கள் வீட்டுக்கே**
**மின்சாரம் போகுமென்ற நிலைமாற்றி ;**
**எழுபத்தி ரண்டுக்குள் எங்கணுமே மின்இணைப்பு**
**என்தமிழ்த் திருநாட்டில் ஏற்படவே உழைக்கின்றோம்!**

இவ்வளவு பாடுபடும் கலைஞர்—அறிஞர் வழி ஆட்சி யாளர்—இந்தப் பாட்டுக்கெல்லாம் எதிர்பார்ப்பது என்ன தெரியுமோ? எதிரிகள் பாட்டும் பாடும் பாட்டு அன்று! (நானும் கலைஞரைப் போல நடைபோட்டுப் பார்க்கிறேன்! ஆமாம். நடையைப் 'போட்டு'ப் பார்க்கிறேன்!) இதோ கலைஞரின் ஏக்கம்:

இவையெல்லாம் புகழ்ந்துரைத்துப் பொங்கல் நாளில்
தொகை தொகையாய் மாலை வேண்டாம்
பரிசு வேண்டாம்
அவைப் புலவீர் அழகுறவே ஓர்பாட்டு நீர்பாடின்
பகைப்புலம் ஒழித்த பாண்டியன் போல்
நிமிர்ந்து நிற்பேன்

இன்று நாடெல்லாம்—உலகமெல்லாம், ஏன்?, நாவெல் லாம்—உள்ளமெல்லாம் ஓங்கி வருவது—வளருவது வன் முறை? இந்நிலையை எண்ணுகிறார் கலைஞர். மற வீரத்தை எதிர்த்து அவர்தம் அறவீரம் பொங்குகிறது. இதோ பொங்கல் திருநாளில் அந்தக் கருத்துக் கவிதைப் பொங்கல் :

குகைப் புலியை முறத்தாலே எதிர்த்த நாட்டில்
திகைப்புற்று நிற்போமோ வன்முறையை
வீழ்த்திக் காட்ட!
புகைக்கருத்துப் போக்கிவிட்டுப்
புதுக்கருத்துப் போற்றிடுவோம்
பொங்கல் நாளில்!

இவ்வாறு வன்முறைக்கு எதிராக 'முரசொலி' செய்த நம் முதல்வர் மூன்றாண்டுகட்கு முன்பே (1970) இந்த ஆண்டுப் பொங்கல் திருநாளில் (1973) சொல்ல வேண்டிய— நாம் ஒவ்வொருவரும் சொல்ல வேண்டிய—இந்திராவும் இந்தியாவும் கேட்க—இல்லை — கேளாமலே சொல்ல வேண்டிய கருத்தை—எவ்வளவு அழகாகவும் ஆணித்தர மாகவும் சொல்கிறார் பாருங்கள்:

**கிழங்கள்**
**சிகை கருத்தால் சாயப் பூச்சென்று சொல்வோம்:**

*(அடாடா! கலைஞர் வீட்டு அழகிரி—காந்தி கலப்புத் திருமண விழாவில் நாவலர் தலைமையில் கவியரசு கண்ணதாசன் பேசியது அல்லவா நினைவுக்கு வருகிறது!)*

*இன்னொரு முறை?*

**கிழங்கள்**
**சிகை கருத்தால் சாயப் பூச்சென்று சொல்வோம்**
**நகை கருத்தால் போலியென்று கொள்வோம்!**
**பொய்யர் தம்**
**மிகைக் கருத்தை ஆராயாமல் ஏற்றுக் கொள்ளல்'**
**தீதேயன்றோ!**

*மிகை—பகை! எங்கும்—எவர்க்கும்—எப்போதும்!*

*அப்பா! கலைஞரின் ஒரு கவிதையில் ஒரு கருத்துக்கே—* **ஆம்.** *கருத்துப் பரப்பு பற்றிய ஒரு கருத்துக்கே இவ்வளவு இடப் பரப்பு! கலைப் பரப்பு!*

*வாழ்க அவர் புலமை! வெல்க அவர் தலைமை!*

# கலைஞர் கவிதைகளில் பாட்டாளியின் பெருமை

இன்பத் தமிழ் இலக்கியம் எழுபதுகள் (Seventies) எழுந்ததும் பெற்ற பெரும் பேறுகளுள் ஒன்று 'கவியரங்கில் கலைஞர்' என்னும் தொகுப்பு. பல்வேறு தலைப்புகளில் நம் மதிப்பிற்குரிய தமிழக முதல்வர் டாக்டர் கலைஞர் அவர்கள் அவ்வப்போது பாட்டாளிக் கவியரங்குகட்குத் தலைமை ஏற்றுப் பாடிய கவிதைகளின் தொகுப்பே இந் நூல். பற்பல கோணங்களிலிருந்து ஆ ரா ய் ந் து மகிழ்ந்து மதிப்பீடு செய்யும் வாய்ப்பினைத் தமிழ்நாட்டு இதழ்கள் எனக்குத் தயவுடன் தந்து வருகின்றன. மேதினி எல்லாம் மேவிடும் மே தினம் ஒட்டி (இந்த நடை கலைஞரின் கவிதைகளின் தாக்குதலின் எளிய விளைவோ!) வெளிவர விருக்கும் 'உரிமை வேட்கை' மலருக்கு மணம் செய்ய ஒரு கட்டுரையைக் கேட்டபோது என் ஆண்மைகொள் ஆராய்ச்சிக்குரிய கருவூலமாய் விளங்கும் கலைஞரின் கவிதை களே மீண்டும் என் நினைவிற்கு வந்தன. அதனால் அக் கண்கொண்டே இத்தொகுப்பில் சிலமணி நேரம் செலவழித் தேன். அதிக நேரம் செலவழிக்க ஆர்வம் இருந்தும் அமயம் இல்லை. அருமை நண்பர் எனக்குக் கட்டளை தந்தாரே தவிர காலம் தரவில்லை. கிடைத்த நேரத்தில் கிடைத்த வரையிலேயே என்னை மெய்சிலிர்க்க வைக்கும் 16 பகுதிகள் கிடைத்தன. பாராளும் கலைஞரின் பாட்டாளி உணர்வைப் பார்ப்பதற்கும் பகிர்வதற்கும். அவற்றை மட்டுமே துணை யாகக் கொண்டு இவ்விலக்கியப் பகுதிகள் அமைந்துள்ள முறைப்படியே கலைஞரை அவர்க்குப் பாட்டாளியர்பால் உள்ள அருளுடைமையைப் பார்க்க முனைகிறேன்.

---

* உரிமை வேட்கை—2-வது ஆண்டு நிறைவு மேதின மலரில் (1972) வெளிவந்த கட்டுரை.

## 1

*கவிதைத் தொகுப்பில் முதல் கவிதை 'விடுதலை வீரர்கள்' பற்றியதாகும். இந்தக் கவிதையிலேயே கலைஞரின் கவியுள்ளத்தில் பாட்டாளியர் பரிவு குவிந்திருப் பதைக் காண முடிகிறது.*

**உற்றார்–சுற்றம்; ஒருவர்-இருவர்**
**உயர்வுடன் வாழ்தல் சுதந்திரம் ஆமோ?**
**கற்றார்-கல்லார்-கழனியில் உழல்வோர்**
**சிற்றாள்-கொல்லர்-சிறு தொழில் செய்வோர்**
**மாதர் நல்லார் மாணவ மணிகள்**
**தீதறு வாழ்வில் திளைத்தலே சுதந்திரம்**

*(ப. 7)*

*இந்த ஆறு வரிகளும் இந்திய விடுதலையின் உண்மைப் பொருளை—குறிக்கோளை—உலகுக்கு எடுத்து ஓதுவன அல்லவோ?*

**உற்றார்—சுற்றம்; ஒருவர்—இருவர்**
**உயர்வுடன் வாழ்தல் சுதந்திரம் ஆமோ?**

*இந்த இரண்டு வரிகளும் விடுதலை வாழ்வைக் கெடுதலைத் தாழ்வாக்கும் வீணர்களின் போக்கை வெட்டிச் சாய்க்கப் பயன்படும் அல்லவா?*

## 2

*இரண்டாவது கவிதை 'நீர்க் குடும்பம்'. இந்தக் கவிதையில் எந்தெந்த வழிகளில் எல்லாம் நீர்க் குடும்பம் பேரும் புகழும் சீரும் சிறப்பும் பெற்றுப் பெருகுகிறது—ஆறாய், கிணறாய், குளமாய், கண்ணீராய், வியர்வையாய் என்று விளக்குகிறார் புவியாளும் கவிஞர். இக்கவிதையில் ஓரிடத்தில் அவர் சொல்லும் சொற்கள் நீர்மேல் எழுத்*

*தாய், அன்று, கல்மேல் எழுத்தாய் என்றென்றும் பார் மேல் விளங்கத் தக்க வீறு பெறுகின்றன. அவை வருமாறு:*

— ஒரு

**சிற்பியின் வியர்வையிலே சிலை பிறக்கும்**
**உழவனின் வியர்வையிலே பசி பறக்கும்**

*(ப.42)*

*இப்படி நறுக்குத் தெளித்தாற் போல் நெஞ்சைத் தொடும் நேரிய கூரிய இரண்டு வரிகளில் பாட்டாளியின் 'பிறப்புப்' பெருமை மட்டும் பேசி விட்டுப் போய்விடும் கவிஞர் அல்லர், கடமையையே மூச்சாகக் கருதும் நம் கலைஞர்; அதன் பயன் இது :*

**கடல் இருந்து**
**மழை பெருகி**
**ஆறு ஓடி**
**கிணறு குளம் நீர் நிறைய வேண்டும்.........**
**நீர்க் குடும்பத்தில் ஒன்று குறைய வேண்டும்**
**மற்றொன்று மறைய வேண்டும்......**
**வியர்வை குறைய வேண்டும்—வேலை செய்வோர்க்கு**
**வசதி பெருகுவதால்—வியர்வை குறைய வேண்டும்**
**கண்ணீர் மறைய வேண்டும்—**
**எல்லார்க்கும் இன்பம்**
**என்று வேண்டுவதால் !—கண்ணீர் மறைய வேண்டும் !**

*(ப.46)*

3

*இனி, கலைஞர் காட்டும் 'புதிய பாதை' பார்ப்போம். அந்தப் பாதையில் பரிவுடன் செல்வோர் விழிகளில் படும் காட்சி இதுதான்.*

**உழவனோர் தாமரை**
**சேற்றில் மலரும் அவன் வாழ்வு**
**உழவனோர் மன்னர்**
**நாற்று முடியிருக்கும் அவர் தலையில்**

**உழவனோர் வீரன்—என்றால்**
**போர் இருக்கும் அவன் களத்தில் (வைக்கோல் போர்)**
**உழவனோர் ஓவியன்—**
**வயல்கள் அனைத்தும் அவன் வரைந்த சித்திரம்**
**உழவனோர் தெய்வம்**
**உயிர்களைக் காப்பதால்** (ப.62)

*பொன்னேர் பிடிக்கும் உழவனைத் தாமரையாய், மன்னனாய், வீரனாய், ஓவியனாய் ஏன் தெய்வமாய்க் காணும் கலைஞர் கண்களே கண்கள்! அவருக்குத் துணை புரியும் கருத்தே கருத்து! கண்ணும் கருத்துமாய் நாடாளும் நம் முதல்வர் இவ்வாறு உழவனை ஒப்பில்லா ஓவியமாக்கிக் காட்டும் பெரும் பணியோடு அமைதி கொள்வாரோ? காந்தி அண்ணல்—காஞ்சி அண்ணன் வழியில் வன்முறைகளால் வம்புகள் வாரா முன்னம் நன்னெறியில் செல்பவர்கள் தப்பாது தப்பி உய்ய வேண்டிய ஒரு பெரும் நெறியையும் உணர்த்துகிறார்.*

**நிலமுடையார் நெஞ்சத்தில் உழைப்போர்க்கு—உதவுகின்ற**
**வளம் நிறைய இருத்தல் வேண்டும்** (ப.69)

*ஆம். மண் இருந்தால் போதுமா? மனம் வேண்டாமா? மனமில்லார் மண்தானே!*

4

*நான்காவதாக நான்மறையினும் உயிருடைய—உயர்வுடைய நன் மறையாகிய தமிழ் மறையில் அறுவகையாரைக் காட்டும் கவியரங்கு ஒன்றுக்குத் தலைமை தாங்குகிறார் கலைஞர். அத்தலைமையுரைக் கவிதையில் பயிர் படைக்கும் உழவனுக்கும் உயிர் புடைக்கும் வீரனுக்குமுள்ள ஒற்றுமை வேற்றுமைகளை ஓர்கிறார் முதல்வர். விளைவு?*

**மறவன் பெருமைக்குப் போர்க்களமே வட்டம்**
**உழவர் ஏருக்கு விளைநிலமே வட்டம்** (ப.73)

உழவனுக்கும் வீரனுக்கும் ஒற்றுமைகள் பல உண்டு
வேற்றுமையோ ஒன்றே ஒன்று
உழவன் வாழ வைப்பான்
வீரன் சாக வைப்பான் (ப. 74)

இந்தக் கவியரங்கில் அறுமறையில் பலரைப் பற்றியும் கலைஞர் குறிப்பிடும் நிலை வருகிறது—போகிறது. அவ் வமயம் அவர் சொல்லும் சொல்,

வீரன் என்றும் உழவன் என்றும்......நட்பு
விதைக்கின்ற தோழன் என்றும்...... (ப. 77)

நட்பு விதைக்கின்ற தோழன் என்று விதை விதைக்கும் விவசாயியாக நண்பனையும் கலைஞர் காண்பது புதிய காட்சியாகும்—போற்றத் தக்க மாட்சியுமாகும்.

5

ஐந்தாவதாக நம் ஆய்வுக்கு அமைவது புரட்சித்தமிழ் இலக்கியத்தின் மைந்தனாக விளங்கும் மக்கள் கவிஞர் பாரதிதாசனைப் பற்றிய பாடலேயாகும். தமிழ் இலக்கிய வரலாற்றில் தனிப்பெரும் திருப்பத்தை ஏற்படுத்திய அந்தக் கவிஞனின் பாடல்களில், பாடல் பகுதிகளில் எது (வேறு சிலவற்றோடு) நம் முதல்வரையும் அடிமை கொண்டது என்பதை அறிய, துப்பாய துப்பு இது:

‘‘சிற்றூரும் வரப்பெடுத்த வயலும் ஆறு
தேக்கியநல் வாய்க்காலும், வகைப்ப டுத்தி
நெற்சேர உழுதுழுது பயன் விளைக்கும்
நிறையுழைப்புத் தோள்களெல்லாம் எவரின் தோள்கள்?’’
வினாக்குறியா?......
வெடிக்கும் எரிமலையா?......
புரட்சிக் கவிஞனெனப்
புவியொப்பி மாலைபோடப்
போதாதோ இவ்வரிகள்?...... (ப. 95)

புரட்சிக் கவிஞர் பாரதிதாசனைப் பற்றிய கருத்தரங்கில் காரைக்குடி கணேசரும் கலந்து கொள்ளும் பேற்றினைப் பெற்றிருக்கிறார். அவரை அறிமுகம் செய்ய முனையுமிடத்தில் பாராளும் நம் முதல்வர் தாம் பாட்டாளிகளின் உண்மைத் தோழர் உயிர்த் தோழர் என்பதைத் தாராவிக்கு மட்டுமல்ல தாரணிக்கே எடுத்துக்காட்டி விடுகிறார்.

............................ விடுதலை
நெல்லுக்கு வியர்வை பாய்ச்சி ........இன்று
சொல்லுக்குச் சுவையேற்ற வந்துள்ளார்......

(ப.103)

காரைக்குடி கணேசர் இந்திய விடுதலை இயக்கத்தில் கலந்து கொண்டு இன்னல்கள்பல ஏற்ற செயலை 'விடுதலை நெல்லுக்கு வியர்வை பாய்ச்சி' என்ற சொற்களால் கலைஞர் குறிப்பிடும்போது எந்த நாட்டுப் பற்றாளன்தான் அவருடைய உயர்ந்த உள்ளத்தை உணர்ந்து உருக மாட்டான்?

## 6

வாழ்வெனும் பாதையில் வானுற நடப்பதற்கு வழி காட்டும் கவியரங்கம் ஒன்று ஒரு முறை வானொலியிலே நடந்திருக்கிறது. அக்கவியரங்கிற்குத் தலைமை தாங்கிய நம் முதல்வர் அண்ணல் காந்தியின் அறமுழக்கத்தை எதிரொலி செய்திருக்கிறார்.

பக்தி வெள்ளம்; —நாடு, மொழி, மக்கள்மீது
பாய்ந்தாலே.........
இறைவன் அருள் கிட்டி விடும்.........
ஏழையின் சிரிப்பில்தான் அவன் இருக்கிறான்.........

இதை மறவாதீர் (ப.124)

*இந்த வரிகளில் நேரடியாகப் பாட்டாளிகளை கலைஞர் குறிப்பிடவில்லை. என்றாலும்—ஏழையே பாட்டாளியாக — பாட்டாளியே ஏழையாக — இன்னும் இருக்கும் நிலைக்கு இது பொருந்தும் அல்லவா ?*

7

*தமிழர் திருநாள்—பெரு நாள்—பொங்கல் ஒரு நாள்! அந்நாளின் சிறப்பினைக் காட்டும் கவிதை ஒன்றுமுண்டு. அதில் முதல்வர் — கலைஞரின் முத்துக் கருத்துகள் முழுநிலா ஒளி வழங்குகின்றன.*

> வான் முட்ட எழுந்து நிற்கும் ஆலையிலே
> தான்மட்டும் வாழுதற்குச் சிலர் இருந்தால்
> பேன்பிடித்த தலையாகும் நமது நாடு;
> நான் படித்த மருந்ததற்குச் சமதர்மந்தான்!
> அந்நிலைதான் வருதல் மட்டும்
> இந்நிலையில் உழைப்போர் வாழ
> வகை காணல் மிகவும் நன்று—அதற்கு
> வாய் திறந்து சூளுரைப்போம் இன்று !
> பூட்டுப் போடவில்லை; பொதுவுடைமைக் கொள்கைதனைப்
> புறக்கணித்தும் பேசவில்லை
> ஏட்டுக்குள் இருக்கின்ற அக் குறிக்கோள்
> நாட்டுக்குள் மெல்ல மெல்ல வந்தே தான் தீர வேண்டும்
> பாட்டுக்குள் பொதிந்துள்ள கருத்தெல்லாம்
> பரவுமுன்னே பாங்காகத் தொழில் அமைய நம் நாட்டில்
> கூட்டான அமைப்புக்கள் பெருகிடவே
> பொங்கல் நாளில் புதிய பாதை ஏற்றிடுவோம்!
> இனிய பாதையிதை இடைக்காலப் பாதை யென்போம், பின்னர்
> கனிய வைப்போம் கற்களையே ! (ப. 128)

*இந்தப் பாட்டால்—பாடல் பகுதியால் இந்தத் தமிழ் நாட்டைப் பொதுவுடைமைப் பூங்காவாக ஆக்கக் காலம்*

*பார்த்திருக்கும் கலை உழவர்—கடமை மறவர் நம் கவிஞர் முதல்வர் என்பது விளங்கும் அல்லவா? ஆம்! அவருடைய சொற்களே கற்களையும் கனிவிக்கும்!*

*இனி ஒரு வகையில் இந்தக் கவிதையிலேதான் நம் முதல்வரின் மூலமான நுண்ணறிவும் நூலறிவும் போட்டியிட்டுக் கொண்டு ஒளி வழங்குகின்றன என்று புகலலாம். இதோ சான்று :*

**வறுமையிலே கற்பனைகள் செழிக்குமென்பார்;**
**முத்து முத்தாய்க் கவிபிறக்கும் என நவில்வார்**
**சத்தி முத்தப் புலவரையும்**
**சாத்தக் கவிராயரையும்**
**நித்த நித்தம் அலைகின்ற பாணரையும்**
**கொத்துக் கொத்தாய் உதாரணங்கள் தந்திடுவார்**
**செழிப்பினிலே கவிபிறந்த கதையுந்தான் மெத்தவுண்டு**
**மன்னன் அதிவீரராமன் என்ன ;**
**தென்னவனாம் பாண்டிய வேந்தன் என்ன;**
**கன்னல்மொழிக் கவிப் புலவச் சிங்கமன்றோ ?**
**வறுமையினால் கவிபெருகும் என்று சொல்வோர்**
**வளமையினை ஏழைக்கு அனுமதியாப் பெருஞ்செல்வர்**

*(ப. 132)*

*இறுதி இரண்டு அடிகளில்தான் கலைஞர் கல் நெஞ்சர்க்குக் கொடுக்கும் அடிகள்தான் ஆயிரமாயிரம் எனலாம் அன்றோ?*

## 8

*முன்னர்த் தமிழ் வட்டக் கவியரங்கத் தலைமையுரைக் கவிதையில் கலைஞர் தந்திருக்கும் வரிகளை அறிவோம். அவை இவை :*

**மறவர் பெருமைக்குப் போர்க்களமே வட்டம்**
**உழவர் ஏருக்கு விளைநிலமே வட்டம்**

*(ப. 73)*

இந்த வரிகளுக்கு இணையாக அமையும் இரு வரிகளை இதோ 'கணக்'கிட்டுக் காணலாம்:

பாட்டாளியின் வியர்வையிலே
முதலாளி பார்ப்பதுதான் பணக்கணக்கு (ப. 139)

9

இக் கட்டுரைக்காகக் கலைஞர் கவிதைகளில் நாம் ஆய்ந்தெடுத்த சான்றுகளுள் இன்னும் இரண்டே எஞ்சி யுள்ளன. அவற்றுள்ளும் முதன்மையான ஒன்றை ஈண்டுக் காண்போம். பாராளும் நம் முதல்வரின் பாட்டாளிப் பரிவினுக்குப் பட்டயமாக விளங்கும் ஒப்புயர்வில்லா வரிகள் இவை எனலாம்.

இறைமைதனைத் தமிழின்பால் காண்பதிலும்
ஏழைத்தமிழர் சிரிப்பினிலே
காண்பதுவே சிறப்பென்போம்— (ப. 167)

இந்த வரிகளை ஊன்றிக் காண்பார் நம் கலைஞருக்குத் தமிழ் உடல்தான், ஏழைத் தமிழர் வாழ்வுதான் உயிர் என்ற உண்மை உணர்வர். தமிழினிடத்தில் தெய்வத் தைக் காண்பதிலும் ஏழைத் தமிழன் வாழ்விலே அத்தெய் வத்தைக் காண வேண்டுமென்ற நம் கவிஞரின் சொற்கள் திருமூலர் தெய்வச் சொற்கள் அன்றோ? இவ்வரிகள் இருப தாம் நூற்றாண்டுத் தமிழ் பெற்ற பேறாகும்.

10

கலைஞரின் கவிதைத் தொகுப்பில் அழியாக் கவிதையாய் விளங்குவது 'இதயத்தைத் தந்திடு அண்ணா' என்ற தலைப்பில் நம் முதல்வர் பெருந்தகை எல்லார் இதயத்தையும் பெற்றிடுமாறு பாடியுள்ள வான் கலத்த பெருங் கவிதையேயாகும். அண்ணாவின் புகழ் போல் அழியா வாழ்வு பெறத்தக்க அக்கவிதையில்

வான் மறை தந்த வள்ளுவரே நம் அண்ணனாகப் பிறக்கத் தமிழ்த்தாய், கட்டளை இட்டதாய்க் கற்பனை செய்வர் கலைஞர். வள்ளுவரை அழைத்துத் தமிழ்த்தாய்க் குமுறிய குமுறல் என்ன தெரியுமோ?

சென்றமையக் குடில் இல்லை ஏழைக்கென்றாள்
(ப. 184)

இவ்வாறு பெற்ற தாயின் பெருங் குமுறலைக்கண்ட— கேட்ட—வள்ளுவரின் வாய் வழங்கிய சொற்களையும் அதற்குத் தமிழ்த்தாய் கூறிய மறு மொழியையும் நம் மாண்புமிகு முதல்வரின் மணி மொழிகளிலேயே கேட்போம்.

அழுத கண்ணைத் துடைத்தவாறு
அமுத மொழி வள்ளுவனும்
அம்மா நான் எங்கே பிறப்பதென்றான்,
தொழுத மகன் உச்சிமோந்து—ஆல
விழுதனைய கைகளாலே அணைத்துக் கொண்டு
உழுத வயல் நாற்றின்றிக் காயாது
இனிமேல் என எண்ணி மனமகிழும்
உழவன்போல், உள்ளமெல்லாம் பூரிப்புத் துள்ளி எழ,
கற்கண்டே! தேன்பாகே! திருக்குறளே!
நீ காஞ்சியிலே பிறந்திடுக! என்றாள்
(ப. 184)

இக்கட்டுரை காட்டும் தமிழ்த்தாயின் பொருமலிலும் பூரிப்பிலும்—நைவிலும் நம்பிக்கையிலும்—ஏழையின் இன்னலையும் உழவனின் உள்ளத்தையும் அன்றோ நம் முதல்வர்—தமிழ்த்தாயின் தவப் புதல்வர் காண்கிறார்? காஞ்சி அண்ணன் காசினியில் பிறப்பதற்குக் கலைஞர் கூறும் ஒரே காரணமாக இருப்பது 'காய்ந்த வயிற்றுக்குக் கஞ்சி வார்த்திடவே' என்பதன்றோ? கஞ்சி வார்க்கவே காஞ்சி! பாட்டாளிப் பரிவைக் காட்ட இதனினும் பளிச்

கிடும் சிறந்த சான்று ஏது—ஏன்? பதினாறு சான்றுகளைப் பார்க்கும்போதும்—கேட்கும்போதும்—இதயம் படைத்த எவர்க்கும் உதயமாகக் கூடிய 'ஒரே கேள்வி' முதல்வர் களுள்ளும் பாட்டாளிகளின் பாட்டாளி நம் முதல்வரே அல்லவா?' என்பதேயாகும்.

# கவியரங்கக் கலைஞரின் பொங்கல் கவிதை

மறுமலர்ச்சித் தமிழ்க் கவிதைக்கு—அசை அசைத்த—சீர் போர்த்த—தளை தளைந்த (!) கவிதைக்கு—'உள்ள உணர்ச்சி'க்கும் ஊறி வரும் புது உணர்வுகட்கும் மட்டுமே உயரிய இடம் வழங்கும்—மிக அண்மையில் கிடைத்திருக்கும் பரிசு இன்றைய தமிழக முதல்வர் தமிழவேள்—டாக்டர்—கலைஞர்—கவிஞர்—மு. கருணாநிதி அவர்களின் கவியரங்கக் கவிதைகள் பதினான்கையும் 'இதயத்தைத் தந்திடு அண்ணா!' என்ற கண்ணீர்க் கவிதை ஒன்றையும் தன்னகத்தே கொண்ட 'கவியரங்கில் கலைஞர்' என்ற 187 பக்கங்கள் கொண்ட 6 உருபாய் விலையுள்ள அழகிய வெளியீடு ஆகும். இந்தப் பதினாறு கவியரங்கக் கவிதைகளுள் நான்கு வானொலி வழி வந்தவை (ஒன்று திருச்சி; ஏனைய சென்னை). இந்த நான்குள்ளும் 12-1-70-இல் சென்னை வானொலியில் 'பொங்கல் திருநாள்' என்ற தலைப்பில் நடந்த கவியரங்கில் நம் முதல்வர் வழங்கிய தலைமைக் கவிதையில் பொங்கல் திருநாள் பற்றி அவர் உள்ளத்தில் பொங்கிய எண்ணங்களை மட்டும் எண்ணுவதே இச்சிறு கட்டுரையின் சிறந்த நோக்கம்.

கவிஞர் பொங்கல் திருநாளை 'எழிற் பொங்கல் திருநாள்' என்றும் 'அழகு தமிழ்ப் பொங்கல் நாள்' என்றும் போற்றுகிறார். இதிலிருந்து அவர் பொங்கல் திருநாளில் எழிலை மட்டும் பார்க்கவில்லை, அழகுத் தமிழையும் சேர்த்துப் பார்க்கிறார் என்ற செய்தி விளங்கும். இவ்வாறு உழவர் பெருநாளாகிய பொங்கல் திருநாள் தமிழ்த் திருநாளாய்க் காட்சி அளிப்பதால்தான் அவர்,

---

* தமிழ்ப்பணி—மாசி இதழில் (1972) வெளிவந்த கட்டுரை

'ஏழுவர் தமிழர்' என்றே
உழவர் நாள் கொடி ஏற்றிடுவோம் !
மழவர் நிலம் காப்பதற்கு
மார்தட்டிச் சூள் உரைத்திடுவோம் !

பொங்குக பால் என்று முழங்குகின்றார்.

பொங்கல் திருநாள் புதுமைத் திருநாள்—பொதுமைத் திருநாள்—இயற்கை மறுமலர்ச்சித் திருநாள் என்றெல்லாம் எண்ணும் கலைஞர் அவற்றிற்கெல்லாம் பொன் மெருகூட்டும் தமிழின் பொருண்மையை மறவாமல் போற்றுகிறார்; இதோ அவர் இதயம் :

இன்பக்
காவியத் திருநாளாம் பொங்கலன்று அவற்றைக்
கூவிய குயில்கள் எல்லாம் மீண்டும் கூவ மக்கள்
தூவிய மலர்மலைமேல் மாத்தமிழாள் நடந்துவர—
நம்
மாநிலத்து மாந்தரெல்லாம்
மா, பலா, வாழையெனும் முக்கனியின் சுவையி
னூடே
தித்திப்புப் பொங்கல் தின்றிடவே வேண்டும்.

பொங்கல் திருநாளின் பொலிவுக்கெல்லாம் காரணம் கதிரோன் ! அவன் அருள் இல்லையேல் வாழ்வேது ? வையகம் ஏது ? இந்த உண்மையைக் கலைஞர் கருதும் போது அவருக்குக் கைவந்த கலையை—வாழைப் பழத்தில் ஊசி ஏற்றுவது போலக் கட்சி அரசியலைக் கலந்துவிடும் கலையைக் கைவிடுவாரா ? பாடுகிறார் :

பொங்கல் நாளில் புதுப்புது இன்பம்
எங்கணும் தோன்ற எழுந்தான் கதிரோன் !
எதையும் அன்பால் அணுகி வென்றிட
உதய சூரியன் உயர்ந்தான் இன்று !

இவ்வாறு பழந்தமிழ் மரபுப்படியேயும் இலக்கியத்தோடு அரசியலை இழைத்து விட்ட கலைஞர் அரசியல் கலப்பற்ற அழகுத் தமிழ்க் கவிதை—இயற்கை இன்பக் கவிதை—புத்துவகைக் கவிதை—பாடுவதிலும் வல்லவர் என்பதை உடனடியாகவே புலப்படுத்துகிறார். ஆனால் அந்த நேரத்திலும் 'ஏழையின் சிரிப்பில் இறைவனைக் காணும்' முதல்வர் உழவனின் — உழவை — உழத்தலை — உழைப்பை மறக்கவில்லை! இன்னும் சொல்லப் போனால் இயற்கை மழையிலும்—பாடுபடும் உழவனின் உடல் வியர்வையே பொங்கல் அறுவடைக்கு அடிப்படை என்பதை நயனும் பயனும் தோன்ற நவில்கிறார். அவ்வாறு பாட்டிலே பாட்டாளியின் பாட்டை அரங்கேற்றி வான்சிறப்பிலும் வியர்வைச் சிறப்பை உலகம் உணர்ந்து உருகச் செய்யும் கலைஞர் பெருந்தகை அவன் பாட்டால் விளைந்த பயிர் முற்றித் தலை சாய்ந்திருக்கும் தன்மையைத் தன்பாட்டால்—புது உவமைக் கற்பனையோடு பாடும் பாட்டோ பாட்டு. அது இது:

உழவரது வியர்வையினால் சூல் கொண்ட
கழனித்தாய் தன்வயிற்றில் மகளாய் வந்து
அனைவரது சீராட்டும் பெற்றுக் கொண்ட
கதிராம் மங்கை
மணவறையிற் பொன்போலத் தலைகுனிந்து
நிற்கின்றாள் பொங்கல் நாளில் !

புத்துவமைக் கவிஞர் — கலைஞர்க்கு நம் பொங்கல் — வாழ்த்துகள்—வணக்கங்கள். நாளும் கலைஞர் தம் புகழ் கேட்டுத் தாம் நாணி தலை சாய்ந்திருப்பதை முற்றி வளைந்த கதிருக்கு முழு உவமையாய்ச் சொல்லும் 'கலைஞர் தாசன்'—'கவிஞர் தாசன்' கருவாகி உருவாகிக் காற்றென — பொங்கல் கரும்பென — பொலிந்து வருவானாக !

# வள்ளுவர் வழியில் கலைஞர்

## I

1. என் முன்னே இருப்பன இரண்டு. ஒன்று : திருக்குறள்; மற்றொன்று : '**கவியரங்கில் கலைஞர்**'.

உங்கள் முன்னே இருப்பன இரண்டு. ஒன்று : கலைஞர் என்னும் ஒரு பெருங்காப்பியக்கடல்; மற்றொன்று அக்கடலை அள்ள—இல்லை—சுவைக்க அவாவும் சிறு அகப்பை.

2. ஐந்தாண்டுகட்கு முன்பு ஒருநாள்—ஓரிரவு தமிழ்த் தாய் தன் தவப்புதல்வனை இழந்தது எண்ணி இயற்கை அன்னை இருளாடை போர்த்து வருந்திய வண்ணம் இருந்தாள். அப்போது அவள் வான்வழி வந்த இலக்கியத் தாயின் இன்(னல்) குரல்கேட்டு அவ்வொலியில் ஒன்றினாள்; ஒலியா அருவியானாள். அவள் கண்கள் அருவியாக அவள் செவியில் கொட்டிய இலக்கிய அருவி—அவல அருவி—யாது ? '**இதயத்தைத் தந்திடு அண்ணா!**' ஆம். அண்ணாவின் இதயத்தைப்போல் அனைவர் இதயத்தையும் கேட்கும் அந்த அழியாத் தமிழ்க் கவிதையின் ஒருபகுதி :

''ஈராயிரம் ஆண்டின் முன்னும் இன்றுபோல்
இளையவளாய் இருந்திட்ட தமிழாம் அன்னை
நூறாயிரம் கோடிஎன ஆண்டுபல வாழ்வதற்கு
நூலாயிரம் செய்திட்ட புலவர்களை ஈன்றாள்
எனினும்
கலைமகளாம் நம் அன்னை வள்ளுவனைத்
தலைமகனாப் பெற்றெடுத்தாள்.

---

* காஞ்சி—அறிஞர் அண்ணா நினைவு மலரில் (1975) வெளிவந்த கட்டுரை

மலர் என்றால் தாமரைதான்
மன்னன் என்றால் கரிகாலன்
நூல் என்றால் திருக்குறளே
எனப்போற்றும் அறப்பனுவல்
அளித்திட்டான்; மாந்தரெல்லாம் களித்திட்டார்!
விண்முட்டும் மலையோரம்—நம்
கண்பட்டும் படாமலும் எழுகின்ற நச்சுமரம்போல்
பண்பட்ட தமிழர் வாழ்வில்—முதுகில்
புண்பட்ட கொள்கையெல்லாம் மூண்டதந்தோ!
சாதிகளைக் காணாது குறள் ஒலித்த தமிழ் மண்ணில்
பாதியிலே வந்ததம்மா பலகோடி சாதிகளும்!
அறிவுமணங் கமழ்கின்ற ஆலயங்கள் அற்றுப்போய்
ஆயிரம் தெய்வங்கள் உறைகின்ற கோயில்கள்
கண்டுவிட்டார்.

மொழியுணர்வே இல்லாத வாயுணர்வின்
மாக்கள்—தமிழ்
அழியினும் வாழினும் என்னென்று இருந்திட்டார்.
அறநெறியே குறிக்கோளாய்த் திகழ்ந்திட்ட
[பெருநிலத்தில்
பிறநெறிகள் பயிர் செய்தார்; பிழை குவித்தார்.
மழையற்றுப் போனவயல்போல் மாறிற்றுத்
தமிழர் மனம்
அழுக்காறு—அவா—வெகுளி—இன்னாச்சொல்
நான்குமின்றி
நடக்காது வேலையென்று நடந்திட்டார் சில தமிழர்!
பொருளிலார்க்கு இவ்வுலக மில்லையென்று
பொருள் குவித்து வளம் செழித்த நாட்டில்—இன்று
இருள் கவிந்து வாட்டம் கொடிபோட்ட தங்கே.
வாடினாள் தமிழன்னை—சோகப் பாட்டுப்
பாடினாள் தமிழன்னை—சுடுநெருப்பில்
ஆடினாள் தமிழன்னை—
ஓடினாள்...ஓடினாள்...ஒரு வழியும் கிடைக்கவில்லை!
புலியூர் விட்டுப் புகழூரில் வாழுகின்றான்

கவியூரின் பெருவேந்தன் குறளாசான்
ஆண்டுச் சென்று : 'அருமை மகனே !
வேண்டுகோள் ஒன்று விடுத்தேன்' என்றாள்.
'என்னம்மா ?' என்றான் குறளோன்.
'தோண்டுகின்ற இடமெல்லாம் தங்கம் வரும் தமிழகத்தில்
மீண்டும் நீ பிறந்திட வேண்டும்' என்றாள்.
'தங்கம் எடுக்கவா ?' என்றான்
'தமிழர் மனம் வாழ்வெல்லாம்
தங்கமாக ஆக்க' என்றாள்.
'இன்றென்ன ஆபத்' தென்றான்;
'குன்றனைய மொழிக்கு ஆபத்'தென்றாள்;
சென்றமையக் குடில் இல்லை ஏழைக்கென்றாள்;
கடிதோடிச்சி மெல்ல எறியத் தெரியாமல்
கொன்றெறியும் கோல் ஓங்கிற்றென்றாள் : அளவில்
கன்றனையோர் வீணில் கதைக்கின்ற கதையும் சொன்னாள்.
அழுத கண்ணைத் துடைத்தவாறு
அமுத மொழி வள்ளுவனும்
அம்மா நான் எங்கே பிறப்பதென்றான்;
தொழுத மகன் உச்சிமோந்து —ஆல
விழுதனைய கைகளாலே அணைத்துக்கொண்டு
உழுதவயல் நாற்றின்றிக் காயாது இனிமேல் என
எண்ணி மனம் மகிழும்
உழவன்போல் உள்ளமெல்லாம் பூரிப்புத் துள்ளி எழ
காய்ந்த வயிற்றுக்குக் கஞ்சி வார்த்திடவே
கற்கண்டே! தேன்பாகே! திருக்குறளே!
நீ காஞ்சியிலே பிறந்திடுக!' என்றாள்.
பிறந்திட்டான் நம் அண்ணனாக,
அறிவு மன்னனாக—'
("கவியரங்கில் கலைஞர்", பக். 182-184)

# II

3. கலைஞர் தம் கவிதைகளில் திருக்குறளைப் பற்றி உரைத்துள்ள உரைகளைப் பின்வரும் அடிப்படைகளில் (ஒன்றோடொன்று தொடர்புடையனவே ஆயினும்) வகை தொகை செய்யலாம்:

1. திருக்குறள் புகழ்
2. திருக்குறள் ஆட்சி (இருவகை)
3. திருக்குறள் ஆட்சிகளின் பயில்வெண் விளக்கம்.
4. திருக்குறள் ஈடுபாடு
5. திருக்குறள் ஆட்சி—மாட்சி (நயம்)
6. திருக்குறள் ஈடுபாட்டுக்குக் காரணம்
7. திருக்குறள் வழிச் சிந்தனை
8. திருக்குறள் ஆராய்ச்சி
9. திருக்குறளை ஒட்டி நகைச்சுவை
10. திருக்குறளும் கட்சியும் அரசியலும்
11. திருக்குறள் வழி வாழ வேட்கை.
12. திருவள்ளுவர் வாழ்க்கை பற்றி ஆராய்ச்சி

## 3.1 திருக்குறள் புகழ்

1. மறைக்குளம் திருக்குறளே!
   மறைக்கு உளம் திருக்குறளே! (ப. 41)
2. இத்தரை போற்றும் கற்றறி வள்ளுவர் (ப. 47)
3. மாமேதை வள்ளுவர் (ப. 51)
4. தமிழ்மேதை வள்ளுவர் (ப. 53)
5. இருளுடையார்க்கு நெஞ்சத்தில் விளக்கேற்றி வைத்தார் (ப. 55)
6. அருமறையாம் திருக்குறள் (ப. 70)

7. செவ்வாழைக் குறள் (ப. 80)
8. புவியாளப் புகன்ற குறள் (ப. 81)
9. பைந்தமிழ்த் தேர்ப் பாகன் (ப. 126)
10. நூல் என்றால் திருக்குறளே (ப. 182)
11. சாதிகளைக் காணாது குறள் ஒலித்த தமிழ் மண் (ப. 183)
12. புவியூர் விட்டுப் புகழூரில் வாழுகின்றான் கவியூரின் பெருவேந்தன் குறளாசான் (ப. 183)
13. அமுதமொழி வள்ளுவன் (ப. 184)
14. கற்கண்டே! தேன் பாகே! திருக்குறளே! (ப. 184)

கலைஞரின் செவ்வாழைக் கருத்து கருதத் தக்கது!

## 3. 2. திருக்குறள் ஆட்சி

'கவியரங்கில் கலைஞ'ரில் வேறு எந்தத் தமிழ் இலக்கியத்தை விடவும் திருக்குறளின் ஆட்சி மிகுதியாக இருப்பதைக் காண்கிறோம். இது புரிந்து கொள்ளத்தக்கது; போற்றுதற்கும் உரியது.

கலைஞர் கவிதைகளில் திருக்குறள் ஆட்சி புரிவதை எளிதில் காணலாம். முன்னது நேராட்சி (Direct Quotation) பின்னது நெகிழ்வாட்சி (Indirect Quotation); ஆனால் விரைந்து குறிக்கத்தக்கது. நெகிழ்வு மிகவும் குறைவே என்பதாகும்.

பின்வரும் பட்டியல்கள் இவ்விருவகை ஆட்சிகளையும் வகைப்படுத்திக் காட்டும். அத்துடன் உரிய திருக்குறள் எண்களையும் உடனுக்குடன் காண உதவும்.

## II ஆ

# திருக்குறள் ஆட்சி—1

| | நேராட்சி | பக்க எண் | திருக்குறள் எண் |
|---|---|---|---|
| 1. | சுவைஒளி ஊறுஓசை நாற்றமென்று ஐந்தின் வகை தெரிய—விரித்துரைப்பீர்... | 11 | 27 |
| 2. | ..........வள்ளுவரும் | | |
| | ''மக்கள் மெய்தீண்டல் உடற்கின்பம்'' என்றார்... | 12 | 65 |
| 3. | நிரந்தினிது சொல்லுதல் வல்லார்ப் பெறின்— விரைந்து தொழில் கேட்கும் ஞாலம்— எனும் வள்ளுவர் கருத்தை...... | 13 | 648 |
| 4. | வாய்ச் சொற்கள் என்ன பயனுமில கண்ணோடு கண்ணினை நோக்கொக்கின் என வாதாடப் போகின்றார்... | 13-14 | 1100 |
| | வள்ளுவரும் அவர் குறளில் 'கண்' என்ற சொல்லுக்கே மிகுந்த இடம் தந்துள்ளார்... கூற்றமோ—கண்ணோ—குறளில்! | | 1083 |

| | | |
|---|---|---|
| கொடும்புருவம் எனத் தொடங்கி...<br>இ பள்கண் எனமுடியும் ஒருகுறள்! | | 1086 |
| இ நநோக்கு இவளுண்கண் உள்ளது<br>எனப் பறைசாற்றும் பிறிதோர் குறள்! | | 1091 |
| 'மலரன்ன கண்ணாள்' மற்றோர் குறள்— | | 1142 |
| 'கண்ணோட்டம் என்னும் கழிபெருங் காரிகை<br>உண்மையான் உண்டிவ் வுலகு' | | 571 |
| (கண்ணோட்டம் என்ற சிறந்த அழகு இருப்பாதல்தான் இந்த உலகம் அழியாமல் இருக்கிறது) | | |
| இப்படிப் பல்வேறு குறட்பாக்கள் இவர்பக்கம் இருப்பதால்— | | 1100 |
| 5. மோப்பத்தால் அனிச்சமலர் குழைய வைக்கும்<br>மூக்கென்றார், வள்ளுவரும்!... | 15 | 90 |
| 6. செல்வத்துட்செல்வம் செவிச்செல்வம் அச்செல்வம்<br>செல்வத்து ளெல்லாம் தலை | 15 | 411 |
| 7. காலை அரும்பிப் பகலெல்லாம் போதாகி<br>மாலை மலரும் நோய் பற்றி | 24 | 1227 |
| 8. ஏழை வடிக்கும் கண்ணீரோ வேல் ஆகும்<br>வாள் ஆகும்<br>'அல்லற்பட்டு ஆற்றாது அழுதகண் ணீரன்றே<br>செல்வத்தைத் தேய்க்கும் படை' | 42 | 555 |

| | நேராட்சி | பக்க எண் | திருக்குறள் எண் |
|---|---|---|---|
| 9. | இன்னாசெய் தாரை ஒறுத்தல் அவர்நாண<br>நன்னயம் செய்து விடல் நலமென்றார்; குறளார் | 55 | 314 |
| 10. | வானின்று உலகம் வழங்கி வருதலால்<br>தானமிழ்தம் மழை யன்றோ... | 60 | 11 |
| 11. | துப்பார்க்குத் துப்பாய துப்பாக்கித் துப்பார்க்குத்<br>துப்பாய தூஉம் மழையன்றோ | 60 | 12 |
| 12. | கெடுப்பதூஉங் கெட்டார்க்குச் சார்வாய் மற்றாங்கே<br>எடுப்பதூஉம் எல்லாம் மழையன்றோ... | 60 | 15 |
| 13. | நீர்இன்று அமையாது உலகெனினும்—அதனை<br>வகைப்படுத்த<br>ஆறின்றி இயலாது என உணர்ந்தார்... | 60 | 20 |
| 14. | உழுவார் உலகத்தார்க்கு ஆணி | 61 | 1032 |
| | உழந்தும் உழவே தலை—என<br>எழுவார் வள்ளுவரும் வாழ்த்துரைக்க... | 61 | 1031 |
| 15. | மயிர்நீப்பின் வாழாக் கவரிமா அன்னார்<br>உயிர்நீப்பர் மானம் வரின், என்றே<br>மறவர்க்கிலக்கணம் வரைந்தது குறளும்! | 74 | 959 |
| | அதை | | |
| | மறவர் சிலரோ வரியை மாற்றி<br>'உயிர்நீப்பின் வாழாக் கவரிமா அன்னார் | 74 | 969 |

| | | | |
|---|---|---|---|
| | மயிர் நீப்பர் மானம் வரின்' என்று<br>மொட்டையடிக்கின்றார் தேர்தல் பந்தயத்தில்... | | |
| | யானையினைக் குறிபார்த்துத் தவறும் வேல்<br>கானமுயல் கொன்றெறியும் அம்பின் மேல்... | 7 | 772 |
| | இந்த<br>மானமொழி வழங்குகின்றான் 'குறள் வீரன்...<br>இன்று,<br>பூனை குறுக்கானால் போச்சுதடா உயிர் என்று<br>ஞானமொழி பேசுகின்றான் தமிழ் வீரன்! | | |
| 16. | நட்புக்கோர் அதிகாரம் | 76 | 79 |
| | நட்பாராயப் பிறிதோர் அதிகாரம் | | 80 |
| | பழகுதலுக்கோர் அதிகாரம் | | 81 |
| | பாங்குடனே 'தீ நட்பு', 'நட்பு' எனப் | | 82-83 |
| | பகுத்து ஒவ்வொன்றுக்குமோர் அதிகாரம்...<br>வகுத்தளித்த வள்ளுவரும்...<br>நண்பர்களால் மெத்தப் பாடுபட்டாரோ...<br>நம்மைப்போல ! | 77 | |
| 17. | 'மழித்தலும் நீட்டலும் வேண்டா உலகம்<br>பழித்தது ஒழித்து விடின்'' | 79 | 280 |
| | இதைமறுப்பார் கயவரிலே ஒருவகையாம் | 79 | |
| 18. | 'கருவியும் காலமும் செய்கையும் செய்யும்<br>அருவினையும் மாண்டது அமைச்சு' | 80 | 631 |
| | 'தெரிதலும் தேர்ந்து செயலும் ஒருதலையாச் | | |

| | நேராட்சி | பக்க எண் | திருக்குறள் எண் |
|---|---|---|---|
| | சொல்லும் வல்லது அமைச்சு' | ,, | 634 |
| | 'பழுதெண்ணும் மந்திரியின் பக்கத்துட் தெவ்வோர் | | |
| | எழுபது கோடி உறும்' | | 639 |
| | இவ்வினைத் தேடும் அமைச்சனை விடவே | | |
| | எழுபது கோடிப் பகைவர்கள் மேலாம்... | | |
| | இவ்வாறு அமைச்சு பற்றிச் | | |
| | செவ்வாழைக் குறள் கருத்தில் | | |
| 19. | நிலமாளும் எங்களுக்குத் | | |
| | தூங்காமை கல்வி துணிவுடைமை | 81 | 383 |
| | நீங்காமல் இருக்க வேண்டுமென்றார்...நான் | | |
| | கற்றது சிறிதெனினும்...கவியெழுத இரவெல்லாம் | | |
| | தூங்கவில்லை...வேறு ஓய்வுமில்லை ! | | |
| | துணிவுடைமை இருப்பதாலே | | |
| | அணி சீர் தளை தொடை எதுவுமின்றிக் கவி | | |
| | அரங்கேற வந்து விட்டேன்... | | |
| | புவியாளப் புகன்ற குறள்—என் | | |
| | கவியாளத் திருத்திக் கொண்டேன் ! | | |
| | அதற்காகக் கவியரங்கீர்; | | |
| | கடிதோச்சி மெல்ல எறிக எனக் | | 562 |
| | கேட்டுக் கொள்வேன்... | | |
| 20. | அடங்காச் சினத்தாலே | | |
| | அடபாவி அழிந்திடுக என்கின்றேன் ! | | |
| | 'அறிவறிந்து ஆற்றின் அடங்கப்பெறின் | 85 | 123 |

செறிவறிந்து சீர்மை பயக்கும்' என்று
அன்புறுவாய் வள்ளுவரும் அடக்குகின்றார்...
அடக்கமுடைமை அது—என் செய்வேன் ?
மாடிழந்து கன்றிழந்து ஒண்டும்
வீடிழந்து உழல்கின்றார் நடுத்தெருவில்...
இந்நிலைக்கு வித்திட்ட
இழிதகையோர் வீழ்க என்று
இருதயத்தை அமுக்கிக் கொண்டு கத்துகின்றேன்...
'இருள் சேர்ந்த இன்னா உலகம் புகல்
அருள் சேர்ந்த நெஞ்சினார்க்கில்லை' என்று — 243
அருளுடைமை அருள்கின்றார் குறள் அறிஞர்...

| | | |
|---|---|---|
| அன்புடைமை— | அதி. எண். | 8 |
| அறிவுடைமை— | ,, | 43 |
| ஆள்வினையுடைமை— | ,, | 62 |
| பண்புடைமை— | ,, | 100 |
| நாணுடைமை— | ,, | 102 |
| பொறையுடைமை— | ,, | 16 |
| ஒழுக்கமுடைமை— | ,, | 14 |
| ஊக்கமுடைமை — | ,, | 60 |

இப்படிப் பத்துடைமை இயற்றிக் காட்டி
எனைத் தேற்ற முயல்கின்றார் வள்ளுவரும்—
ஆனால்,

| | நேராட்சி | பக்க எண் | திருக்குறள் எண் |
|---|---|---|---|
| | சொத்துடைமை இல்லாத மக்கள்—<br>சொறி நாய் போல் எரிநெருப்பின்<br>பெருநாக்கில் சிக்கி விட்ட சீரழிவை<br>ஒரு நாக்கால் சொல்வதற்கோ முடியுமய்யா ?...<br>கருநாக்கு படைத்தவரே !...<br>சபித்திடுவீர் கயவர்களை... எனச் சொன்னால்,<br>வள்ளுவரின் திருவாக்கும் உடன் சேரும்—அவ்வாக்கு,<br>'என்பி லதனை வெயில்போலக் காயுமே<br>அன்பி லதனை அறம் !' | | |
| | அந்த | | |
| | அறம்பாடி அநியாய மனிதர்களை அழித்திடுவோம்,<br>புறம்பாடி வாழ்ந்திருந்த தமிழகத்தில்<br>பொல்லாங்கை ஒழித்திட்டோம் என்று புதிய<br>திறம்பாடி மகிழ்ந்திருப்போம்—தீமைகளைச்<br>சாய்த்திடுவோம்—<br>தீவைக்கும் பிராணிகளை மாய்த்திடுவோம்—<br>இங்கு ; | | |
| 21. | செல்வத்துட் செல்வம் செவிச்செல்வம்<br>என்றவர்தான்... | 119 | 411 |
| | பொருளிலார்க்கு இவ்வுலகமில்லை யெனப்<br>புரிய வைத்தார்... | | 247 |

## திருக்குறள் ஆட்சி — 2

| | நிரையாட்சி | பக்க எண் | திருக்குறள் எண் |
|---|---|---|---|
| | வேறொரு வேல்தேடி அலுத்த பின்னர்—தன் மார்பினிலே தைத்திருக்கும் வேல் கண்டு மகிழ்ந்தானென்று கூறுகின்ற குறளே வீரம். | | |
| 5. | கைவேல்களிற்றோடு போக்கி வருபவனைக் காட்டுகின்ற குறள் தான் | 31 | 774 |
| | கண்ணொடு கண்ணினை நோக்கொக்கின் என்று காதல் தேன் பொழியும். | | 1100 |
| 6. | புறந்தூய்மை நீரான் அமைவதற்குக் காவிரியும் அகந்தூய்மை வாய்மையாற் காணப்படக் | 35 | 298 |
| | கல்லூரியும்—காவிரி | | 733 |
| 7. | தீரமுள்ள இவ்விடத்தில் ஈரமுண்டு ஈதலுண்டு இசைபட வாழ்தலுண்டாம்... | | 231 |
| 8. | பிறப்பாலே புகழ் இல்லை...பெற்ற சிறப்பாலே புகழ் என்று அறப்பாலைப் பாடி வைத்தான்— | 47-48 | 972 |
| 9. | யாகாவா ராயினும் நாகாத்தல் அடக்கத்தின் முதற்படியாம் ! | 53 | 127 |
| 10. | இகழ்வார்ப் பொறுத்தல் தலையாய்க் கொண்டோன் அகழ்வார் தாங்கும் நிலமென நவின்றார்... | | 151 |
| 11. | தன்னையே கொல்லும் சினம் என்று தமிழ் மேதை வள்ளுவரும் குறள் தந்தார் | 54 | 305 |

| | | | |
|---|---|---|---|
| 12. | பொருளுடையார்க் கிவ்வுலகம்<br>அருளுடையார்க் கவ்வுலகமென்று<br>இருளுடையார் நெஞ்சத்தில் விளக்கேற்றிவைத்தார் | 55 | 247 |
| 13. | காட்சிக்கெளியன் கடுஞ்சொல்லன் அல்லன் எனில்<br>ஆட்சிக்கிவன் தான் சரியோ என்று...<br>சாட்சிக் கூண்டு ஏறவும் தயங்கார்... | 57 | 386 |
| | காட்சிக் கெளியன் காந்தியின் சீடன்<br>கடுஞ்சொல் கூறான் புத்தரின் தொண்டன்<br>ஆட்சிக் கிவனே அமைதலும் நன்று—குறள்<br>மாட்சிக் கிவனே தகுந்தசான்று | 57 | |
| 14. | நீர் இன்று அமையாது உலகெனினும்—அதனை<br>வகைப்படுத்த<br>ஆறின்றி இயலாது என உணர்ந்தார்... | 60 | 20 |
| 15. | இறந்திடுவேன், எதிர்ப்பினிலே...<br>என் தலைவன் இருவிழியும் நீர்பொழிய! அச்சாவை<br>இரந்திடுவேன், எதிர்ப்பினிதே...<br>மறத்திடுமோ திருக்குறளும்? மறக்கவில்லை! | 73 | 780 |
| 16. | விழுப்புண் படாத நாள் எல்லாம்—வீரன்<br>வீணான நாள் என்பான் என்ற குறட்பாடல்...<br>துள்ளி வருகுது வேல்<br>துடித்து நின்றது இமையென்றால்<br>எள்ளி நகைப்பான் வள்ளுவனும்... | | 776 |
| 17. | யானையினைக் குறிபார்த்துத் தவறும் வேல்<br>கானமுயல் கொன்றெறியும் அம்பின் மேல்... | 74 | 772 |

| | நிரையாட்சி | பக்க எண் | திருக்குறள் எண் |
|---|---|---|---|
| | இந்த<br>மானமொழி வழங்குகின்றான் ''குறள் வீரன்...<br>இன்று;<br>பூனை குறுக்கானால் போச்சுதடா உயிர் என்று<br>ஞான மொழி பேசுகின்றான் தமிழ் வீரன்! | | |
| 18. | பெய் என்றால் பெய்து விடும் மழை என்றார், கவிஞர்<br>கற்புநிறை பெண்ணை அந்தக்<br>கடுஞ்சோதனைக்கு ஆளாக்கி<br>மழை பெய்யா விட்டாலோ<br>மாசு தூவிடல் முறையன்று... | 78 | |
| | பெய்யெனப் பெய்யும் மழை என்று பெண்ணைப்<br>பெருமையாய்ச் சொன்ன குறள்...நல்ல<br>பெண்ணொருத்தி பெய்யெனப் பெய்கின்ற மழை<br>போன்றாள்...<br>எனும் கருத்தை நிலை நாட்டும்...<br>பழங்கருத்து; தலை காட்டும்; துரத்தவேண்டும்— | 55 | |
| 19. | அரங்கின்றி வட்டாடுகின்றார்<br>அரசியலில் பலபேர்... | 110 | 401 |
| 20. | அவிசொரிந்து ஆயிரம் வேள்விகள் செய்வோன்<br>அந்நாள் ஆள்வோன்<br>கவிதெரிந்து ஆயிரம் பாடல்கள் புனைவோன் இந்நாள்<br>ஆள்வோன் | 111 | 259 |

| | | | |
|---|---|---|---|
| 21. | முகத்திரண்டு புண்ணுடையார் கல்லாதோர் எனில்<br>—கற்றவரோ<br>முப்பத்திரண்டு புண்ணுடையராய் விளங்கல் ஏனோ;<br>—சிந்தித்தீரா? | 116 | 393 |
| 22. | அறங்கூறும் வள்ளுவர்க்கு வாய்த்த நல்<br>தொண்டர்களாய்ப்<br>புறங்கூறுல் புறக்கணித்துப் புவியாண்டால்;<br>—நம் | 118 | 183 |
| | திறங் கூறப் புலவர் கூட்டம்<br>திரண்டு வரும்...தேசம் வாழ்த்தும்... | | |
| 23. | குடிதோச்சி மெல்ல எறியக் கற்றுக்கொண்டேன்<br>—அவ்வளவே ! | 169 | 562 |
| 24. | என்பு தோலாய் ஆன இந்தியர்<br>அன்புறு காந்தியின் அருளால் இன்று<br>எழுந்தனர் அடிமைத் தளையினை அறுத்து !<br>முழங்குவோம் விடுதலை முரசினை எடுத்து<br>என்றே அண்ணா, அன்றே சொன்னார்... | 180 | 80 |
| 25. | மொழியுணர்வே இல்லாத வாயுணர்வின் மாக்கள்<br>—தமிழ்<br>அழியினும் வாழினும் என்னென்று இருந்திட்டார். | 183 | 420 |
| 26. | அழுக்காறு—அவா—வெகுளி—இன்னாச்சொல்<br>நான்குமின்றி<br>நடக்காது வேலையென்று நடந்திட்டார் சில தமிழர்! | | 35 |

| | நிரையாட்சி | பக்க எண் | திருக்குறள் எண் |
|---|---|---|---|
| 27. | பொருளிலார்க்கு இவ்வுலக மில்லையென்று<br>பொருள் குவித்து வளம் செழித்த நாட்டில் - இன்று<br>இருள் கவிந்து வாட்டம் கொடிபோட்ட தங்கே. | | 247 |
| 28. | குடிதோச்சி மெல்ல எறியத் தெரியாமல்<br>கொன்றெறியும் கோல் ஓங்கிற்றென்றாள்; | 184 | 562 |

(திருத்தம் : 1. நெகிழ்வாட்சி, நிரையாட்சி என்று மேலும் திருத்தம் பெற்றுள்ளது.
2. நேராட்சியில் உள்ள எண் 5, 15-ன் பிற்பகுதி நிரையாட்சிக்கு உரியவை.)

3. 3. மேற்கண்ட இருவகைப் பட்டியல்களாலும் கலைஞர் கவிதைகளில் காணப்படும் திருக்குறளாட்சியின் திறப்பாடுகளை இனி ஒன்றன்பின் ஒன்றாய்க் காண்போம். அதில் முதலாவதாகத் திருக்குறள் ஆட்சியின் வகைதொகை பயில்வெண் விளக்கம் பார்ப்போம். அதற்குரிய பட்டியல் அடுத்துள்ளது.

## கவியரங்கில் கலைஞர்' எடுத்தாண்டுள்ள திருக்குறள் பாக்களின் வகை விளக்கம்—1

| வரிசை எண் | குறட்பா எண் | பால் | இயல் | அதிகாரம் |
|---|---|---|---|---|
| 1. | 11 | அறம் | பாயிரம் | வான்சிறப்பு |
| 2. | 12 | ,, | ,, | ,, |
| 3. | 15 | ,, | ,, | ,, |
| 4. | 20 | ,, | ,, | ,, |
| | | | | 4 |
| 5. | 27 | ,, | ,, | நீத்தார் பெருமை |
| | | | 5 | |
| 6. | 55 | ,, | இல்லறம் | வாழ்க்கைத்துணை நலம் |
| 7. | 65 | ,, | ,, | மக்கட்பேறு |
| 8. | 77 | ,, | ,, | அன்புடைமை |
| 9. | 80 | ,, | ,, | ,, |
| | | | | 2 |

| வரிசை எண் | குறட்பா எண் | பால் | இயல் | அதிகாரம் |
|---|---|---|---|---|
| 10. | 90 | ,, | ,, | விருந்தோம்பல் |
| 11. | 116 | ,, | ,, | நடுவுநிலைமை |
| 12. | 118 | ,, | ,, | ,, |
| 13. | 123 | ,, | ,, | அடக்கமுடைமை |
| 14. | 127 | ,, | ,, | ,, |
| | | | | 2 |
| 15. | 151 | ,, | ,, | பொறையுடைமை |
| 16. | 169 | ,, | ,, | அழுக்காறாமை |
| 17. | 180 | ,, | ,, | வெஃகாமை |
| 18. | 183 | ,, | ,, | புறங்கூறாமை |
| 19. | 184 | ,, | ,, | ,, |
| | | | | 2 |
| 20. | 231 | ,, | ,, | புகழ் |
| | | | 15 | |

| | | | | |
|---|---|---|---|---|
| 21. | 243 | ,, | துறவறம் | அருளுடைமை |
| 22. | 247 | ,, | ,, | ,, |
| | | | | 2 |
| 23. | 259 | ,, | ,, | புலால்மறுத்தல் |
| 24. | 280 | ,, | ,, | கூடாவொழுக்கம் |
| 25. | 298 | ,, | ,, | வாய்மை |
| 26. | 305 | ,, | ,, | வெகுளாமை |
| 27. | 314 | ,, | ,, | இன்னா செய்யாமை |
| | | 27 | 7 | |
| 28. | 383 | பொருள் | அரசு | இறைமாட்சி |
| 29. | 386 | ,, | ,, | ,, |
| | | | | 2 |
| 30. | 401 | ,, | ,, | கல்லாமை |
| 31. | 411 | ,, | ,, | கேள்வி |
| 32. | 555 | ,, | ,, | கொடுங்கோன்மை |
| 33. | 562 | ,, | ,, | வெருவந்த செய்யாமை |

| வரிசை எண் | குறட்பா எண் | பால் | இயல் | அதிகாரம் |
| --- | --- | --- | --- | --- |
| 34. | 571 | ,, | அரசு | கண்ணோட்டம் |
| | | | 7 | |
| 35. | 631 | ,, | அமைச்சியல் | அமைசசு |
| 36. | 634 | ,, | ,, | ,, |
| 37. | 639 | | ,, | ,, |
| | | | | 3 |
| 38. | 648 | ,, | ,, | சொல்வன்மை |
| | | | 4 | |
| 39. | 772 | ,, | படையியல் | படைச்செருக்கு |
| 40. | 774 | ,, | ,, | ,, |
| 41. | 776 | ,, | ,, | ,, |
| 42. | 780 | ,, | ,, | ,, |
| | | | 4 | 4 |

| 43. | 969 | ,, | குடியியல் | மானம் |
|---|---|---|---|---|
| 44. | 972 | ,, | ,, | பெருமை |
| 45. | 1031 | ,, | ,, | உழவு |
| 46. | 1032 | ,, | ,, | ,, |
| | | | | 2 |
| 47. | 1066 | ,, | ,, | இரவச்சம் |
| | | 20 | 5 | |
| 48. | 1083 | காமம் | களவு | தகையணங்குறுத்தல் |
| 49. | 1086 | ,, | ,, | ,, |
| | | | | 2 |
| 50. | 1091 | ,, | ,, | குறிப்பறிதல் |
| 51. | 1100 | ,, | ,, | ,, |
| | | | | 2 |

| வரிசை எண் | குறட்பா எண் | பால் | இடம் | அதிகாரம் |
|---|---|---|---|---|
| 52. | 1142 | ,, | ,, | அலரறிவுறுத்தல் |
| | | | 5 | |
| 53. | 1227 | ,, | கற்பு | பொழுது கண்டிரங்கல் |
| | | 6 | | |

# II

## 'கவியரங்கில் கலைஞர்' எடுத்தாண்டுள்ள திருக்குறள் பாக்களின் பயில்வெண் கணக்கீடு

| வரிசை எண் | குறட்பா எண் | பயில் வெண் | திருக்குறள் |
|---|---|---|---|
| 1. | 20 | 2 | நீர்இன்று அமையாது உலகெனின் யார்யார்க்கும்<br>வான்இன்று அமையாது ஒழுக்கு |
| 2. | 80 | 2 | அன்பின் வழியது உயிர்நிலை அஃதிலார்க்கு<br>என்புதோல் போர்த்த உடம்பு |
| 3. | 90 | ,, | மோப்பக் குழையும் அனிச்சம் முகந்திரிந்து<br>நோக்கக் குழையும் விருந்து |
| 4. | 247 | ,, | அருளில்லார்க்கு அவ்வுலகம் இல்லை பொருளில்லார்க்கு<br>இவ்வுலகம் இல்லாகி யாங்கு |
| 5. | 280 | 2 | மழித்தலும் நீட்டலும் வேண்டா உலகம்<br>பழித்தது ஒழித்து விடின் |
| 6. | 411 | ,, | செல்வத்துள் செல்வம் செவிச்செல்வம் அச்செல்வம்<br>செல்வத்து ளெல்லாந் தலை |

| வரிசை எண் | குறட்பா எண் | பயிச் எண் | திருக்குறள் |
|---|---|---|---|
| 7. | 562 | | கடிதோச்சி மெல்ல எறிக நெடிதாக்கம்<br>நீங்காமை வேண்டு பவர் |
| 8. | 772 | 2 | கான முயலெய்த அம்பினில் யானை<br>பிழைத்தவேல் ஏந்தல் இனிது |
| 9. | 774 | ,, | கைவேல் களிற்றொடு போக்கி வருபவன்<br>மெய்வேல் பறியா நகும் |
| 10. | 1100 | ,, | கண்ணொடு கண்ணிணை நோக்கொக்கின் வாய்ச்சொற்கள்<br>என்ன பயனும் இல |
| 11. | 1227 | ,, | காலை அரும்பிப் பகலெல்லாம் போதாகி<br>மாலை மலரும்இந் நோய் |

# III

## கவியரங்கில் கலைஞர் எடுத்தாண்டுள்ள திருக்குறள்கள்

| வரிசை எண் | குறட்பா எண் | திருக்குறள் |
|---|---|---|
| 1. | 11 | வான்நின்று உலகம் வழங்கி வருதலால்<br>தான் அமிழ்தம் என்றுணரற் பாற்று |

| | | |
|---|---|---|
| 2. | 12 | துப்பார்க்குத் துப்பாய துப்பாக்கித் துப்பார்க்குத்<br>துப்பாய தூஉம் மழை |
| 3. | 15 | கெடுப்பதூஉங் கெட்டார்க்குச் சார்வாய்மற் றாங்கே<br>எடுப்பதூஉம் எல்லாம் மழை |
| 4. | 20 | நீர்இன்று அமையாது உலகெனின் யார்யார்க்கும்<br>வான்இன்று அமையாது ஒழுக்கு |
| 5. | 27 | சுவைஒளி ஊறுஓசை நாற்றமென்று ஐந்தின்<br>வகைதெரிவான் கட்டே உலகு |
| 6. | 55 | தெய்வந் தொழாஅள் கொழுநன் தொழுதெழுவாள்<br>பெய்யெனப் பெய்யும் மழை |
| 7. | 65 | மக்கள்மெய் தீண்டல் உடற்கின்பம் மற்றவர்<br>சொற்கேட்டல் இன்பம் செவிக்கு |
| 8. | 77 | என்பி லதனை வெயில்போலக் காயுமே<br>அன்பி லதனை அறம் |
| 9. | 80 | அன்பின் வழியது உயர்நிலை அஃதிலார்க்கு<br>என்புதோல் போர்த்த உடம்பு |
| 10. | 90 | மோப்பக் குழையும் அனிச்சம் முகந்திரிந்து<br>நோக்கக் குழையும் விருந்து |
| 11. | 116 | கெடுவல்யான் என்பது அறிகதன் நெஞ்சம்<br>நடுஒரீஇ அல்ல செயின் |

| வரிசை எண் | குறட்பா எண் | திருக்குறள் |
|---|---|---|
| 12. | 118 | சமன்செய்து சீர்தூக்குங் கோல்போல் அமைந்தொருபால்<br>கோடாமை சான்றோர்க் கணி |
| 13. | 123 | செறிவறிந்து சீர்மை பயக்கும் அறிவறிந்து<br>ஆற்றின் அடங்கப் பெறின் |
| 14. | 127 | யாகாவா ராயினும் நாகாக்க காவாக்கால்<br>சோகாப்பர் சொல்லிழுக்குப் பட்டு |
| 15. | 151 | அகழ்வாரைத் தாங்கும் நிலம்போலத் தம்மை<br>இகழ்வார்ப் பொறுத்தல் தலை |
| 16. | 169 | அவ்விய நெஞ்சத்தான் ஆக்கமும் செவ்வியான்<br>கேடும் நினைக்கப் படும் |
| 17. | 180 | இறல்ஈனும் எண்ணாது வெஃகின் விறல்ஈனும்<br>வேண்டாமை என்னுஞ் செருக்கு |
| 18. | 183 | புறங்கூறிப் பொய்த்துயிர் வாழ்தலின் சாதல்<br>அறங்கூறும் ஆக்கந் தரும் |
| 19. | 184 | கண்நின்று கண்ணறச் சொல்லினும் சொல்லற்க<br>முன்இன்று பின்நோக்காச் சொல் |
| 20. | 231 | ஈதல் இசைபட வாழ்தல் அதுவல்லது<br>ஊதியம் இல்லை உயிர்க்கு |

| | | |
|---|---|---|
| 21. | 243 | அருள்சேர்ந்த நெஞ்சினார்க் கில்லை இருள்சேர்ந்த<br>இன்னா உலகம் புகல் |
| 22. | 247 | அருளில்லார்க்கு அவ்வுலகம் இல்லை பொருளில்லார்க்கு<br>இவ்வுலகம் இல்லாகி யாங்கு |
| 23. | 259 | அவிசொரிந் தாயிரம் வேட்டலின் ஒன்றன்<br>உயிர்செகுத் துண்ணாமை நன்று |
| 24. | 280 | மழித்தலும் நீட்டலும் வேண்டா உலகம்<br>பழித்தது ஒழித்து விடின் |
| 25. | 298 | புறந்தூய்மை நீரான் அமையும் அகந்தூய்மை<br>வாய்மையால் காணப் படும் |
| 26. | 305 | தன்னைத்தான் காக்கின் சினங்காக்க காவாக்கால்<br>தன்னையே கொல்லும் சினம் |
| 27. | 314 | இன்னாசெய் தாரை ஒறுத்தல் அவர்நாண<br>நன்னயம் செய்து விடல் |
| 28. | 383 | தூங்காமை கல்வி துணிவுடைமை இம்மூன்றும்<br>நீங்கா நிலனாள் பவர்க்கு |
| 29. | 386 | காட்சிக் கெளியன் கடுஞ்சொல்லன் அல்லனேல்<br>மீக்கூறும் மன்னன் நிலம் |
| 30. | 401 | அரங்கின்றி வட்டாடி யற்றே நிரம்பிய<br>நூலின்றிக் கோட்டி கொளல் |

| வரிசை எண் | குறட்பா எண் | திருக்குறள் |
| --- | --- | --- |
| 31. | 411 | செல்வத்துள் செல்வம் செவிச்செல்வம் அச்செல்வம்<br>செல்வத்து ளெல்லாம் தலை |
| 32. | 555 | அல்லற்பட்டு ஆற்றாது அழுத கண் ணீரன்றே<br>செல்வத்தைத் தேய்க்கும் படை |
| 33. | 562 | கடிதோச்சி மெல்ல எறிக நெடிதாக்கம்<br>நீங்காமை வேண்டு பவர் |
| 34. | 571 | கண்ணோட்டம் என்னும் கழிபெருங் காரிகை<br>உண்மையான் உண்டிவ் வுலகு |
| 35. | 631 | கருவியும் காலமும் செய்கையும் செய்யும்<br>அருவினையும் மாண்டது அமைச்சு |
| 36. | 634 | தெரிதலும் தேர்ந்து செயலும் ஒருதலையாச்<br>சொல்லலும் வல்லது அமைச்சு |
| 37. | 639 | பழுதெண்ணும் மந்திரியின் பக்கத்துள் தெவ்வோர்<br>எழுபது கோடி உறும் |
| 38. | 648 | விரைந்து தொழில்கேட்கும் ஞாலம் நிரந்தினிது<br>சொல்லுதல் வல்லார்ப் பெறின் |

| | | |
|---|---|---|
| 39. | 772 | கான முயலெய்த அம்பினில் யானை<br>பிழைத்தவேல் ஏந்தல் இனிது |
| 40. | 774 | கைவேல் களிற்றொடு போக்கி வருபவன்<br>மெய்வேல் பறியா நகும் |
| 41. | 776 | விழுப்புண் படாத நாள்எல்லாம் வழுக்கினுள்<br>வைக்கும்தன் நாளை எடுத்து |
| 42. | 780 | புரந்தார்கண் நீர்மல்கச் சாகிற்பின் சாக்காடு<br>இரந்துகோள் தக்கது உடைத்து |
| 43. | 969 | மயிர்நீப்பின் வாழாக் கவரிமா அன்னார்<br>உயிர்நீப்பர் மானம் வரின் |
| 44. | 972 | பிறப்பொக்கும் எல்லா உயிர்க்கும் சிறப்பொவ்வா<br>செய்தொழில் வேற்றுமை யான் |
| 45. | 1031 | சுழன்றும்ஏர்ப் பின்னது உலகம் அதனால்<br>உழந்தும் உழவே தலை |
| 46. | 1032 | உழுவார் உலகத்தார்க்கு ஆணி அஃதாற்றாது<br>எழுவாரை எல்லாம் பொறுத்து |

| வரிசை எண் | குறட்பா எண் | திருக்குறள் |
|---|---|---|
| 47 | 1066 | ஆவிற்கு நீரென்று இரப்பினும் நாவிற்கு<br>இரவின் இளிவந்தது இல் |
| 48. | 1083 | பண்டறியேன் கூற்றென் பதனை இனியறிந்தேன்<br>பெண்டகையால் பேரமர்க் கட்டு |
| 49. | 1086 | கொடும்புருவம் கோடா மறைப்பின் நடுங்கஞர்<br>செய்யல மன்இவள் கண் |
| 50. | 1091 | இருநோக்கு இவளுண்கண் உள்ளது ஒருநோக்கு<br>நோய்நோக்கொன் றந்நோய் மருந்து |
| 51. | 1100 | கண்ணொடு கண்ணிணை நோக்கொக்கின் வாய்ச்சொற்கள்<br>என்ன பயனும் இல |
| 52. | 1142 | மலரன்ன கண்ணாள் அருமை அறியாது<br>அலரெமக்குத் தந்ததிவ் வூர் |
| 53. | 1227 | காலை அரும்பிப் பகலெல்லாம் போதாகி<br>மாலை மலரும்இந் நோய் |

3.3. மேற்கண்ட பட்டியல்களால் மிளிரும் அடிப்படை உண்மைகள் சில. அவை இவை : 1. கவியரங்கில் கலைஞர் எடுத்தாண்டுள்ள 53 குறட்பாக்களுள் முப்பாலும் தப்பாமல் இடம் பெற்றுள்ளன. 2. பொருட்பாலினும் அறத்துப்பால் குறள்களே அதிக இடம் பெற்றுள்ளன. இது இன்ப அதிர்ச்சி தரும் இயல்பு. இதனால் நம் மாண்புமிகு முதல்வர் அவர்கள் ஆரவார உலகிற்கு அச்சம் தரும் அரசியலாளராகவே காட்சி அளிப்பினும் அமைதி நிறைந்த அருள் உலகில் அரசியலையும் ஊடுருவி விஞ்சி விளங்கும் அறவோராகவே மாட்சி தரும் மறை புலனாகும். இது, மகிழ்ச்சிக்கு உரியதாகும். 3. பயில்வெண் கணக்கீட்டில் பாராளும் கலைஞரின் மனமாளும் மறைமொழிகளின் மாண்பு விளங்கும்.

மேலும் பதினொரு திருக்குறள்கள் ஒன்றுக்கு மேற்பட்ட பயில்வெண் பெற்றுள்ளமையும் அவற்றுள் ஒன்பது இருமுறையும் இரண்டு மும்முறையும் பயில்வெண் பெற்றுள்ளமையும் கருதத்தக்கன. மும்முறை பயில்வெண் பெற்றுள்ள இரு குறள்கள் வருமாறு :

1. அருளிலார்க்கு அவ்வுலகம் இல்லை ; பொருளிலார்க்கு
   இவ்வுலகம் இல்லாகி யாங்கு (247)

2. கடிதோச்சி மெல்ல எறிக நெடிதாக்கம்
   நீங்காமை வேண்டு பவர் (562)

இவையிரண்டுமே மாண்புமிகு முதல்வர் கலைஞரின் — முதல்வரின் இரு மலர்விழிகள் என்பது இக்கட்டுரையாளன் கருத்து.

## 4. திருக்குறள் ஈடுபாடு

'கவியரங்கில் கலைஞர்' (என்றும்) பதினாறு (I) கவிதைகளில் 'பிலவங்க ஆண்டு', 'அருமறையில் அறவர்', 'உடைமைகள் பத்து' மூன்றும் நேரடித் திருக்குறள்

தொடர்பின. அவற்றுள் முதலாவது சென்னை வானொலித் தமிழ்ப் புத்தாண்டு நிகழ்ச்சி ; இரண்டாவது தமிழ் வட்டம் நடத்தியது ; மூன்றாவது திருவள்ளுவர் திருநாள் நிகழ்ச்சியே. இம்மூன்று கவியரங்குகளில் மட்டு மன்றி ஒவ்வொரு கவியரங்கிலும் கலைஞர் ஏற்றவாறு எடுத்தாண்டுள்ள திருக்குறள்களும் (மொத்தத்தில் அரை நூற்றுக்கு மேற்பட்டவை) அவற்றின் பயில்வெண் விளக்க முமே அவர்தம் திருக்குறள் ஈடுபாட்டை (அரசியல் கட்சி களிடையே தி.மு.க.வென) தெள்ளிதின் விளக்கும். 30 காட்டும் திருக்குறள் புகழ்மொழிக்கும் போதுமான சான்று களாம். ஆயினும் 'கவியரங்கில் கலைஞர்' காட்டும் சில வேறு வீறு சான்றுகளையும் கருதலாம்.

1. 'பிலவங்க ஆண்டு' கவியரங்கில் அறுவர் இனியவை கூறல், அடக்கம், பொறை, வெகுளாமை, இன்னா செய்யாமை, அருளுடைமை ஆகிய பொருள்கள் பற்றிப் பாடியுள்ளனர். அவர்களைப் பாட அழைக்குமுன் 'கவியரங்கில் கலைஞர்' கற்பனையில் அருமறை போற்றும் அரிய பண்புகள் ஆறும் பெருமைமிகு ஆறு பெண்களா கின்றனர். ஆனதோடு மட்டுமின்றிக் கலைஞர் 'கையைப் பிடிக்க' முயல்கின்றனர் ! ஆனால் அவர்தம் கவியையே அவர்கள் பிடிக்கின்றனர் ! (எல்லார்க்கும் கைகொடுப்பவர் இல்லையே கலைஞர் !) காரிகையர் பிடித்த காரிகை பிடிக்காத கவிதை வருமாறு :

'கவியரங்கில் கலைஞர்'

> குறள் மொழி பேசுகின்றாள் ஒருத்தி என்றால் நான்
> கூறுகின்ற ஆறு பெண்ணும் அதனைத்தான்
> பேசுகின்றனர்
> ..........................................உமைப்
> பெற்றெடுத்த தாய் யார்? என்றேன்,
> தமிழ் என்றார்.

(ப. 50-51)

**தந்தையோ வள்ளுவராம்!**
**மாமேதை வள்ளுவரை மாமன் முறை கொண்டாட**
**ஆமோ என்னால்?........................ ...**

இப்பகுதி கலைஞரின் கற்பனை திருக்குறள் ஈடுபாடு காட்டும். கற்பனை நகைச்சுவை எல்லாம் சில நேரங்களில் கால் வழுக்கும் களங்கள். இப்பகுதியிலும் தாய்—தந்தை கற்பனை அதைக் காட்டக்கூடும். திருவள்ளுவருக்கும் தமிழ் தாரம் இல்லையே!—தாய்தானே !!

(2) கலைஞரின் திருக்குறள் ஈடுபாட்டிற்குக் கலையாச் சான்றாய்—இமயக் குமரிச் சான்றாய் இலங்கும் இடம் ஒன்று 'கவியரங்கில் கலைஞர்' கவிதையில் உள்ளது. அது பலர் வாழ்வுக்காகத் தானொருவன் சாவதை விரும்பும் 'கல்லக்குடி', 'பாளையங்கோட்டை' வீரத்தைப் பகர்வதாகும்:

**இறந்திடுவேன் எதிர்ப்பினிலே............**
**என்தலைவன் இருவிழியும் நீர்ப்பொழிய! அச்சாவை**
**இரந்திடுவேன்.....................**
**மறந்திடுமோ திருக்குறளும்? மறக்கவில்லை!**

(கவியரங்கில் கலைஞர், ப. 73)

ஆம்! நம்மாலும் மறக்கமுடியாத மணி வரிகள்

(1) திருக்குறளை நம்பாதவரை நகைக்கிறார் கலைஞர். அதன் நயன் நகைச்சுவைப் பகுதியில் நண்ணுவோம். ஈண்டுத் திருக்குறளை நம்பாதவரைக் கலைஞர் பகைக்கும் பயன் இடம் ஒன்று பார்ப்போம்.

**''மழித்தலும் நீட்டலும் வேண்டா உலகம்**
**பழித்தது ஒழித்து விடின்''**
**இதை மறுப்பார் கயவரிலே ஒருவகையாம்**

**..........................................**

(கவியரங்கில் கலைஞர், ப. 79)

*மறுப்பார் — கயவர் !*
*மறுப்பு யார் ? மறுப்பார் யார் ?*

*எனவே கலைஞர் விரும்பும் மனிதன் திருக்குறளை மறக்கா—மறுக்கா மனிதன்.*

*கலைஞரின் திருக்குறள் ஈடுபாடு வெறும் பக்தியா? பகுத்தறிவா? பகுத்தறிவே. இதோ அந்த / அதன் முரசொலி:*

**அன்பு நெறியினில் அமைதி நிலவிடும்**
**ஆகா நெறியினில் அமளி பிறந்திடும்**
**கத்தி தூக்கல் கலாம் விளைத்தல்**
**கடுகைப் போய் மலையாக்கல்......அன்புக்**
**கடல் அமைதி கெடுக்கின்ற புயற்காற்று ..அதைத்**
**தென்றலாய் மாற்றுதற்குத்**
**தெளிவு வேண்டும்— மிகுந்த**
**அறிவு வேண்டும்—அதனைத்தான்**
**குறள்மூலம் பரப்புகின்றோம்**
**நம் கொள்கையில் வெற்றி காண்போம்...**

**திருக்குறள் ஆராய்ச்சி**

**6**. *கலைஞரின் திருக்குறள் ஈடுபாடு ஆராய்ச்சியாகவும் ஆக்கம் பெறுவதைக் காணும்போது உண்டாகும் ஊக்கம் பெரிது. ஈண்டு இரண்டிடங்கள் காண்போம். ஒன்று கண் பற்றியது; மற்றொன்று கற்பு பற்றியது. கண்ணில் கணக்குதான்! கற்பில்தான் கருத்து மாறுபாடு!— கண்டனமும்!*

*(1) ஒரு நூலில் ஒரு சொல் / பொருள் எத்தனை இடங்களில் பயில்வு பெறுகிறது என்று கணக்கிடுவது* (freqency count) *அந்நூலுடையார் உள்ளத்தில் அப் பொருள் எத்தகு இடம் பெற்றது என்பதையும் பார்க்க*

ஏதுவாகும். இந்த ஆராய்ச்சி அடிப்படையைக் கலைஞர் பயன்படுத்துவது அதன் இயற்கை/இன்றியமையாமை இரண்டையும் புலப்படுத்தும். இத்தகையோர்க்கு அண்ணாமலைப் பல்கலைக் கழகம் டாக்டர் பட்டம் வழங்கியதும் இயற்கை/இன்றியமையாமையே.

கண்பார்வை இழந்தோர்க்குக் கண்ணளிக்கும் கண்ணாளராய் இலங்கும் கலைஞரின் இலக்கிய ஆராய்ச்சி இது:

> வள்ளுவரும் அவர் குறளில் 'கண்' என்ற
> சொல்லுக்கே மிகுந்த இடம் தந்துள்ளார்...
> கூற்றமோ - கண்ணோ—ஒரு—குறளில்
> கொடும்புருவம் எனத் தொடங்கி...
> இவள்கண் எனமுடியும் ஒரு குறள்!
> இருநோக்கு இவளுண்கண் உளது
> எனப் பறைசாற்றும் பிறிதோர் குறள்!
> 'மலரன்ன கண்ணாள்' மற்றோர் குறள்
> 'கண்ணோட்டம் என்னும் கழிபெருங் காரிகை
> உண்மையான் உண்டிவ் வுலகு'
> இப்படிப் பல்வேறு குறட்பாக்கள் இவர்பக்கம்
> இருப்பதால்
> (கவியரங்கில் கலைஞர், ப.14)

சாமி வேலாயுதரின் 'திருக்குறள் சொல்லடைவு' திருக்குறளில் கண் 41 இடங்கள் பெற்றுள்ளது என்று கணக்கிடுகிறது. இக்கணக்கீடு இக்கவிதையோடு ஒப்பு நோக்கத்தக்கது. என்னுடைய டாக்டர் பட்ட ஆய்வாகிய 'சங்க இலக்கியங்களில் அடை அடைவும் ஆய்வும்' கண்ணுக்கே பேரிடம் இருப்பது காட்டும்.

(2) 'எதற்கும் திருக்குறள் இடம் தரும்' என்பது மனோன்மணீயம் சுந்தரனார் மணிவாக்கு (2-1-281).

*இதை நினைவூட்டுவதுபோல் அமைந்துள்ளது 'கவியரங்கில் கலைஞரி'ன் இக்கவிதைப் பகுதி;*

"செல்வத்துட் செல்வம் செவிச்செல்வம் அச்செல்வம்
செல்வத்து ளெல்லாம் தலை"
என்று குறள்காட்டி வெற்றிப்பரிசு கேட்டிடுவார்...
உண்மையது ; வாதத்துக்காக ...ஆனால்
கேட்டார்ப் பிணிக்கும் தகையவாய்க் கேளாரும்
வேட்பவாய்

மொழிந்தால்தான்—வெளியேறி, அது செல்வமாகும்

என,

நான் கூறிப் பிழைத்துக் கொள்வேன்...
நடக்கட்டும் அவர் வாதம்—
நம் செவியேறி இனிக்கட்டும் செந்தமிழ்க் கீதம் !

*(கவியரங்கில் கலைஞர், பக்.15-16)*

*(3) திருவள்ளுவர் காலத்து மரபுவழி நம்பிக்கைகளுள் ஒன்று இயற்கையைக் கட்டுப்படுத்தும் இதய ஆற்றல். ஒழுக்கத்தின் விளைவே இதய ஆற்றல். இதை நண்ணியும் நம்பியுமே நாயனார்,*

தெய்வந் தொழாஅள் கொழுநன் தொழுதெழுவாள்
பெய்யெனப் பெய்யும் மழை (64)

*என ஓதினார். ஆனால் இக்குறளுக்குரிய மரபுவழிப் பொருளில் பகுத்தறிவுப் பாங்கினர்க்கு ஐயம். ஆதனால் தெய்வக் கருத்துக்கு எதிராக இக்குறளை அவர்கள் பயன் படுத்த முனைந்த முனைப்பும் இயற்கை. இதற்குத் தலைமை தாங்கினார் புரட்சிக் கவிஞர் பாரதிதாசன் எனலாம். அவரைப் பின்பற்றி நம் கலைஞரும்,*

பெண்கள்
பெய் என்றால் பெய்துவிடும் மழை என்றார்...கவிஞர்
கற்புநிறை பெண்ணை அந்தக்

கடுஞ்சோதனைக்கு ஆளாக்கி
மழை பெய்யாவிட்டாலோ
மாசு தூவிடல் முறையன்று—
பெய்யெனப் பெய்யும் மழை என்று பெண்ணைப்
பெருமையாய்ச் சொன்ன குறள்...நல்ல
பெண்ணொருத்தி பெய்யெனப் பெய்கின்ற மழை
போன்றாள்
எனும் கருத்தை நிலைநாட்டும்...
பழங்கருத்து தலைகாட்டும்; துரத்த வேண்டும்.

(கவியரங்கில் கலைஞர், ப.78)

திருவள்ளுவர் திருமறைக் கருத்து நமக்குப் பிடிக்காவிடினும் அன்று எது என்பதைத் திருவள்ளுவரைப் 'பொய்யில் புலவன்' என்றும், திருக்குறளைப் 'பொருளுரை' என்றும் (2259—61) மணிமேகலையில் போற்றும்போது தண்டமிழ் ஆசான் சாத்தனார் எடுத்துக் காட்டும் திருக்குறளே பகுத்தறிவு உலகம் பற்றா இக்குறளே என்பதும், 'வான்தரு கற்பு' என்னும் தொடரைத் தண்டமிழாசான் சாத்தனார் ஒரு முறைக்கு மும்முறை (15/77; 22/53 ; 16/20) எடுத்தாள்கிறார் என்பதும் ஆழ்ந்து ஆராயத்தக்கது. இவ்வகையில் இயற்கைக்கும் இதயத்துக்கும் உள்ள தொடர்பை—வான்/மான ஒழுக்க உறவை—சுட்டிக்காட்டிடும் செருமானிய மெய்ப்பொருள் மேதை இமானுவல் காண்டின் (22.4.1724/12.2.1804) இனிய மொழிகள் கருத்தில் பொருத்தவும் இருத்தவும் தக்கன. அவை வருமாறு ;

A great commemoration was held on the hundreth anniversary of Kant's death, the 12th February 1904. On this occassion a bronze tablet was affixed to the wall of the Castle, bearing the imperishable words from the conclusion of his Critique of Practical Reason: 'Two things fill the heart with ever renewed and increasing

wonderment and reverence, the more often and the more lastingly we meditate upon them

The starry firmament above me
and the moral law within me.

**7.1. திருக்குறள் வழிச் சிந்தனைகள்:**

*திருக்குறள் சாதிகளை ஒப்புக்கொள்ளாத நூல் மட்டும் இல்லை—சாதிகளை, மறுக்கும் நூல் என்பதும் உலகறிந்த/உலகறிய வேண்டிய உண்மை. இதற்கு ஒரு பெரும் சான்றாய் விளங்கும் திருக்குறள்:*

**பிறப்பொக்கும் எல்லா உயிர்க்குஞ் சிறப்பொவ்வா**
**செய்தொழில் வேற்றுமை யான் (872)**

*திருக்குறளின் இத்திறத்தையே திருவள்ளுவமாலையில்,*

**ஆற்றல் அழியுமென் றந்தணர்கள் நான்மறையைப்**
**போற்றியுரைத் தேட்டின் புறத்தெழுதார்—ஏட்டெழுதி**
**வல்லுநரும் வல்லாரும் வள்ளுவனார் முப்பாலைச்**
**சொல்லிடினும் ஆற்றல்சோர் வின்று**

*என்று* **கோதமனாரும்,**

*இன்னும் தெளிவாக,*

**செய்யா மொழிக்கும் திருவள் ளுவர்மொழிந்த**
**பொய்யா மொழிக்கும் பொருளொன்றே—செய்யா**
**அதற்குரியர் அந்தணரே ஆராயின் ஏனை**
**இதற்குரியர் இல்லாதார் இல்**

*என்று* **வெள்ளிவீதியாரும்,**

**ஏதமில் வள்ளுவர் இன்குறள்வெண் பாவினால்**
**ஓதிய ஒண்பொருள் எல்லாம் உரைத்ததினால்**
**தாதவிழ் தார்மாற தாமே தமைப்பயந்த**
**வேதமே மேதக் கன ?**

*என்று* பெருஞ்சித்திரனாரும்,

அறமுதல் நான்கும் அகலிடத்தோர் எல்லாம்
திறமுறத் தேர்ந்து தெளியக் — குறள்வெண்பாப்
பன்னிய வள்ளுவனார் பான்முறைநேர் ஒவ்வாதே
முன்னை முதுவோர் மொழி

*என்று* கோவூர் கிழாரும்,

**வேதப் பொருளை விரகால் விரித்துலகோர்**
**ஓதத் தமிழால் உரைசெய்தார்**

*என்று* செயலூர்க் கொடுஞ்செங்கண்ணரும்,

**ஆரியமும் செந்தமிழும் ஆராய்ந்த தனினிது**
**சீரிய தென்றொன்றைச் செப்பரிதால் — ஆரியம்**
**வேதம் உடைத்துத் தமிழ்த்திரு வள்ளுவனார்**
**ஓது குறட்பா உடைத்து**

*என்று* **வண்ணக்கஞ் சாத்தனாரும்** *போற்றிப் பாடினர்.*

*இருபதாம் நூற்றாண்டுச் சுந்தரனார் 'மனோன் மணீயமும்' இதனாலன்றே,*

**வள்ளுவர்செய் திருக்குறளை மறுவறநன் குணர்ந்தோர்கள்**
**உள்ளுவரோ மனுவாதி யொருகுலத்துக் கொருநீதி?**

*என்று வினவியது.*

*முன்னோர் மொழிந்த பொன்னேர் மொழியெல்லாம் விழியெனப்! போற்றும் தன்னேர் இல்லா நம் முதல்வர் முதன்மைத் தமிழர் திருக்குறள் சாதியற்ற சமுதாய நூல் என்பதைச்*

**சாதிகளைக் காணாது குறள் ஒலித்த தமிழ் மண்ணில்**
*(ப. 183)*

என்று பாடியிருக்கும் நயம் பாராட்டிற்குரியது. ஆம். 'சாதிகளைக் காணாது' என்னும் தொடருக்குச் 'சாதிகள் இல்லை' என்று பொருளா? சாதிகள் இருந்தும் பொருட் படுத்தாமல் என்று பொருளா? 'குறள் ஒலித்த' என்ற தொடரில் குற/ரள்/ல் கேட்கிறது அல்லவா? ஆனால் அந்த ஒலி தமிழ் மண்ணில் தான் ஒலித்ததோ? — தமிழ் மனதில் ஒலிக்கவில்லையோ?!

7. 2 திருக்குறள் வழிக் கலைஞரின் சிந்தனைகளுள் அறிவையும் உணர்வையும் ஆட்டிப் படைப் பனவாய் அமைந்துள்ளவை 'கவியரங்கில் கலைஞரில்' வரும் பின் வரும் இரண்டு வரிகள்:

முகத்திரண்டு புண்ணுடையார் கல்லாதோர் எனில்
— கற்றவரோ
முப்பத்திரண்டு புண்ணுடையாராய் விளங்கல் ஏனோ?
சிந்தித்தீரோ? (ப. 116)

'பேனும் பார்ப்பார்; காதையும் கடிப்பார்' என் பார்கள். நம் கலைஞர் எவ்வளவோ கனிவாக இருப்பவர்— சற்றும் எதிர்பாராவகையில் 'கன்னத்தில் அறை'ந்து விடும் போது பொறிதட்டிப் போகிறதே. வள்ளுவரையே ஒரு புரட்டுப் புரட்டிப்போட்டு விடுவது போலல்லவா இருக் கிறது? ஆம். பொய்ப்புரட்டால் அன்று — பொய்யைப் புரட்டுவதால் — ஏன்? ஒரோருகால் மெய்யையே புரட்டிச் சரிபார்ப்பதால் (Verification) உண்மையோடு புரட்சியும் ஒளிவிடுமன்றோ?

## VIII

### 8. திருவள்ளுவர் ஆராய்ச்சி

ஒரு நூலில் உள்ளத்தைப் பறிகொடுப்பவர் அந்நூலாசி யரிடமும் உள்ளத்தைப் பறிகொடுத்தல் உள்ளத்தின் / உல கத்தின் இயற்கை. இவ்வுண்மைக்கு ஒரு பெரு மேற்கோள் மறைந்த பெரும் பேராசிரியர் டாக்டர் மு. வ. வின் பின்வரும் (ஆம். இரு பொருளிலும்) மணிமொழிகள் :

சில நூல்களைப் படித்து முடித்த பிறகு அவற்றின் ஆசிரியர்களைப் பற்றி எண்ணுவதே இல்லை. அவர்கள் யாராக இருந்தால் நமக்கு என்ன என்று பொருட்படுத்தாமல் விடுகிறோம். ஆனால், வேறு சில நூல்களைப் படித்து முடித்த பிறகு, அவற்றின் ஆசிரியர்களைப் பற்றித் திரும்பத் திரும்ப எண்ணுகிறோம். மேன்மேலும் அவர்களைப் பற்றி அறிய விரும்புகிறோம். அந்த ஆசிரியர்களின் அநுபவச் சிறப்பை நினைந்து வியப்படைகிறோம். அந்த நூல்களால் பெற்ற கலைப்பயனும் அதனை நினைந்து உணரும் நன்றியுணர்வுமே இதற்குக் காரணங்கள். அத்தகைய நூல்களே உயர்ந்த நூல்கள்; நின்று வாழவல்ல நூல்கள்.

திரு. ராசவேலு எழுதிய 'காதல் தூங்குகிறது" என்னும் நாவல் இந்த உயர்வகையைச் சார்ந்த நூல் ஆகும்.

தமக்குப் பின் மதுரைப் பல்கலைக்கழகத் துணை வேந்தராகவும் ஆதற்குரிய தகுதி படைத்தவர் என்று என் 'அறிவுத் தந்தை' யால் கருதப்பட்ட திரு. இராசவேலு அவர்களின் 'கலைமகள்' பரிசு பெற்ற 'காதல் தூங்குகிறது" நூலுக்குச் சற்றொப்ப கால் நூற்றாண்டுக்கு முன்பு (1960-இல்) அவர் அளித்த அணிந்துரையின் தொடக்க மொழிகளே மேலே கண்டவை.

பேராசிரியரின் இலக்கியத் திறனாய்வுரை இக்கால இலக்கியத்திற்கும் இலக்கியப் படைப்பாளர்க்கும் மட்டுமின்றி எக்கால இலக்கியத்திற்கும் இலக்கியப் படைப்பாளர்க்கும் பொருந்தும். இவ்வாய்வுக் கண்கொண்டு நோக்கினால் நம் மாண்புமிகு கலைஞரின் திருக்குறள் ஈடுபாட்டுள்ளம் திருவள்ளுவர் ஈடுபாட்டு உள்ளமுமாகத் திகழல் தெளிவாகும்.

நட்புக்கோர் அதிகாரம்
நட்பாராயப் பிறிதோர் அதிகாரம்
பழகுதலுக்கோர் அதிகாரம்
பாங்குடனே "தீ நட்பு" ; "கூடா நட்பு" எனப்
பகுத்து ஒவ்வொன்றுக்குமோர் அதிகாரம்
வகுத்தளித்த வள்ளுவனும்
நண்பர்களால் மெத்தப் பாடுபட்டானோ...

நம்மைப்போல
(பக். 76-77)

ஃ ஃ ஃ

கலைஞர் கூறிய கற்பனைக் கொப்பவே
நிலைமை மாறிட நேர்வழி இன்மையால்,
பொறுமை மீறினள் அருமைத் தமிழ்மகள் !
பெருமைசேர் வள்ளுவப் பெருந்தகை தன்னை
அன்புடன் விளித்துமே அகமிக மகிழ,
"இன்பச் செல்வனே ! இனிநீ உலகினிற்
பிறந்து குறள்நெறி பேணிடுங் காலம்
விரைந்த தாதலின், நிரந்தினிது சொல்லத்
தோன்றுக மகனே ! தொல்புகழ்க் காஞ்சியில்
ஈன்ற பயனையான் எய்த !" என்றனளே !

(*"அண்ணா காவியம்" (1974), கவிஞர் ஆனந்தம். ப.10*)

# கலைஞர் முதல்வர் கண்ட கப்பலோட்டிய தமிழன்

## (1)

பேராசிரியர் டாக்டர் மு.வ. அவர்களின் மாணவன் என்ற முறையின் யான் பெரிதும் கருத்துகட்கே ஆட்படு பவன்; கட்சிகட்கு அன்று. அந்தவகையில் இந்திய விடுதலை வெள்ளி விழாவை இன்பத் தமிழகத்தைப் பொறுத்த வரையில் திராவிட முன்னேற்றக் கழகம் தேசியத்தைக் கருக்கொண்ட வெள்ளிவிழா என்றும் களிப்புடன் கழற லாம். ஆம். திராவிடக் கழகத்திலும் வேறுபட்ட வீறுடையது திராவிட முன்னேற்றக் கழகம் என்று பேரறிஞர் அண்ணா மக்கள் மனதுக்குள் பேரிகை கொட்டிய பெருநாள் 1947– ஆகஸ்டு 15. ஒரு வரலாற்று மாணவன் என்ற வகையிலும் காந்தி அடிகளைக் கடவுளாகக் கருதி வழிபடும்—வழிப்படும்—மனிதன் என்ற வகையிலும் ஒரு பொருளைப் போற்ற உரிமை படைத்தார் போற்றுவதிலும் போற்ற உரிமை படையாதாரும் போற்றுவதே போற்று தல் ஆகும் என்று போற்றுபவன் யான்.

உச்சிதனை முகந்தால் —கருவம்
ஓங்கி வளரு தடி!
மெச்சி யுனையுண்ரார்—புகழ்ந்தால்
மேனி சிலிர்க்கு தடி!

என்பது பாரதியின் கண்ணன் பாட்டு.

---

காஞ்சி, அறிஞர் அண்ணா பிறந்த நாள்—எட்டாம் ஆண்டு மலர் (1972)

(2)

பேரறிஞர் அண்ணாவும் விண்ணிலிருந்து வியப்பும் விம்முதமும் கொள்ள ஏடாளும்—நாடாளும் நல்லோர் நெஞ்சமெல்லாம் ஆளும் சான்றோர் நம் முதல்வர்—டாக்டர்—கலைஞர். எனவே பேரறிஞர் அண்ணாவிலும் பேருள்ளம் கொண்டு திட்ப நுட்பங்களுடன் உற்று நோக்கி யும் ஒப்பு நோக்கியும் ஆட்சி புரியும் மாட்சியினராகிய நம் முதல்வர் இந்திய விடுதலை வெள்ளி விழாவைச் சீரும் சிறப்பும் செறியக் கொண்டாடிய திறம் பண்பிலாரை நாணவும் நடுங்கவும் செய்வது; பண்புடையாரை வாழ்த்த வும் வணங்கவும் செய்வது. என்னகம்—தமிழகம்—கொண்ட 'தென்னகம்' தீட்டியது போல சென்ற ஆண்டு 14-ஆம் நாள் நள்ளிரவில் தமிழகச் சட்டப் பேரவையில் நம் முதல்வர்—தமிழ்த்தாயின் ஏன்?— இந்தியத் தாயின் தவப் புதல்வர் நிகழ்த்திய வெள்ளிவிழாப் பேச்சு 'கவிதை நடைப் பேருரை'யே ஆகும். அப்பேருரையில் என் உயிரையும் புல்லரிக்கச் செய்த சொல்லுரை ஒன்று உண்டு. அது இது:

இனி நாட்டில் இல்லார் இல்லை—
கல்லார் இல்லை
நல்லார் மீது பாய்கின்ற
வல்லார் இல்லை—
எங்கும் புதுமை;
எதிலும் புதுமை;
அனைத்தும் பொதுவுடைமை;

எல்லாம் இருக்கட்டும், 'நல்லார் மீது பாய்கின்ற வல்லார் இல்லை'.

இந்தக் கருத்து எப்படி வந்தது நம் முதல்வர்க்கு? அதிலிருக்கும் இந்தக் கருத்து வேறு யாருக்கு வந்தது—வரலாற்றில், வையகத்தில்? மற்ற மற்ற கருத்தெல்லாம் இக்காலத்தின் இயற்கை. ஆனால்,

## நல்லார் மீது பாய்கின்ற வல்லார் இல்லை

இந்தக் கருத்து வந்ததே நம் முதல்வருக்கு—அண்ணன் அறிஞரின் ஆருயிர்த் தம்பி அல்லவா நம் கலைஞர்?— அதனாலேயோ? எப்படியாயினும் இப்படி நள்ளிரவிலும் எண்ணிய—திண்ணிய அந்த உள்ளத்திற்கு "உலகத்தையே பரிசாக உருட்டலாம் அல்லவா? மக்களாட்சியின்—பொது வுடைமைத் தத்துவத்தின் —உயிர்த் துடிப்பாய் விளங்கும் இந்தக் கருத்தை உரிய நேரத்தில் உரிய இடத்தில் உரைத்த உத்தமனுடைய வீரம் வெறுஞ் சொல் வீரமோ? செயல் வீரத்தை உயிராகப் பெற்ற—சிந்தனை வீரத்தை உள்ள மாகப் பெற்ற—சொல் வீரத் திருவுருவர் அன்றோ நம் கலைஞர் முதல்வர்? அண்ணல் காந்தி அடிகள் அரசியலில் அறத்தைப் பிணைத்தார்; பேரறிஞர் அண்ணா அரசியலில் சிந்தனைத் தமிழைப் பிணைத்தார்; பெருங் கலைஞரோ அரசியலில் அறத்தோடு சிந்தனையோடு செயல் தமிழ்ப் பண்பாட்டையும் அல்லவோ சேர்த்து வருகிறார்? இந்த உண்மைக்கு ஓர் உரைகல்லாய் இந்தக் கட்டுரைக்கு ஏற்றதாய்—ஓர் எடுத்துக் காட்டு:

(3)

தமிழ்நாடு சட்டப் பேரவையில் நம் முதல்வர்—கலைஞர் — முழங்கிய முழக்கத்தில் — நாட்டு விடுதலை வெள்ளி விழா நாள் பொன்னுரையில் — வைர ஒளி வீசிய கலையார்ந்த கடமைக் கருத்துகளுள் ஒன்று:

> மற்றொரு மகிழ்ச்சிகரமான செய்தி தமிழக மக்களைப் பூரிப்பில் ஆழ்த்துகின்ற புதுச் செய்தி:
> சிலை வைத்துள்ளோம் சிதம்பரனார்க்குச் சென்னைக் கடற்கரையில்;
> செப்டம்பர்த் திங்கள் அந்தச் செந்தமிழன் சிலைதனையே திறக்க வருகின்றார் நம் அன்புக் குரிய பிரதமர் தூத்துக்குடிக்கு;

சிலையான தமிழர் சிதம்பரனார் இழுத்திட்ட செக்கு ஒன்று கோவைச் சிறையினிலே கேட்பா ரற்றுக் கிடக்கிற செய்திதனை அறிவீரோ என்னவோ நானறிவேன்; அந்தச் சிங்க மறவன், இழுத்த செக்கினை — இங்குச் சென்னைக்குக் கொணர்ந்து சிறப்பான இடமொன்றில் காட்சிப் பொருளாய் ஆக்குதற்குத் திட்டம் தீட்டிவிட் டோம்! இத்திங்கள் முடிவதற்குள் இனிது நிறை வேறும் அந்தக் காரியம் என்று கருதுகின்றேன்''

முதல்வர் - கலைஞர் பேருரையின் முடிவான பகுதி இதுதான். ஆனால் இந்த முடிவுக்கு ஒரு முத்து வேண்டாவோ? முத்தளிக்கும் முத்தர் முத்தின் முறுவல் பாரீர்:

தியாகத்தின் சின்னமன்றோ அந்தச் செக்கு!
தியாகத்தை மதிப்பதன்றோ நம் அரசு!
தில்லையாடி வள்ளியம்மைக்குத் திருநகர்
அமைத்ததன்றோ தமிழ் அரசு
அதனாலே தியாகத்தைப் போற்றிடுவோம்!
தியாகிகளைத் தெய்வமெனத் தொழுதிடுவோம்!
மண்காக்க — மானமொழி காக்க —
கண்காக்கும் இமைபோல் வாழ்ந்து
வீழ்ந்து பட்ட வீரர் குல நாயகர்க்கு
இந்நாளில் அனைவருமே வணக்கம் செய்வோம்!

சொல்லுக்குச் சொல் உண்மையும் உணர்வும் கொப்பளிக்கும் இச்சொற்களே இந்திய விடுதலை வெள்ளி விழா நள்ளிரவுப் பேச்சில் நம் நாடாளும் நாயகரின் நல்லுரையின் மணிமுடியின் முத்தாய் ஒளி வீசுவன. இந்தக் கவிதைப் பகுதியையும் கூர்ந்து ஆராய்ந்தால் தியாகப் பன்மையிலே தேச பக்த சிதம்பரத்தின் ஒருமையை உணரலாம்.

(4)

நம் முதல்வர்— கலைஞருக்கு இந்த ஈடுபாடு— கப்பலோட்டிய தமிழர்பால் காதல்—வெள்ளி விழா நெருக்கடியில் விளைந்ததன்று; இயல்பாகவே இருந்தது. பின்னாளில் தந்தை மாறினும் தான் மாறா அண்ணாவின் உயிர்த் தம்பி அன்றோ நம் முதல்வர்—கலைஞர்? இவ்வுண்மைக்குப் புலிச் சான்றாய்— தனிப்பெருஞ் சான்றாய் — விளங்குவது 'கவியரங்கில் கலைஞர்' தொகுப்பில் இருக்கும் முதல் பாட்டே—தலைமையுரைக் கவிதையே ஆகும். இதில் வ. உ. சி. பற்றிப் பாட வரும் கவிதைக்கு நம் முதல்வர் — கலைஞர் முழங்கும் கட்டியம் வருமாறு:

> விடுதலை உறுதி
> ஏற்ற குடித் தோன்றல்—எழில்
> தூத்துக்குடி கடல்மீது கப்பல்விட்ட ஏந்தல்
> "திருவும் புகழும் சிறந்தன பிறவும்
> மருவற நிற்கும் என் மாசிலா மனைவியே!
> என்னரும் உயிரிலும் என்னுயிர் உளத்திலும்
> மன்னுறப் பாதியை மகிழ்ந்துனக் களித்தேன்
> பின்னுறப் பாதியைப் பெரிய நம் தேயத்தின்
> தன்னடிக் களித்தேன் சத்தியம் இஃதே!"—இந்த
> அகவற்பாவால் அகத்தினைத் திறந்த
> தகவுரை மேலோன் தமிழர் தலைவன்
> வளஞ்செறியும் வ. உ. சி.

இனி, கலைஞரின் கட்டியம் பெற்ற கவிதை முடிந்ததும் அதற்குக் கிடைத்த முடிவுரை — முத்திரை இதோ:

சிறை வாழ்ந்தார் செக்கிழுத்தார்.

ஆம். ஐந்தாண்டுகட்கு முன்பே இன்றைய முதல்வர் சிந்தையில் கிடந்தது சிறை; அந்தச் சிந்தையில் சுழன்றது செக்கு.

உரிய நாளில் — உரிமைத் திருநாளில் கரு உருவாகி விட்டது. யாருக்கு நூறாண்டு சொல்வோம்? கப்பலோட்டிய தமிழருக்கா?— அவர் புகழ்க் கப்பலைக் காலக் கடலில் ஓட்டும் — தலைசிறந்த மாலுமி — நம் கலைஞர் — முதல்வருக்கா?

(5)

இக்கட்டுரையின் தொடக்கத்தில் எவ்வாறு திராவிட முன்னேற்றக் கழகம் தேசியக் கருக்கொண்டதின் வெள்ளி விழாவாகவுமே இந்திய விடுதலை வெள்ளி விழாவைக் கருதலாம் என்று குறிப்பிட்டோமோ அவ்வாறே தலைவர் ம. பொ. சி.—யின் தமிழரசு இயக்க முயற்சி தீவிரம் கொண்டதன் வெள்ளி விழாவாகவுமே இந்திய விடுதலை வெள்ளி விழாவையும் கப்பலோட்டிய தமிழரின் நூற்றாண்டு விழாவையும் போற்றலாம்.

மாண்புமிகு ம. பொ. சி. அவர்கள் கடந்த கால் நூற்றாண்டுக் காலத்திற்கு மேலாக வ. உ. சி.—யின் புகழைப் பட்டி தொட்டிகளில் எல்லாம் பரப்ப மேற்கொண்ட முயற்சிகளின் முடிசூட்டு விழா அன்றோ வ. உ. சி. நூற்றாண்டு விழா — இந்திராவின் தூத்துக்குடி வருகை—சிலை திறப்பு—இந்தியத் தபால் தலை வெளியீடு எல்லாம்.

சிலம்புச் செல்வர் — தாமரைச் செல்வர் — திரு. ம. பொ. சி.—யின் புகழ்களுள் எல்லாம் ஒன்று அவர் 'வ. உ. சி. வழிவந்த ம. பொ. சி.' என்று பெற்றிருக்கும் இணையிலாப் புகழே ஆகும். இருபதாண்டுகட்கு முன்பு ஒரு பெருமாநாட்டில் 'வ.உ.சி. வழி வந்த ம. பொ. சி. அவர்களே!' என்று நான் விளித்த மாத்திரத்தில் கூடியிருந்த ஆயிரம் ஆயிரம் விழிகளும் அள்ளி வீசிய ஒப்புதல் ஒளியை — உவகை ஒளியை — இன்று நினைத்தால் பார்வை இழந்தவனும் பார்வை பெறுவான் அல்லனோ ?

எனவே மாண்புமிகு நம் கலைஞர்—முதல்வரின் நற்பணி—வெள்ளி விழாப் பொற்பணி—தலைவர் ம.பொ.சி.—யின் வைர நெஞ்சின் வாழ்த்தையும் வணக்கத்தையும் பெறுதல் இயல்பே ஆகும். அந்த இயல்பு தந்த இலக்கியம் வருமாறு :

''தேச பக்தர் சிதம்பரனார். நாற்பது ஆண்டு —இரண்டு ஆயுள்—சிறைத் தண்டனை பெற்றார் என்பது நாடறிந்ததாகும். அந்த மாவீரர் கொடுந்தண்டனை பெற்றதோடு, சிறைச்சாலையிலே கொடுமை மிக்க வேலைகளிலும் அதிகாரிகளால் ஈடுபடுத்தப்பட்டார். ஆம்; கல் உடைத்துக் கஷ்டப்பட்டார். பிற கிரிமினல் கைதிகளின் மலத்தைக்கூட எடுக்குமாறு வற்புறுத்தப்பட்டார். துரைபோல வாழ்ந்தவர், சிறையிலே தோட்டி போலப் பணி புரிய வற்புறுத்தப்பட்டார். இவற்றை விடவும் கொடுமை மிக்க செயல் என்னவென்றால் மாடுபோலக் கருதிச் செக்கு வலிக்கச் செய்ததாகும்.

ஐயன் சிதம்பரனார் மெய் வருந்த இழுத்த செக்கானது அது நிகழ்ந்த அறுபது ஆண்டுக்காலம் கோவைச் சிறையிலே பாதுகாக்கப்பட்டு வந்தது. பின்னுள்ள இதற்கு யாரெல்லாம் காரணமானவர்களோ, அவர்களையெல்லாம் வாயார வாழ்த்துகிறேன்.

சிதம்பரனார் இழுத்த செக்கினைக் காணும் பொருட்டு எட்டு ஆண்டுகளுக்கு முன்பு நான் கோவைச் சிறைச்சாலைக்குச் சென்றேன். அப்பொழுது எங்கோ ஓர் மூலையில் அந்தச் செக்கு கிடத்தப்பட்டுக் கிடந்தது. அதனைப் பாதுகாத்து வைக்குமாறு சிறையதிகாரியை வேண்டிக் கொண்டேன். கோவைச் சிறையில் சிதம்பரனார் இழுத்த

செக்கு இன்னமும் இருக்கிறதென்பதைத் தமிழக அரசும், தமிழின மக்களும் அறிந்து கொள்ளும் படிச் செய்தேன். ஆனால், அதன் பின்னரும் கோவையில் ''சிறை''ப்பட்டிருந்த செக்குக்கு விடுதலை கிடைக்கவில்லை. ஆம்; அன்றிருந்த தேச பக்தர்களின் ஆட்சி சிதம்பரனார் இழுத்த செக்கை நினைவுச் சின்னமாக்குவது பற்றிச் சிந்திக்கவேயில்லை.

விடுதலை வெள்ளி விழா நாளிலே, நள்ளிரவில் கூடிய சட்ட மன்ற உறுப்பினர் கூட்டத்திலே, ''வ.உ. சிதம்பரனார் இழுத்த செக்கு அவரது நினைவுச் சின்னமாகக் கருதப்பட்டு, சென்னை நகரிலே சிறப்புமிக்க ஓரிடத்திலே வைக்கப்படும்'' என்று முதல்வர் கலைஞர் கருணாநிதி அறிவித் தார். இந்தச் சிறப்புமிக்க செய்தியைக் கேட்டு மகிழ்ச்சியடையாத தமிழர் இருக்க முடியாது. தேசபக்தர் சிதம்பரனார் இழுத்த செக்கை அவரது நினைவுச் சின்னமாகச் செய்வதற்குத் தி.மு.கழகம் அதிகாரத்திற்கு வரவேண்டியிருந்தது. ஆம்; தேச பக்தியோடு தமிழினப் பற்றும் இருந்தால் தான் சிதம்பரனார் போன்ற தேச பக்தத் தமிழர் களைப் போற்றிப் பெருமைப்படுத்த முடியும் போலும்! எப்படியோ சிதம்பரனார் இழுத்த செக்கு விடுதலை வெள்ளி விழா நாளிலே கோவைச் சிறையிலிருந்து விடுதலை பெற்றது குறித்து மகிழ்ச்சியடைகிறேன். சிதம்பரனாரின் நூற்றாண்டு விழாவைக் கொண்டாட இருக்கும் நேரத்திலே, தமிழக அரசிடமிருந்து இந்த அறிக்கை பிறந்திருப்பது எனது மகிழ்ச்சியை இரட்டிப்பாக்குகிறது. கால் நூற்றாண்டுக்கு மேலாகச் சிதம்பரனாரின் புகழ் பரப்பப் பாடுபட்டு

வரும் தமிழரசுக் கழகத் தோழர்களிலே ஒவ்வொரு வருக்கும் இந்தச் செய்தி மகிழ்ச்சி அளித்திருக்கும் என்பதில் ஐயமில்லை.''

வ.உ.சி புகழ் வாழ்க !
வ.உ.சி. வழிவந்த ம. பொ. சி. மாண்பு வெல்க !
கப்பலோட்டிய தமிழர் புகழ் வாழ்க !
கலைஞர்—முதல்வர்—காவல் வெல்க !

# கடிதக் கட்டுரை

1. 'காஞ்சி' — பேரறிஞர் அண்ணா நினைவு மலரில் தங்கள் கவிதைகள் பற்றி ஓர் எளிய ஆராய்ச்சியாக வந்துள்ள எளியேன் கட்டுரையைப் பார்த்திருப்பீர்கள். எண்ணத்திலேனும் வாழ்த்த வேண்டுகிறேன்.

2. காஞ்சி 30—3—1975-ஆம் நாள் இதழில் தங்களின் 'வானமே பொழிக நீ!' என்னும் கவிதை வெளிவந்துள்ளது. எனக்கு என்னவோ தாங்கள் இதுவரை எழுதிய கவிதைகளுள் இதுவே சிறந்ததோ என்று எண்ணத் தோன்றுகிறது ஒருவேளை தாங்கள் எழுதும் ஒவ்வொரு புதுக் கவிதையும் இந்த உணர்வையே புகட்டும் போலும். என்றாலும், இந்தக் கவிதை எந்தக் கல் நெஞ்சையும் உருக்கி என்றென்றும் நின்று நிலவும் என்று எண்ணுகிறேன். மழையில்லாக் கொடுமைக்கு ஒரு மருந்து உண்டேல் — ஓர் ஆறுதல் உண்டேல் — அது தமிழ் நெஞ்சத்திற்கு இந்தக் கவிதையே தான் எனலாம்.

2.1 'வானமே பொழிக நீ!' என்ற கவிதையைப் படித்த பின்பு இந்தக் கவிதையின் தலைப்பு தாங்கள் பொய்ப்பு இல்லா வானத்தை நோக்கிப் பாடியதுதான் என்றாலும் கவிதையைப் படித்த பின்பு தங்களை நோக்கிக் கோடான கோடித் தமிழ் மக்கள் பாடுதற்குரிய தலைப்பாகவும் அது அமைந்திருப்பதை நினைக்கும்பொழுது நெஞ்சம் நெகிழ்கிறது. தாங்கள், வானம் வற்றினும் வற்றாத வானம் தானே!

2.2 தாங்கள் வரைந்துள்ள இந்தப் புதிய கவிதையை எவ்வளவு உண்மையுடனும் உருக்கத்துடனும் எழுதியிருப்

---

* காஞ்சி, 27-4-75—இதழில் வெளி வந்த கட்டுரை

பீர்கள் என்று நினைக்கும் பொழுது தங்களுக்குள்ள தேவை யற்ற இடையூறுகளால் எல்லாம் உள்ளம் உடையாமல் — இடுக்கண் (ணால்) அழியாது — சான்றாண்மைப் பண்போடு மக்கள் நல்வாழ்க்குத் தங்கள் உயிர் துடிப்பது தெளிவாகத் தெரிகிறது. இத்தகைய பண்பாளரைப் பார்க்கவே இந்தத் தமிழகம் இத்தனை நூற்றாண்டுகளும் தவம் செய்ததோ!

*2.3* தங்கள் கவிதையில் சொற்கள் குறைவுதான், ஆனால் சுடர்விடும் உணர்வுகள் குறைவற்றவை; நிறை வானவையே.

**2.3.1.** **வானமே பொழிக நீ!**
**வறட்சியின் நெருப்புக் காட்டை—நீ**
**வடித்திடும் கண்ணீரால் அணைத்துவிடு!**

என்னும் மூன்று வரிகளும் பாட்டின் முகப்பாய் / முகமாய் அமைந்திருப்பது தங்கள் தமிழகத்தின் தனி நிலையை நனி விளக்குவதாகும். 'வானமே பொழிக நீ!' என்னும் மூன்று சொற்களும் கோடான கோடி மக்களின் வேண்டுதலே யன்றி அவர்கள் கண்ணினும் உயிரினும் இனிய முதல்வரின் வேண்டுதலுமாகும். மூன்று சொற்களுள்ளும் 'வானமே' என்ற சொல் முதலாவதாக இருப்பது—ஏகார ஏக்கத்தோடு இருப்பது— எவ்வளவு பொருத்தம். அவ்வாறே 'பொழிக' என்ற சொல் நடுநாயகமாக இருப்பதும் 'நீ' என்ற முன்னிலைச் சொல் கடை(சி)யில் இருப்பதும் எவ்வளவு சரி; நடுநாயகமாக (இரு பொருள்களிலும்) எல்லோரும் வேண்டுவது பொழிதல்தானே! "நீ பொழிக வானமே" என்று இல்லாமல் "வானமே பொழிக நீ!" என்று இருப் பதில்தான் எவ்வளவு (வி)வேகம்! தானாகப் பொழியாத வானத்தை நேரடியாக விளித்தலும் 'நீ' என்ற ஏக வசனத் தில் சு(ட்)டுவதும் சொல்லின் செல்வர் கடமைதானே.

*3223—10*

2·3·2 வறட்சியை 'நெருப்புக் காடெ'ன இரண்டாம் வரியில் பொறித்துள்ளீர்கள். வேண்டியதுதானே; வேறு எப்படித்தான் வறட்சியின் கொடுமையை வருணிக்க —இல்லை—எடுத்துக் காட்ட முடியும்? இந்தக் கூற்றில் உயர்வு நவிற்சி அணி ஒரு சிறிதும் இல்லையே; தன்மை நவிற்சிதானே! நெருப்புக்காடு என்பது எவ்வளவு பொருத்தம்! இனி, காட்டுக்கும் மழைக்கும் உள்ள தொடர்பும் தாங்கள் அறிந்தோ அறியாமலோ இந்தத் தமிழ்த் தொடரில் அமைத்திருப்பது தலைமைச் சிறப்பு. காடுகளாலேயேதான் கார்முகில்கள் மழை பொழியும் என்பர். எனவே, இப்பொழுதும் கார்முகில்கள் அணைக்க வேண்டிய (இரு பொருள்களிலும்) புதுக்காடு— பெருங்காடு —வறட்சியின் நெருப்புக்காடு அல்லவோ.

2.3.3 மூன்றாவது வரியில் 'நீ' என்ற ஓரெழுத்து ஒரு மொழி மீண்டும் உறுத்து விழிக்கிறது—தனிச் சொல்லாய்த் தலை தூக்கி நிற்கிறது. ஆம்; அந்தச் சொல்லில்தான் மாமல்லை படைத்த மகேந்திரன் போல், பூம்புகார் படைத்த பொன்னிப் புரவலர் ஆகிய தாங்கள் கண்ணகியின் சீற்றத்தைக் காட்டுகிறீர்கள் அன்றோ ?

2.3.4 'வடித்திடும் கண்ணீரால் அணைத்து விடு' என்ற வரிதான் பகைவர்களிடமும் தாங்கள் காட்டும் பண்பும்—மாற்றாரையும் தாங்கள் மதிக்கும்—இல்லை— மன்னிக்கும் மாட்சியும் உணர்த்துகிறதோ! மழையைப் பொழியச் சொல்லிய தாங்கள் இப்பொழுது கண்ணீரை வடித்திட அல்லவோ சொல்கிறீர்கள்? ஆம், வானம் செய்த கொடிய பிழைக்குக் கண்ணீர் வடித்தல் தானே தகும் / தவம்? இந்த வரியிலும் சொற்கள் அமைந்திருக்கும் முறையும் (பாட்டிலும் முறையே தலைமைப் பண்பு) போற்றத்தக்கது. வடித்திடுதலே முதன்மையானது— முதன்மையாக வேண்டுவது. அடுத்து, 'பொழிதல்' போலவே நடு நாயகமாகப் பொருந்தத்தக்கது கண்ணீர்தான். முடிவாக

(இரு பொருள்களிலும்) அமைய வேண்டுவது அணைத்தல் (ஆம்; இங்கும் இருபொருள்களும் உண்டு) நெருப்புக் காட்டை அணைத்தால்தானே (இரு பொருள்களிலும்) அது அணையும்.

3. மின்னிடும் உன் சிரிப்பெங்கே?
 முழங்கிடும் இடிப் பேச்செங்கே?

இந்த இரு வரிகளிலும்தான் பழையபடியும் தங்கள் முன் பிறவியை எடுத்துக் காட்டுகிறீர்களோ? அரசியலாம் இப்பிறவியை அறவே விட்டு விட்டுக் கவிஞராய் ஆகி விட்டீர்களே! தங்கள் உண்மைப்பிறவி— உயர் பிறவி அது தானே! வானத்தின் மின்னலைச் சிரிப்பாகவும் இடியைப் பேச்சாகவும் கற்பனை செய்யும்பொழுது அத்தனை அவலங்களும் மறைந்து வானப்பெண் நம்மை வாரித் தழுவுவதுபோல் இன்பம் எழுகின்றதே.

4. பன்னெடு நாளாய் உந்தன்
 பன்னீர்க் குளியலின்றி
 என்னரும் தமிழகம்தான்
 ஏங்குதல் உணர்ந்திடுக!

கலைஞர்—கவிஞராகிய தாங்கள் அந்தக் கலையையும்-கவிதையையும் கூட கடமை என்று வரும்பொழுது அவை தடையாக இல்லாமல் படையாகவே பயன்படும் வகையில் செய்யும் நடை படைத்தவர்கள் அன்றோ? எனவே, வானத்தின் சிரிப்பிலும் பேச்சிலும் ம(ா)னத்தைப் பறி கொடுத்து மாசுறாமல் காக்கும் தங்கள் மறப்பண்பு இக் கவிதை வரிகளிலும் மின்னி இடிக்கிறதே. 'பன்னெடும் நாளாய்' என்னும் தொடரில்தான் எவ்வளவு ஏக்கம்? 'உந்தன்' என்ற சொல்லில்தான் எவ்வளவு உறவு! 'பன்னீர்க் குளியல்' என்ற சொல்லில்தான் எவ்வளவு குளிப் பாட்டு? குறிப்பாட்டு? 'பன்னீர்' என்ற சொல்லில் மட்டுமே கூட தங்கள் 'பிரியாவிடை' யாகிய சிட்டுச் சிலேடை 'கீச்' சிடுகிறதே; மழைநீர்—பல துளி நீர்— பன்னீர் போலும்

மணமும் குளிர்ச்சியும் மண்டிய நீர்; உண்மைதானே! 'குளியல் இன்றி என்னருந் தமிழகம்தான்' என்று சேர்த்துப் படிக்கும்போது தமிழகத்தின் குளியல் பண்பாடே தனிப் பண்பாடு என்பதை மாநில சுயாட்சி கேட்கும் தங்கள் அடிமனம்—ஆழ்மனம் வெளிப்படுத்துகிறதே! பொதுவுடைமை பேசும் தாங்கள் 'என்னருந் தமிழகம்தான்' என்று நாட்டையே தனி உடைமையாக்க முனைவதன் மர்மம்தான் என்னவோ? எதிர்க்கட்சிகளுக்குத் தெரிந்தால் என்ன ஆகும்?

*4.1* 'ஏங்குதல் உணர்ந்திடுக' என்ற தனி அடி (இரு பொருளிலும்) கருதுதல் தக்கதே.

**5.** **வானமே பொழிக நீ! எம்மனோர்**
**வாட்டம் துடைத்திடவே**
**மானமே பெரிதென்றெண்ணும்**
**மறத் தமிழ்க் குலத்தார் மீது**
**மாசுகள் கற்பித்தேனும்**
**மகுடத்தைப் பறிக்கலாமென்று**
**மத்தியில் உள்ளோர் சிலர் — அவதூறுக்**
**கத்தியை வீசுகின்றார் — அவர் தம்**
**புத்தியைத் தீட்டிடவே;**
**பொழிந்திடுக வானமே — நீ தான்**

இந்தப் பகுதியே பாட்டின் நடுவனதாய் விளங்கும் பகுதி. ஆம்; நாட்டின் நடுவனதாய் விளங்கும் பகுதியைப் பற்றியதே பாட்டின் நடுவனதாய் விளங்கும் இப்பகுதி. 'வானமே பொழிக நீ' என்ற தொடர் இரண்டாவது முறையாக இப்பகுதியில் இடம் பெற்றிருப்பது எண்ணத் தக்கது. ஆனால் இம்முறை இத்தொடருடன் சேர்ந்தே 'எம்மனோர்' என்ற சொல்லும் நெருங்கி இருப்பது நெருக்கத்தை! நெருக்கடியை நினைவூட்டுவதாகும். இனி, இப்பகுதியில் உள்ள நடுவண் பகுதிகள் அண்மையில் நடை

பெற்ற ஓர் அரசியல்சர்ச்சையை மையம்—மாநிலம் பற்றிய கருத்து மாறுபாட்டை—கருவில்/கருத்தில் கொண்டதாகும்.

5.1 மாண்புமிகு கலைஞர் தாம் வேறு மானமுள்ள தமிழினம் வேறு என்று நினைப்பவர் இல்லை என்பதை நினைவூட்டும் இப்பகுதியில் வீரம் வீறிடுவது சொல்லிலே சுழலும் ஓசையாலேயே உணரலாம். மூன்றாவது வரி முதல் ஏழாவது வரி வரை ஐந்து வரிகளும் முதல் எழுத்து மகரமாய் அமைந்திருத்தல் இனத்தின் மகாரத்தை எதிரொலிப்பதோ? ஆம்; படைப்பாளியையும் அறியாமல் தமிழ் இப்படிப்பாடும்! மேலும் இன்று நாட்டில் ஏற்பட்டிருக்கும் வறட்சியின் கொடுமையும் தன் எல்லையைக் கண்டிருக்கும் இடம் மறவர் குல மக்கள் வாழும் இராமநாதபுரச் சீமையில்தானே! அங்கு நடக்கும் வறட்சிப் பணிகள் பற்றித்தானே பரிதும் பூசல் பூத்தது?

5.2 'மானமே பெரிதென்றெண்ணும்' என்ற தொடருள்ளும் ஓர் கருத்து கத்தியின் கூர்போல் நீட்டிக் கொண்டுள்ளதாக நினைக்க வேண்டியுள்ளது. ஆம்; 'மானமே பெரிது' என்று எண்ணத்தான் முடிகிறதே தவிர வாழத்தான் பலருக்கும் முடிவதில்லையே!

5.3 நம் குலம் தமிழ்க் குலம். அதன் தலைமைப் பண்பே மறம்தான். கல்தோன்றி மண் தோன்றாக் காலத்தே தமிழோடு கூட இல்லை — வாளோடு தோன்றி மூத்த குடி அல்லவோ தமிழ்க்குடி? பொதுப் பகைவனை வெட்டுவதிலும் சிறப்பு நண்பனை வெட்டுவதற்கே வீரம் பேசும் வாள் அல்லவோ தமிழன் வாள்? இப்பொழுது நடந்ததும்/நடப்பதும் அதுதானே! அதனால் இந்தத் தமிழ்க் குலத்தை/குணத்தை அறிந்தோ அறியாமலோ கலைஞர் 'மறத்தமிழ் குலத்தார்' என்றது வேதனையைச் சோதனையாக்கும் போதனைதானோ?

5.4 'மீது' என்ற ஒரு சொல்லே அத்து மீறிய செயலையும் அறிவிப்பதோ?—மோதுதலை மொட்டுத் தமிழில் இட்டு வைப்பதோ?

5.5 'மாசுகள் கற்பித்தேனும்' என்னும் தொடரில் தான் எவ்வளவு பழிப்பு — பதைப்பு? ஏளனம் — எரிச்சல்?

5.6 'கற்பித்தேனும்' என்ற சொல்லில் உள்ள உண்மையில்தான் எவ்வளவு வறட்சிக் காற்றின் வெப்பம்? மேலும் கற்பனை, மறவர் மக்களால் பொடிப்பொடியாகும் என்னும் கருத்தோ?

5.7 'மகுடத்தைப் பறிக்கலாமென்று' என்ற தொடரில் உள்ள 'ஆம்' எதிராளியின் நுண் கனவை வெளிப்படுத்தும் அன்றோ. மேலும் அப்படியே பார்த்தாலும் மகுடத்தைத்தானே பறிக்க முடியும்? மகுடம் போவதால் மனிதன் போய்விடுவதில்லையே!

5. 8 'மத்தியில் உள்ளோர் சிலர்' என்னும் தொடரில் 'மத்தியில்' என்பது எவ்வளவு இராஜதந்திரச் சொல். நல்லபடியாய் இருக்கக்கூடிய இருவரையும் கூட பிரிக்கக்கூடிய பேர்வழிகள் மத்தியிலும் இருப்(பே)பார் அல்லவோ? ஆனால் நல்லவேளையாக அவர்கள் பலரில்லை—சிலர்தான்.

5.9 'மத்தியில் உள்ளோர் சிலர்' என்னும் தொடரோடு தனிச்சீராய் 'அவதூறு' என்ற சொல் ஆந்தைபோல் முழித்துக்கொண்டு அமைந்திருப்பது மெத்தப் பொருத்தம்!

5.10 'அவதூறு' எவ்வளவு கொடுமையானது என்பது அது கத்தியாக உருவகிக்கப் படுவதாலேயே உணரத்தக்கது. மத்தியில் உள்ளவர் சிலர் கத்தியை வீசினால் என்ன ஆகும்? சுற்றிலும் இருப்போர் எல்லோரையும் அல்லவோ சுழற்றி எறியும்? பக்கம் பார்க்காமல் பலம் பார்க்கும் கத்தியை வைத்திருப்போர் என்ன கதி ஆவர்?

**5.11 கத்தியை வீசுகின்றார்—அவர் தம்
புத்தியைத் தீட்டிடவே**

என்னும் வரிகள் ஒரு தொடர் கதை அன்றோ? ஆம்; பேரறிஞர் அண்ணா பேசிய மொழியன்றோ அது? அறிஞர் பேசியதையே கலைஞராகிய தாங்கள் பேசுவது வளரும் நாவல் அல்லவோ?

*5.12* 'பொழிந்திடுக வானமே' என்ற தொடரோடு 'நீதான்' என்ற தனிச்சீர் அமைந்திருப்பது இயற்கையிடம் மனித இதயம் சரணடைவதற்குச் சாட்சி அன்றோ? இயற்கையை வெல்ல வல்லார் யாரோ? 'நீதான்' என்பதில் 'நீ' தானாகவே (இயல்பாகவே) என்பதும் தொனிக்கிறதன்றோ?

**6. இந்துக்கள் முஸ்லிம்கள் இங்குள்ள
கிறித்தவர்—உன்
பந்துக்கள் வேண்டுகின்றார்
முந்துத் தமிழ் போல மும்மாரி பொழிக என்று**

இனங்களும் மதங்களும் மொழிகளும்கூட இயற்கையால் ஏற்பட்ட வேற்றுமைகளே என்றாலும் அந்த 'மை' களுக்கு அடிப்படையில் இருக்கும் ஒற்றுமையை அறியார் அறியாதாரே!

*6.1* 'இந்துக்கள் முஸ்லீம்கள் இங்குள்ள' என்ற வரியை அடுத்து 'கிறித்தவர்கள்' என்ற சொல் அமைந்திருப்பதும் ஆழக் கருதத்தக்கது. இந்த அமைப்பில் கால முறை கருதப்பட இருப்பதோடு இந்த நான்கு சொற்களுள்ளும் 'இங்குள்ள' என்ற தொடர் உயிராய் அமைந்திருப்பது ஊன்றி உணரத்தக்கது.

*6.2* 'உன் பந்துக்கள் வேண்டுகின்றார்' என்ற தொடரில் உன் என்பது தனிச் சீராகவும் (அதன் சீர்நாடி தானே இந்தப் பாட்டில்—இந்த நாட்டில் இத்தனைச்

சீர்களும்) 'பந்துக்கள் வேண்டுகின்றார்' என்பது தனி வரியாக அமைந்திருப்பதும் தனிச்சிறப்பு வாய்ந்ததாகும். பந்துக்கள் என்ற சொல்லுக்கு என்ன பொருளோ? 'ஆழ்ந்திருக்கும் கவியுள்ளம்' யாதோ? 'பந்துக்கள்' என்றால் உறவினர்கள் என்றும் பொருள் கொள்ளலாம்; 'பெருமைப் பெருந்துளிகள்' என்றும் பொருள் கொள்ளலாம்; எப்படியாயினும் பந்துக்கள் (உறவினர்கள்) வேண்டின் பந்துகள் (மிகப் பெருந்துளிகள்) கிடைப்பதே முறை அன்றோ?

6.3 'முந்துத் தமிழ் போல மும்மாரி பொழிக என்று' என்ற தொடரில் விளங்கிவிடுகிறது வீணைத் தமிழ்க் கவிஞராகிய தங்கள் விழைவு எல்லாம். 'முந்துத் தமிழ்' என்ற தொடர் முத்துத் தமிழின் வித்து போலும்! முந்துவதுதானே முத்து. தமிழும் முந்தி—தமிழனும் முந்தி—எதிலும். முந்துத் தமிழ் முத்துத்தமிழாய் இருப்பதிலும் முந்திதானே. அதனால் மும்மைக்கு உதவும் முழுமையையே 'மும்மாரி பொழிக' என்று வேண்டுகிறது முத்தமிழ்க் கவிஞர்—கலைஞராகிய தங்கள் திருவுள்ளம். 'திங்கள் மும்மாரி' பொய்யாது பெய்தால் இந்தத் தீதெல்லாம் ஏது?

7. நல்லவர்கள் அழைக்கின்றார்
நன்றியற்றவரோ நீ கருணைகாட்டாமல்
இருக்கவேண்டுமென நினைக்கின்றார்—அவர்தம்
அனல் நெஞ்சம் குளிரடைய உன்
புனல் கரத்தை நீட்டிடுக

இப்பகுதியில் இரு சிறப்புக் கருத்துகள் இருப்பதாக எண்ணலாம். 'அழைப்பார் ஒரு சாரார்; அதைத் தடுக்க நினைப்பார் இன்னொரு சாரார்' அழைப்பவர்களோ நல்லவர்கள்; தடுக்க நினைக்கின்றவர்களோ நன்றியற்றவர்கள். 'என்ன செய்ய போகிறாய்?' என்று வானத்துக்கே சோதனை வைக்கிறீர்கள் வையக வீரராகிய தாங்கள்!

7.1 நன்றியற்றார் நெஞ்சம் நெருப்பு நெஞ்சம்; அந்த நெஞ்சத்தையும்கூட அழித்துவிட விரும்பாமல் வன்னிப்ப ளைதயே மாண்பாகக் கருதும் மனிதராகிய தாங்கள் 'நெருப்பு அவிந்தால் போதுமே. விருப்பு வருமே' என்று அருளோடு எண்ணுவது பொருள் சேர்ந்த புகழ் தருவ தாகும். அதனால்தானே வஞ்ச நெஞ்சமும் எஞ்சல் இல்லா ஈரம் பெறப் புனல் கரத்தை நீட்டிப் பருவ மழை பெய்யப் பாடல் பெய்கிறீர்கள்.

7.2 'கரத்தை நீட்டி' என்ற சொல்லுக்கே உள்ள மரபுத்தொடர்—பொருள் (Idiom-meaning) நினையத் தக்கது!

8, வானமே பொழிக நீ—தமிழ்
வையகம் வாழவே!

இவ்வாறு வரும் இந்த இறுதிப் பகுதிதான் தங்கள் பாட்டின் எல்லா வரிகளிலும் என் நெஞ்சைப் பறிகொண்ட குறிக் கோள் வரிகள். காரணம், இந்த இரண்டு வரிகளும் வறட்சிக் கொடுமை ஒழிந்த பின்னும்—பசுமை படர்ந்து பிணைத்த பின்னும்—தேவை; பெருந்தேவை.

8.1 வானம் பொழிவது ஒரு காலத்தில் வரும் வறட்சிக்காக மட்டும் இல்லையே; 'தமிழ் கூறு நல்லுலகம்' என்று பனம்பாரனார் காலம் தொட்டுப் போற்றப்படும் தமிழ் உலகம் தழைப்பதற்காகவே அன்றோ? மேலும் தமிழ் உள்ள இடமே உயர்ந்தோர் உலகம்; உயர்ந்தோர் உள்ள இடமே தமிழ் உள்ள இடம். தமிழே ஓர் உலகம்; உலகமே ஒரு தமிழ். தமிழில்லா உலகத்தால் என்ன பயன்? உலகம் இல்லாமல் தமிழுக்கு ஏன் வாழ்வு? இந்த எண்ணங் களை எல்லாம் சிந்தையில் சிறக்க வைக்கும் தொடர் அன்றோ தங்கள் 'தமிழ் வையகம்.'

8.2 கவிதை 'வானமே' என்று தொடங்குகிறது. 'வாழவே' என்று முடிகிறது. ஆம்; வாழ்வதற்கு வழங்க வில்லையானால் வானத்திற்கு வான் என்று பெயர் ஏன்? அது இருந்தால் என்ன? இறந்தால் என்ன?

8.3 தங்கள் கவிதையின் முதல் வரி 'வானமே பொழிக நீ'. முற்றும் வரி 'வையகம் வாழவே' எவ்வளவு பொருத்தம் — பொருத்தமே புலமை அன்றோ?

9. 'வானமே பொழிக நீ!' என்ற தங்கள் கவிதையையே யான் தொடக்கத்தில் குறிப்பிட்டது போல் இதுவரை தாங்கள் யாத்தவற்றுள் எல்லாம் அமரத் தன்மை வாய்ந்ததென்றே எண்ணுகிறேன்.

9.1 உள்ளவே உரை; கடலில் காற்று அழுத்தம் ஏற்பட்டால் புயலும் மழையும் புறப்படுவது போல் நெருக்கடி ஏற்பட்டால்தான் சத்தியமான — நித்தியமான கவிதைகளும் பிறக்கும் போலும்!

9.2 அதிகமான் ஔவையிடம் செய்த சூழ்ச்சி போல் தங்கள்பால் இந்தக் கவி மழை வேண்டியே— பா வழிபாடு விரும்பியே—கார் முகிலும் கனத்த சூழ்ச்சிகள் செய் கின்றதுவோ? வாய் திறந்து ஒரு முறை சொல்லிவிட்டால் தாங்கள்தான் மங்காத் தமிழில் ஒரு மாபெருங் காவியமே பாடித் தந்து விடுவீர்களே!

பின்குறிப்பு:- தமிழர் மனப்பாடம் செய்யத்தக்க 'வானமே பொழிக நீ' என்ற இக்கவிதையை நாளிதழ் களிலும், சுவரொட்டிகளிலும் வெளியிட்டுக் கவி வழி கன மழை பெறுமாறு மக்கள் மனம் மன்றாட ஒன்றாடச் செய்ய வேண்டு கிறேன்.

8.2 கவிதை 'வானமே' என்று தொடங்குகிறது. 'வாழவே' என்று முடிகிறது. ஆம்; வாழ்வதற்கு வழங்க வில்லையானால் வானத்திற்கு வான் என்று பெயர் ஏன்? அது இருந்தால் என்ன? இறந்தால் என்ன?

8.3 தங்கள் கவிதையின் முதல் வரி 'வானமே பொழிக நீ'. முற்றும் வரி 'வையகம் வாழவே' எவ்வளவு பொருத்தம் — பொருத்தமே புலமை அன்றோ?

9. 'வானமே பொழிக நீ!' என்ற தங்கள் கவிதையையே யான் தொடக்கத்தில் குறிப்பிட்டது போல் இதுவரை தாங்கள் யாத்தவற்றுள் எல்லாம் அமரத் தன்மை வாய்ந்ததென்றே எண்ணுகிறேன்.

9.1 உள்ளவே உரை; கடலில் காற்று அழுத்தம் ஏற்பட்டால் புயலும் மழையும் புறப்படுவது போல் நெருக்கடி ஏற்பட்டால்தான் சத்தியமான — நித்தியமான கவிதைகளும் பிறக்கும் போலும்!

9.2 அதிகமான் ஔவையிடம் செய்த சூழ்ச்சி போல் தங்கள்பால் இந்தக் கவி மழை வேண்டியே— பா வழிபாடு விரும்பியே—கார் முகிலும் கனத்த சூழ்ச்சிகள் செய் கின்றதுவோ? வாய் திறந்து ஒரு முறை சொல்லிவிட்டால் தாங்கள்தான் மங்காத் தமிழில் ஒரு மாபெருங் காவியமே பாடித் தந்து விடுவீர்களே!

பின்குறிப்பு:- தமிழர் மனப்பாடம் செய்யத்தக்க 'வானமே பொழிக நீ' என்ற இக்கவிதையை நாளிதழ் களிலும், சுவரொட்டிகளிலும் வெளியிட்டுக் கவி வழி கன மழை பெறுமாறு மக்கள் மனம் மன்றாட/ஒன்றாடச் செய்ய வேண்டு கிறேன்.

எனவே 'நெஞ்சுக்கு நீதி' ஆய்விலும் பார்வையையே தலைமையாகப் பயன்படுத்தியுள்ளேன். ஆனால் அடியேன் இன்னும் பல்கலைக்கழகப் பணியில் இருப்பதாலும் கலைஞரே ஒருமுறை தம் மகனைப் பற்றிக் குறிப்பிட்டது போல் அரசியல் நெருப்பை இந்த 'இளந்தளிர்' தாங்க முடியாது—அதுவும் தமிழ்நாட்டில், தாங்க முடியாது, ஆதலாலும்—அரசியல் பற்றிய என் கருத்துகளை அடக்கி ஒடுக்கிக் கொள்கிறேன்.

கலைஞர் தமிழினத்தின் தலைவராய் இருக்கப் பெருந் தகுதி படைத்தவர் என்பது 'நெஞ்சுக்கு நீதி' நூலைப் படிப் பதற்கு முன்பு என் உள்ளத்தில் இருந்ததிலும் இப்போது அதிகமாய் உள்ளது. தனிப்பட்ட முறையிலும் அவரிடம் எனக்குள்ள மதிப்பு உயர்ந்துள்ளது. காரணங்கள் கம்ப்யூட்டர் போன்ற அவர் அறிவும் செயலாற்றலுமே. கலைஞரின் பெயரில் உள்ள முதல் முடிவெழுத்துகளைச் சேர்த்தால் 'கதி' என்று வரும். தமிழுக்குத்—தமிழ் மக்களுக்கு—அதிலும் அடிமட்ட நிலையில் உள்ள தமிழ் மக்களுக்கு அவரே 'கதி' என்று போற்றப்படும்படி அவர்தம் வாழ்வு அமைய வேண்டுமென்றும் விழைகிறேன்.

எப்படி காங்கிரசை வளர்த்தது பிரிட்டிஷ் அடக்கு முறைகளோ அப்படியே (சிறிய அளவில்) திராவிட இயக் கத்தை வளர்த்தது காங்கிரமே என்பது 'நெஞ்சுக்கு நீதி' யால் தலைமையாகத் தெளிவாகிறது. காங்கிரஸ் வளர பிரிட்டிஷ் பேரரசு தேவை; திராவிட இயக்கம் வளர காங்கிரஸ் கட்சி போதும் தானே ? !

வளர்ச்சிப் பாதையில் வழி காட்டியவர்கள் வழுவும் போது எதிர்ப்பது ஏற்புடையது என்ற என் கருத்து 'நெஞ்சுக்கு நீதி'யைப் படிப்பதால்—திராவிட இயக்க வரலாற்றைத் தெரிந்து கொள்வதால்—உறுதிப்படுகிறது. ஆனால் 'எது வழு ?' என்பது ஒரு பெரு வினாவே !

என் வாழ்க்கையில் யான் கண்ட அரிய பெரிய காட்சி களுள் ஒன்று கலைஞர் முதல்வராய் இருந்த காலத்தில்

தொடர்ந்து துணைவேந்தராய் இருக்க முயன்று முடியாமற் போன நேரத்தில் பேராசிரியர் டாக்டர் தெ. பொ. மீ. டாக்டர் கலைஞரின் சிலப்பதிகார நாடகத்தைப் படித்துக் கொண்டிருந்தார். இதன் காரணம் ? !

இனி, 'நெஞ்சுக்கு நீதி' பற்றிய ஆய்வைத் தொடங்கு வோம். எப்படித் தொடங்குவது ? எப்படி முடிப்பது ? சிக்கல்தான். என்றாலும் நீரில் குதித்து விடுவோம்; இதுகாறும் கற்ற நீச்சல் கலை அப்படியா நம்மைக் கை விட்டுவிடும் ? நம்பிக்கையைக் கைவிட்டால் வேறு எந்தக் கைதான் கை கொடுக்கும்? தும்பிக்கையிலும் நம்பிக்கையே நற்றுணை ! தும்பிக்கையை (இதை அண்மையில் நேப் பாளத்திலும் நிரம்பக் கண்டேன்) நம்புவதும் தன்னம்பிக் கையால் ஏற்படும் மன அழுத்தம் (tension) இல்லாமல் இருக்கத்தானே ! இந்த உளவியல் உண்மை ஓரத்தக்கது— ஓரங்கட்டத் தக்கதன்று !

'நெஞ்சுக்கு நீதி' பற்றிய சில தலைமையான கருத்து களை ஒருவகை முன்னுரிமை அடிப்படையில் காண்போம். உடல் நடை ; உயிர் கருத்து—உயிர் என்ற ஒன்றுதான் தனித்து இல்லை என்கிறார்களே—எனவே நடை—புறம், கருத்து—அகம் என்று முன்னுதல் முறை அவ்வகையில் முதலில் தோன்றும் நிறை—அழகு தமிழில் ஆக்கப்பட்ட நூல் 'நெஞ்சுக்கு நீதி' என்பதாகும். இரண்டாவது கலைஞருடைய காலம்—திராவிட இயக்கத்தின் காலம், என் போன்றோரின் சம காலமே. யான் பிறந்து வளர்ந்த ஊர் திருச்சிராப்பள்ளி ; யான் படித்தது சென்னை ; அதிலும் அண்ணாவும் படித்த பச்சையப்பர் கல்லூரியில். யான் முதலில் பத்தாண்டுகள் (1950—60) பணி புரிந்ததும் அண்ணாவாலும் உருவாக்கப்பட்ட காஞ்சிபுரம் பச்சை யப்பர் கல்லூரியில் ; பின்னர் (1960 முதல்) இந்நாள்வரை பணிபுரிவதும் சென்னைப் பல்கலைக் கழகத்தில்; காலம், களம் இரண்டாலும் திராவிடக் கழகம்—திராவிட

முன்னேற்றக் கழகம் இரண்டையும் கூர்ந்து பார்க்கும் வாய்ப்புப் பெற்றவன் எளியவன்.

மேற்கண்ட பின்புலத்தோடு பார்க்கும்போது என்னைக் கவர்வது கலைஞர் தமிழ்—கவிதைத் தமிழ். இந்தத் தமிழ் தானே—இந்தத் தமிழ் காரணமாகத்தானே தி. மு. க. வளர்ந்தது! பெரியார் நடையிலும் பெரிதும் வெறுபட்ட நடை—ஆங்கிலத் தாக்கம் (சொற்றொடர்கள்? முற்றுச் சொற்றொடர்கள் அமைப்பு (Syntax) நிலையிலும்) புதுமைக் கருத்து வெளியீடுகள் வகையிலும்—புத்தம் புதிய நடை—படை இரண்டிலும் பேரறிஞர் அண்ணா நடை. இந்த நடையைப் பின்பற்றிய படைக்குத் தலைவர் கலைஞரே! ஆம். நடை—படை இரண்டிலும் பேரறிஞர் அண்ணாவை எதிரொலி செய்யும் ஏந்தல் கலைஞரே. சில நேரங்களில் எதிரோலி மூல ஒலியினும் பேரொலியாக இருந்தல் இயற்கை! இவ்வகையில் கலைஞரின் அழகுத் தமிழ் நடைக்கு—கருத்துக் கலைக்கு—புல வாழ்க்கைக் கலைக்குச்—சில சான்றுகளை அகழ்வோம்—மகிழ்வோம். ஒருவர் தம் நடைக் கூறுகள் அவர்தம் நெஞ்சுக் கூறு களையும் காட்டும். (எடுத்துக்காட்டுகள் இருக்கும் பக்கங் களின் எண்கள் பிறை வளைவில் தரப்பட்டுள்ளன.)

1. அடக்கத்துடன் கருத்தை அறிவிக்கும் நுட்ப திட்பம் (12)
2. நகைச்சுவை நடை (18, 25, 26, 187)
3. பகுத்தறிவுக் கருத்து விளக்கம் (29)
4. திருப்புரைகளாக வரும் தொடர்கள்—முற்றுத் தொடர்கள் / கருத்துகள் (90)
5. திருப்புரைகளாக வரும் செய்திகள் (34, 35)
6. 'பளீர்' என்று பதிலுரைந்தல் கலை (39)
7. தன்னை வைத்துப் பிறரை—பிறவற்றைத் தொடர்பு படுத்தல் (39)

8. உலக அறிஞர்கள் கருத்துகளோடு உடன்படலும் முரண்படலும் (14)
9. பிறமொழிக் கலப்பு (நூல் முழுதும் அழகுத் தமிழ்; முகத்தில் அம்மை வடுக்கள் போல் சில)
10. அரிய பழமொழிகள் (687)
11. கலைஞரின் உரைநடையில் கவிதைப் பண்பு, உவமைகள் (53, 85, 86)
12. கடமைக்காக முதலில் நெஞ்சம் கல்லாதலும் பின்னர் கனிதலும் (55)
13. புதிய தொடர்கள் (64, 182, 207)
14. புது ஆண்டு படைத்தல் (66)
15. அடுக்குத் தொடர் (72)
16. தம் தனி இயல்புகளைத் திரும்பச் சொல்லல் (80)
17. உணர்ச்சி—கற்பனை (81)
18. உட்பொருள் தொடர்கள் (ஒரு சில)
19. நிகழ்ச்சிகளைச் — செய்திகளைத் தேர்ந்தெடுத்துத் தெரிவிக்கும் திறம் (92)
20. இயல்கட்குத் தலைப்பு தருவதில் கலைத்திறம் (94)
21. உளவியல் உண்மை (99)
22. மாற்றார் மாண்பு காணல்—கசப்பான உண்மை கூறல் (108)
23. மனிதர்களைப் பார்த்ததும் எடைபோடும் திறம் காட்டல் (129)
24. காரணம் கண்டு கூறல் (129)
25. புதுக்கவிதை போல்—ஏடுகள் போல் கருத்துகளை எழுதிக் காட்டும் திறம் (131)
26. அவரவர்களின் தனிச்சிறப்பை ஆய்ந்தறிந்து—அளந்தறிந்து கூறல் (142)

27. காரணம் கூறாமல்—ஆதாரம் காட்டாமல் எழுதுதல் (147)

28. தன்போக்கில் அமையும் நிகழ்ச்சிகட்கு இடையே இயல்பாக அமைந்துவிடும் பொருத்தத்தை எடுத்துக் காட்டுதல் (148–149)

29. உரைநடையும் ஒளிபெறத் தம் கவிதைகளை ஆங்காங்கே எடுத்துரைத்தல் (140-152, 159-162)

30. தன்னியல்பைத் தானே ஆய்தல்/வியத்தல் (162)

31. உயர்ந்த வெற்றிகளோடு தன் வெற்றியையும் ஒப்பிட்டு உவத்தல் (165)

32. ஒருவரின் இருவேறு பண்புகளின் சிறப்பை எடுத்துரைத்தல் (168)

33. ஓர் அடைச் சொல்லாலேயே வரலாற்று உண்மைகளை—உள்ளத்து உணர்ச்சிகளை இளங்கோ அடிகள் போல் உணர்த்தல். 'கொடுங் கடல்' என இளங்கோ கூறுதல் போல 'எஞ்சிய தமிழ்க் கவிதை' எனல்.

34. முரண் அழகு (181)

35. பழந்தமிழ் சிலப்பதிகார நடையை அப்படியே பதித்தல்/பயன்படுத்தல் (181)

36. பழந்தமிழ் நடைபோலப் புதுக்கருத்து நடை அமைத்தல் (181)

37. இயற்கை வருணனையிலும் இன எழுச்சிக்குரிய வரலாற்றுச் செய்திகளை வைத்தல் (185)

38. உவமைகளைப் பொருத்திக் காட்டல் (186)

39. எண்களிடையே பொருத்தம் காணல் (189)

40. மாற்றான் சொல்லைக் கொண்டே மாற்றானை மடக்கல் (191)

41. மதக் கருத்துப் பரப்பு மேடை/விளம்பர நடையை மதங்கடந்த/மத எதிர்ப்பு அரசியல் கருத்துப் பரப்புக்கும் பயன்படுத்தல் (194)

42. தமிழ்த்தாயைப் 'பக்தி' உணர்வோடு உருவகப் படுத்தல் (194)

43. தவறான உவமை தவிர்த்துச் சரியான உவமை சாற்றல் (194)

44. எதுகைச் சொற்களைக் கருத்தாழத்தோடு பயன் படுத்தல் (198)

45. உள்ளத்துணர்வுகளை ஒளிக்காமல் உரைத்தல் — கற்பனை (199)

46. மோனைக்காகப் பிறமொழிச் சொற்கலத்தல் (179)

47. தவிர்க்கக் கூடிய இடத்தும் பிறமொழிச் சொற்களைத் தவிர்க்காமை (199)

48. போர்க்களத்தும் அவலச்சுவையை அதிகப்படுத்த காதற்சுவையை வேண்டுமென்றே மிகுத்தல் (199-200)

49. கட்சி அரசியல் சொல்லை உவமையாகப் பயன் படுத்தல் (நகைச் சுவையும்) (207)

50. வரலாற்றுச் செய்தி தற்போதைய வண்ணனைக்குள் பயன்படுத்தல் (207)

51. திடீரெனப் பழைய உரையாசிரியர் நடைக்குச் சிலேடை நினைவால் தாவல் (211)

52. உருவகத் தொடர்கள் (214)

53. ஆட்சிச் சொல் போன்ற புதுச்சொல் அமைத்தல் ('ஜலஸ்தாபனம்') (217)

54. பிறநாட்டுச் செய்திகளை நலனறிந்து / பயனறிந்து போற்றல் (233)

55. அண்ணாவின் சொற்களை மேற்கோள் காட்டல் (275, 298, 300)

56. அண்ணாவும் போற்றிய கலைஞர் கருத்தும் தமிழும் (284)

57. மக்கள் அறியாமையைத் தக்க சான்று தந்து விளக்கல் (287)
58. காலப் பொருத்தம்—நூற்றாண்டுப் பொருத்தம் காட்டல் (289, 290)
59. அரிய செய்திகளை எடுத்துக்காட்டுதல் (295)
60. மோனைச் சுவையையும் கருத்தூற்றலில் மூழ்கடித்தல் (308)
61. குறள் கருத்தை—நடையைத் தம் கருத்து நடையிலே குழைத்தல் (320)
62. மனோன்மணியம் சுந்தரனார் தமிழைத் தம் தமிழில் தழைக்க வைத்தல் (331)
63. அயல்நாட்டு நிகழ்ச்சிகளோடு தமிழ்நாட்டு நிகழ்ச்சிகளை ஒப்பிடல் (336)
64. காங்கிரசை எதிர்த்தாலும், காங்கிரசின் விடுதலைப் போராட்ட நிகழ்ச்சிகளைத் தம் கழக நிகழ்ச்சிகளோடும் விடுதலைப் போராட்ட வீரர்களின் கருத்துகளைத் தம் இயக்கப் போராட்டக் கருத்துகளோடும் ஒப்பிடல் (342)
65. கட்சி அரசியல் வெற்றிக்கு நாடகக்கலை பயன்படல் பற்றிய விளக்கம் (347)
66. பேரறிஞர் அண்ணாவின் பெருமைகளை அவ்வப் போது விளக்கல் (352)
67. மனிதாபிமானம் (மனிதத்தை) மதித்தல் (358, 359)
68. பத்தாண்டுகட்கு ஒருமுறை வரலாறு திரும்புகிறது எனல் (373)
69. மாற்றுக் கட்சித் தலைவர்களின் கலைத் திறன்—அறிவுத் தெளி—தொண்டு போற்றல் (401)
70. தன் பெருந்தன்மையைப் புலப்படுத்தல் (435)
71. தனித்தமிழ்—மறைமலை அடிகளைப் போற்றல் (455, 456)

72. புள்ளி விவரங்களைத் தொகுத்துத் தரும் முயற்சி (460)
73. 'சட்டமன்றம்', 'கலை', 'இலக்கியம்' போன்ற வற்றுக்கு விளக்கம் கூறல் (462, 484)
74. இன்றைய பஞ்சாப் சிக்கல் குறித்துப் பல்லாண்டுகட்கு முன்பே எழுதுதல் (464, 465)
75. விதிவிலக்காக (ஒரே இடத்தில் என்றும் கூறலாம்) தமிழிலக்கியத்தில் உள்ள செய்தி பற்றித் தவறாகத் தகவல் தருதல் (470)
76. திருக்குறள் கருத்துப்படித் தம் வாழ்க்கை அமைய வேண்டும் என்று அவாவல் (471)
77. கழகக் கொள்கைகளைச் சுருங்கச் சொல்லி விளங்க வைத்தல் (477)
78. சொற்பொருள் சுவை (483)
79. அரசியல் தலைவர்களையும், கலையுலகத் தலைவர் களையும் தக்க இடங்களில் போற்றல் (நூலில் பற்பல இடங்கள்)
80. பாரதி, பாவேந்தர் பாடல்களைப் போற்றல் (நூலில் பற்பல இடங்கள்)
81. அழகிரிசாமி, பாவேந்தர், நேரு தனிச்சிறப்புப் போற்றல் (இயல் 99)
82. ஒரெழுத்து ஈரெழுத்து மாற்றத்தாலேயே வேறு சொல் படைத்து வேறு கருத்து வீறு காட்டல் (512)
83. நாட்டுப்புற வாழ்வை நன்கறிந்து அதிலிருந்து உவமை கூறல் (519)
84. பலர் போக்கிலேயே சிலப்பதிகாரம் பற்றி ஒரு தவறான தகவல்—'காப்பியத் தலைவர்கள் சாதாரண மக்கள்' என்ற தவறான தகவல்—தருதல் (524)
85. தம்மைப் பாராட்டும் அறிஞர்கள் கருத்தையும் தேர்ந்து தரல் (525-526)

86. அடுக்கு உவமைகளைக் கூறல் (546, 549)

87. கடவுள், சமயம், பக்தி இவற்றை மறுத்தாலும் அந்தப் பொருள்கட்கான மாற்றுகளில் மகிழ்தல் (551)

88. ஒரெழுத்து மாற்றத்தாலேயே உணர்ச்சி / உண்மை உணர்தல் எடுத்துக்காட்டு : சிறை / அறை (570)

89. பொதுவாக நூல்களிடமும் சிறப்பாக மாக்சிம் கார்க்கியிடமும் தனி ஈடுபாடு கொள்ளல்

90. அடிப்படை வரலாற்று உண்மைகளை அறிவித்தல் (581)

91. பெருந்தலைவர்கள் — இளந்தொண்டர்கள் என்று வேறுபாடு பாராமல் போற்றல் (581)

92. செய்திகட்கும் முரணழகு சிறக்க உவமை கூறல் (583)

93. வினா அழகு (594)

94. சிங்காரவேலர் போன்ற பெருந்தலைவர்களை மன மாரப் போற்றல் (595)

95. சுருங்கிய சொற்களில் சி. பா. ஆதித்தனார் போன்றோரின் சிறப்பைச் சொல்லோவியமாக்கல் (603)

96. இரஷ்யா போன்ற நாடுகள் ஆசிய உணர்வும் பெற்றிருக்கும் காரணத்தை நுண்மாண் நுழைபுலத்தால் அறிந்து கூறல்; அதன் வாயிலாகத் தம் உலகத் தறிவை உணர்த்தல் (610)

97. மெய்யறிவு—மெய்யுணர்வு மேவிட ஆழ்ந்த கருத்துக்களைக் கூறல் (611)

98. மாற்றார் தலைவர் ஒருவர் மறைந்தபோது அவர் குறைகளையும் மறந்து போற்றும் வியத்தகு பண்பு (612)

99. ஒரு கட்சியின் வீழ்ச்சிக்கான காரணங்களைத் துல்லியதாகப் பட்டியலிட்டுக் கூறல் (615)

100. தம் கட்சியின் இறுதி இலக்கு பற்றியும் துல்லியமாகப் பட்டியலிட்டுக் கூறல் (616)

101. வீராணம் திட்டம் போன்றவை குறித்து மாற்றாரே போற்றியமையை நினைவூட்டல் (618)

102. மாற்றார் வீழ்ச்சிக்கு மனமிரங்கல் (622)

103. ஒரேவழி—ஒரே இடத்தில்—பொருந்தாச் சொல் பயன்படுத்தல். எடுத்துக்காட்டு : சூட்டுக்கோல் (624)

104. தன் கட்சிப் பெருந்தன்மை போற்றல் (628)

105. ஒரு பொருளைப் பற்றிய செய்திக்கு உவமை தர அப்பொருளையே பயன்படுத்தல் (630)

106. தன் இரு கண்களாகிய கலை, அரசியல் இரு துறைகளிலும் தன் பணிகளை முறைப்படுத்திக் கூறல் (நூல் முழுவதும்)

107. எதிர்க்கட்சியில் இருந்தபோது கண்ட துயரக் காட்சிகளை ஆட்சிக்கு வந்ததும் துடைத்தல் (640)

108. எதிர்பாரா வகையில் தனக்குக் கிடைத்த பேறுகளை எண்ணிப் பார்த்தல் (642)

109. மாற்றுக் கட்சித் தலைவரைத் தன் கட்சித் தோழர் காப்பாற்றியமை குறித்துப் பெருமைப்படல் (இயல் 124)

110. மாற்றாரிடம் தம் கட்சி காட்டும் பெருந்தன்மையையும் தம் கட்சியிடம் மாற்றார் காட்டும் சிறுமதிப்பையும் எடுத்துக்காட்டல் (646)

111. இயற்கையோடு இயைந்த உவமை கூறல் (650)

112. மாற்றார் மனந்திருந்த பேசும்—கருத்துகளைக் கூறும் ஆற்றல் (651)

113. படிப்பாரை அழவைக்கும் நிகழ்ச்சிகளைச் சற்றும் மிகைப்படுத்தாமல் கூறல் (666)

114. விளையாட்டு முதலாகிய துறைகளில் போலவே சாதனை உச்சிகளோடு தம் வெற்றிகளையும் தம் கட்சி வெற்றிகளையும் ஒப்பிட்டுப் பார்த்தல் (677)

115. அயலக/இந்திய ஏடுகளின் கருத்துகளை அறிதல்/ அறிவித்தல் (678)

116. தன்னடக்கம்—கேளாரும் வேட்ப மொழியும் திறம் (680)

117. அண்ணாவின் உயர்வுகளை அவ்வப்போது சான்று களுடன் சாற்றல் (நூல் முழுதும்)

118. இயல் தலைப்பிலேயே தன் பண்பைப் புலப்படுத்தல் (இயல் 131 : பதவியெனும் புதிய சட்டை)

119. கணக்கின் அடிப்படையில் கருத்துகளைச் சொல்லல் (693)

120. தன் கட்சித் திட்டமொன்றின் தோல்வியைத் தானே ஒப்புக் கொள்ளல் (793)

121. ஒரு பொருளின் இழிவு தோன்ற உவமை கூறல் (கூவம்—705)

122. சிலப்பதிகாரப் பழங்காப்பியத்தைச் சாதிப் பழி யினின்றும் நீங்கிய காப்பியமாக்கல் (இயல் 137)

123. வாதத் திறமை—கருத்துகளை வகுத்தும் தொகுத் தும் விளக்கியும் அழுத்தம் திருத்தமாக கலையுணர் வோடு நிரல்படக் கூறல் (நூல் முழுதும்)

ஒரே ஒருமுறை 'நெஞ்சுக்கு நீதி' நூலைப்படித்த நிலையிலேயே கலைஞர் கருத்து/எண்ண நடை பற்றி

உதிர்ந்த முத்துகள் மேற்கண்டவை. 'நவில் தொறும் நூல் நயம்' என்பதற்கு ஏற்ப மீண்டும் படிக்க படிக்க மேலும் பரிசுகள் பெறலாம்.

கலைஞரின் 'நெஞ்சுக்கு நீதி'யை ஒரு தன் வரலாறு என்பதினும் நம் காலத்தின் தமிழ் வரலாறு—தன்மான இயக்க வரலாறு என்றே போற்றலாம். இந்நூலால் கலைஞரின் அருமை பெருமைகள் விளங்கினும் அவருக்கு அப்பெருமைகள் வாய்த்திட உதவிய காலத்தின் வரலாறும் பெற்றோர் வரலாறும் தலைவர்கள் வரலாறும் தொண்டர் கள் வரலாறும் புகழொளி பெறுகின்றன.

# கலைஞரின் 'இதயத்தைத் தந்திடு அண்ணா!' - ஒரு திறனாய்வு

(1)

அண்மையில் வெளிவந்துள்ள விருந்து — 'கவியரங்கில் கலைஞர்' தமிழுவேள் — டாக்டர் — கலைஞர் — முதல்வர் மு. கருணாநிதி அவர்கள் 5-8-67 முதல் 5-5-71 முடிய கலந்து கொண்ட கவியரங்கத் தலைமைக் கவிதைகள் பதினைந்தையும் 9-2-69 ஆம் நாள் சென்னை வானொலி வாயிலாகக் கலைஞர் சிந்திய கண்ணீர் கவிதை ஒன்றும் கொண்ட இப்புதுத் தமிழ்க் கவிதைப் படைப்பு நூல். இந்நூலின் இறுதிப் பகுதியாக இருப்பது 'இதயத்தைத் தந்திடு அண்ணா' என்ற தலைப்பில் கலைஞர் பெருந்தகை பேரறிஞர் அண்ணாவின் பிரிவாற்றாமல் வடித்த கண்ணீர் வரிகளே ஆகும். இந்நூலில் கால வரிசை முறை பிறழ்ந் தாலும் இப்பாடலே இறுதியில் இருக்கத் தக்கது—உணர்வும் உயர்வும் இலக்கியச் சிறப்பும் கருதி இன்னொன்று: இந் நூலில் ஏனைய பதினைந்து தலைப்புகளும் பிறர் தந்தவை. இறுதிப் பாடலின் தலைப்போ கலைஞரே — அவர் கவிதையே தந்தது. வேறு சொற்களில் சொன்னால் பிற பதினைந்து கவிதைகளும் தலைப்புகளைப் பற்றி (இரு பொருளிலும்!) பாடியவை. ஆனால் இறுதிப் பாடலோ தன்னை ஒரு தலைப்பு பற்றப் பாடப்பெற்றது. இன்னும் வேறு சொற்களில் சொன்னால் முதல் பதினைந்து கவிதைகள் தலைப்பால் பிறந்தன; முடிவுக் கவிதையோ முடிவால் — முடிப்பால் — தலைப்பைப் பெற்றது! சுற்றி வளைத்துச் சொல்வதிலும் சுவை; நேரடியாகச் சொல்வ திலும் சில நேரம் சுவை. இரண்டாம் வகைப்படிச் சொன்னால் இறுதிக் கவிதை தலைப்பைப் பிறப்பித்தது.

பிறவோ தலைப்புக்காகப் பிறந்தன. இவ்வளவு தொலைவு தலைப்பின் சிறப்பை எண்ணியதற்குக் காரணம் அத்தலைப்பின் ஒப்புயர்வற்ற தனிச் சிறப்பே. இவ்வுண்மையையும் இனி ஆராய்வோம்.

(2)

முதலாவதாகக் கருதத்தக்கது 357 வரிகள் கொண்ட இந்தக் கவிதைக் காணிக்கை தமிழ்நாட்டின் தனி முதல்வர் தன் முன்னோர்க்கு — தன் முன்னாள் முதல்வருக்குச் — செலுத்திய செய்யுள் காணிக்கை ஆகும். இந்நீண்ட பாட்டில் பல்வேறு தனிக் கூறுகள் (Units) ஒன்றோடொன்று நெய்யப்பட்டுள்ளன. ஈண்டு அவற்றை எண்ணுவோம்:

(1) முதல் 21 வரிகள் ஒரு தனிக் கூறு எனலாம். இப் பாவடிகளில் பூவிதழ்கள் கொஞ்சுவதைக் காணலாம். இச் சிறப்பை இன்னும் கூர்ந்து ஆராயின் மலர்களின் மகரந்தத் தூள்கள் புலப்படும். அவை வழங்கும் வளம் சில வருமாறு:

(அ) பேரறிஞர் உள்ளமும், வாய், விழி, கால், கை ஆகிய ஐந்தும் மலர்களாக உருவகிக்கப்படுகின்றன. அக்காட்சி காண்போம்:

(1)

“பூவிதழின் மென்மையிலும் மென்மையான
[புனித உள்ளம் — அன்பு உள்ளம் — ]
அரவணைக்கும் அன்னை உள்ளம் — அவர்.

(2)

மலர் இதழ்கள் தமிழ் பேசும் மா, பலா, வாழையெனும் முக்கனியும்
மா, பலா, வாழையெனும் முக்கனியும் தோற்றுவிடும்.

(3)

விழிமலர்கள் வேலாகும், வாளாகும்
தீங்கொன்று தமிழ்த்தாய்க்கு வருதென்றால்

(4)

கால் மலர்கள் வாடிடினும் அவர் கடும்பயணம் நிற்காது.

(5)

கை மலர்கள் பிணைத்து நிற்கும், தம்பியரை, கழகத்தை!
அம்மலரே எதிரிகளை மன்னித்து
நெற்கதிர் போல் தலைநாணச் செய்துவிடும்!

(6)

மக்களாட்சி மலர் குலுங்க
சமதர்மப்பூ மணக்க
தாய்மொழி தமிழே வாழ்வுப் பொழிலாக
ஆடிவரும் தென்றல்
நாடிவரும் பூமுடியே! புகழ்முடியே! உமைத்
தேடிவரும் வாழ்த்துக் குவியலிலே — தினம்
பாடி வரும் வண்டாக நான் பிறப்பேன்
உனக்காக எனைத் துறப்பேன்; என —
ஒருகோடித் தமிழ் இளைஞர்
பாடிநின்ற பாட்டுக்குப் பெருந்தலைவன் ...'

*என்ன செறிவான சொல்லோட்டம்! — பொருளோட்டம்! ஆற்றோட்டத்தைக் கரையோரமிருந்து அன்புக் கையால் அணையிட்டு இன்புறப் பார்ப்போம்!*

*(ஆ) பேரறிஞர் அண்ணாவை எண்ணும் போது அவர் தம் உடல் மலர்கள் பலவினும் உள்ளமலர் ஒன்றே முன்னே தோன்றி மின்னுகிறது. அந்த உள்ளமலரின் எத்தனையோ சிறப்புகளுள் ஏற்றமிகு சிறப்பு அம்மலர்—எந்த எழில் மலர் இதழினும் மெல்லியதாய் இருக்கும் மேன்மையே.*

ஆம். அந்த 'மென்மையிலும் மென்மையான' மனத்தின் வன்மையே வன்மை! அந்த மென்மைக்கும் அந்த மென்மை தந்த வன்மைக்கும் காரணம் ?

புனித உள்ளம் — அன்பு உள்ளம் —
அரவணைக்கும் அன்னை உள்ளம்

ஆம். அன்புக்கும் அதன் எல்லையால் இலங்கும் அன்னை அன்புக்கும் அடிப்படை எது ? 'புனிதம்'. இந்த முதலடிகளும்—இம்முதலடிகள் போலவே பாட்டு முழுவதும் உள்ள எல்லா அடிகளும் படிகள் போல ஒன்றோடொன்று பிணைந்து நம்மை மேலே மேலே ஏற்றிச் செல்லும் ஏற்றம் தான் 'இதயத்தைத் தந்திடு அண்ணா!'வின் இமயவெற்றி. இந்த வெற்றி ஒரு கவிஞருக்கு எப்போது வாய்க்கும் ? இரத்தத்தின் ஒவ்வொர் அணுவிலும் உண்மை உணர்வும்—ஊடுருவிப் பார்க்கும் ஆற்றலும் இருந்தாலே ஆகும். நேற்று சாவின் வாயிலிருந்து தப்பிய மாவீரன் டாக்காவில் சிங்கம் போல் முழங்கியதையும் சிறு குழந்தைபோல் தேம்பியதையும் நினைத்துப் பார்த்தால் கலைஞரின் சொற்களின் அடிப்படை உண்மை கண்ணையும் கருத்தையும் பறிக்கும் !

(இ) பேரறிஞர் அண்ணாவின் அகமலர் கண்டோம்—இனிப் புறமலர்கள்காண்போம்.

—அவர்

மலர் இதழ்கள் தமிழ் பேசும் —
மா, பலா, வாழையெனும் முக்கனியும் தோற்றுவிடும்—

ஆம். இங்கும் மலர் கூட இல்லை அதன் இதழ்கள் தான்! கனிவுடைய அந்தத் தமிழுக்குக் கனிகள்—முக்கனிகள்—தோற்றுவிடுமாம்! உண்மைதான்—அண்ணாவின் கனிமொழிகட்கு மட்டுமில்லை—அக்கனியினிமை காட்டும் கலைஞரின் கனிமொழிகட்கும் நம் உள்ளம் தோற்றே விடும்!

*(ஈ) அடுத்து? மென்மை வன்மையாகும் மேன்மை வருகிறது எப்படி? வேலாய்—வாளாய்!*

**விழிமலர்கள் வேலாகும், வாளாகும் எப்போது?**
**தீங்கொன்று தமிழ்த்தாய்க்கு வருகுதென்றால்?**

*சரிதானே? பகையைச் சரிக்கத்தானே?*

*(உ) தமிழுக்கும்—தமிழர்க்கும் புதுநடை தந்த அண்ணாவின் பாவடி பற்றிய பாவடி உண்டோ? ஏன் இல்லாமல்? இதோ:*

**கால் மலர்கள் வாடினும் அவர் கடும் பயணம் நிற்காது!**

*அடி! ஒரே அடி! ஆம். ஒரே அடிதான்! போதுமே பேரறிஞர் அண்ணாவின் பெருந்தொண்டை—நாம் இன்புற அவர் பட்ட துன்பத்தைப் புரிந்து கொள்ள! 'இதயத்தைத் தந்திடு அண்ணா'வின் இதயத்தைப் பிழிந்திடும் முதலிடம் இந்த இடம். ஆம். திருவடிப் பெருமை சமயங்களும் சாற்றும் பெரும் பெருமை அன்றோ! அதனாலன்றோ ஆண்டவன் திருவடி அடியார் திருமுடி?*

*(ஊ) இதழ்—விழி—கால்—சரி. கை? ஆம். அவற்றின் பெருமையே பெருமை: அக்கைகள் அன்பின் வண்ணம்? அருளின் வடிவம் விளக்கம் வருமாறு:*

**கை மலர்கள் பிணைந்து நிற்கும், தம்பியரை, கழகத்தை!**
**அம்மலரே எதிரிகளை மன்னித்து**
**நெற்கதிர்போல் தலை நாணச் செய்துவிடும்**

*இணையில்லா இணை பேரறிஞன் பெருங்கைகள்! அதைக் கண்டு காட்டும் கலைஞரின் கண்களே கண்கள்!*

*(எ) இனி 12 முதல் 19 வரை எட்டு வரிகள் தமிழறி யாதார்க்கு எட்டாத இன்பச் சோலை மெய்யாகவே. கலைஞர் பூவுள்ளம் ஈண்டுப் பொழில் உள்ளமாக மாறு*

*கிறது. அங்கே மக்களாட்சி மலர் குலுங்குகிறது. அம்மலரின் மணமாகச் சமதர்மப்பூ மணக்கிறது. மக்களாட்சியும் சமதர்மமும் —அரசியலும் பொருளியலும் எதற்காக? வாழ்வுக்காக. எத்தகைய வாழ்வுக்காக? தமிழ் வாழ்வுக்காக. அந்த வாழ்வுக்கு வழிகாட்டிய வள்ளல் அண்ணா!*

**தாய்மொழி தமிழே வாழ்வுப் பொழிலாக**
**ஆடிவரும் தென்றல்**

*பொழிலில் தென்றல் புகுந்தால்? இன்பம்! இன்பம்! அண்ணா வழியில் நம் வாழ்வு அமைந்தால் இன்பம்! இன்பம்! அதன் பயன் நன்றி உணர்ச்சியின் நாவாயிரம்— நாலாயிரம்.*

*அதன் பயன்:*

**நாடி வரும் பூமுடியே! புகழ்முடியே! உமைத்**
**தேடி வரும் வாழ்த்துக் குவியலிலே — தினம்**
**பாடி வரும் வண்டாக நான் பறப்பேன்**
**உனக்காக எனைத் துறப்பேன்; என —**
**ஒரு கோடித் தமிழ் இளைஞர்**
**பாடி நின்ற பாட்டுக்குப் பெருந்தலைவன்.**

*இங்கும் மென்மை காட்டும் பூ! அதன் 'வன்மை' காட்டும் புகழ்! பேரறிஞர் புகழ் அவரைத் தேடி வரும் புகழ் — அது வாழ்த்தாய் வரும் குவியல்! இந்தக் குவியலும் கலைஞருக்கு ஆனந்தப் 'பூக்காடு' தான்! இல்லாவிட்டால் அக்குவியலைத் துய்க்க*

**— தினம்**

**பாடி வரும் வண்டாக நான் பறப்பேன்**

*என்று பாடுவாரா? அம்மட்டோ?*

**உனக்காக எனைத் துறப்பேன்**

*என ஓதுவாரா?*

எல்லாவற்றிற்கும் மேலாக இவ்வாறு தாம் சொல்வது எல்லாம் — சொல்வதா? — பாடுவது எல்லாம்

**ஒரு கோடித் தமிழ் இளைஞர்**
**பாடி நின்ற பாட்டு**

என்றல்லவா பேசுகிறார்?

தன் பாட்டை 'ஒரு கோடித் தமிழ் இளைஞர் பாடி நின்ற பாட்ட'ாகத் தருவது அன்றோ கலைஞரின் கவிக் கொண்ட — கவிதைக் கொடை. அதை நினைக்கும் போது அப்பாட்டுக்குரிய பேரறிஞர் அண்ணா அவர் சொல்வது போலவே 'பெருந்தலைவன்' என்பது எவ்வளவு உண்மையோ அவ்வளவு உண்மை நம் கவிஞர் 'பெருங் கலைஞர்' என்பதும் என்பது தெளிவாகிறதன்றோ?

# ஒன்பதில் ஒருவர்
# தலைவர் கலைஞர் பற்றி இந்தியத் தூதரக அதிகாரி

அண்மையில் எனக்கு நண்பரானார் ஒரு நல்லவர்— வல்லவர். அவர் 1948 முதல் 1981 வரை அயலகங்களில் உள்ள இந்தியத் தூதரகங்களில் பணி புரிந்தவர். இறுதி யாகப் பிரிட்டனில்—லண்டனில் உள்ள இந்தியத் தூதரகத் தில் முதல் செயலராக இருந்து ஒய்வு பெற்றவர். பெயர், என். வி. இராமன்—நடராச வேங்கட ராமன்! பத்து நாடுகளில் உள்ள இந்தியத் தூதரகத்தில் தங்கிப்பணிபுரிந்து இவர் இந்திய அயலகத் துறைப் பணிகள் காரணமாக மேலும் முப்பது நாடுகட்குச் சென்றுள்ளார். தமது நீண்ட பலநாட்டுப் பயண வாழ்க்கைப் பட்டறிவுகளை/பளிச்சிடும் சிந்தனைகளை அடிப்படையாகக் கொண்டு திரு. இராமன் 1986 இல், 'Diplometic Service-The first 34 years' என்ற அருமையான நூலை எழுதியுள்ளார். இப்போது (1988) 'Three Worlds' என்ற தலைப்பில் மற்றுமொரு அருமை யான புத்தகத்தைப் படைத்துள்ளார். இந்த இரண்டாவது புத்தகத்தில் பெருமைபடத் தக்க தமிழராகிய இவர் நம் தலைவர் கலைஞர் 1973 இல் மேற்கு ஜெர்மனியில் சந்தித்த போது தமக்குத் தோன்றிய உணர்வுகளை ஆங்கிலத்தில் அழகோவியமாக்கி உள்ளார். அதன் தமிழாக்கம் (சில குறிப்புகளுடன் பின்வருமாறு :

மு. கருணாநிதி

1970 ஜூலையில் தமிழக முதல்வர் திரு.மு.கருணாநிதி மேற்கு ஜெர்மனிக்கு வருகைபுரிந்த போது வரவேற்பு

---

* குங்குமம் தமிழ் புத்தாண்டு (1988) இதழில் வெளி வந்த கட்டுரை.

தொடர்புப் பணி புரியுமாறு யான் பணிக்கப்பட்டபோது, எனக்குச் சிறிது நடுக்கம்/தடுமாற்றம் ஏற்பட்டது. அப்போது அவர் தி. மு. க. இயக்கத்தின் ஒரு பெருந்தலைவராய்த் திகழ்ந்தார். அவர் மக்கள் வெள்ளத்தைக் கிளர்ந்தெழச் செய்யக் கூடிய ஈடு இணையற்ற 'நாவலர்'; உயிர்த்துடிப்பூட்டுபவர்; திறமை மிக்க அரசியலாளர்; அனைவராலும் மதிக்கப்பட்ட தமிழறிஞர்.

தூதரகத்தில் இருந்த ஒரே தமிழன் நான். எனவே தூதர் நானே இந்த மிகச் சிறப்பு விருந்தினரை கவனித்தல் வேண்டும் என்று முடிவு செய்தார்.

திரு. மு. கருணாநிதி போன்/கெலோன் விமான நிலையத்தில் அடக்கமான/மென்வண்ண ஐரோப்பிய உடை அணிந்து வந்து இறங்கினார். அவருடைய மேலங்கி (கோட்) கழுத்து வரை பொத்தான் பொருத்தப்பட்டு இருந்தது. இந்திய உடையாகவே ஆகிவிட்ட இந்த உடுப்பு அதிகார பூர்வமாக ஏற்றுக் கொள்ளப்பட்ட ஒன்றே. ஆனால், எனக்கு இந்த உடை வியப்பைத் தந்தது. காரணம் அவர் தமிழகத்தின் மரபுவழி உடையில் வருவார் என்று எதிர்பார்த்தேன். ஆனால் இந்த 'நவீன' உடை அவர் விரைந்து நடப்பதற்கு உதவியாக இருந்தது. இந்த நேரத்தில் எனக்கு திரு. காமராஜ் நினைவு வந்தது; காரணம் பலமாகக் காற்றடித்த 1966 இல் பீரிட் விமான நிலையத்தில் காமராஜ் தமது வேட்டியைக் கலையாமல் பிடித்துக் கொள்ளப்படாத பாடு பட்டார். இந்திய வகையைச் சார்ந்த தென் அல்லது வட இந்திய வேட்டி நம் நாட்டுக்குச் சரியாக இருக்கலாம். ஆனால் அதை வெளி நாட்டில் பயன்படுத்துவது என்பதை ஒரு காந்திக்கு மட்டும் விட்டுவிடலாம். அப்படிப்பட்டவர்கள் ஆயிரம் ஆண்டுக்கு ஒரு முறைதானே வருவார்கள் !

நடுத்தர உயரம், வழுக்கை விழும் தலை, ஒளிவு மறைவு இல்லாத மனதைத் திறந்து காட்டும் முகம், தோற்றத்திலேயே மதிப்பைத் தோற்றுவிக்கும் தன்மை இதுதான் கருணாநிதி. அவர் தம் மனைவி தயாளு அம்மாளுடன் வந்திருந்தார். அந்த அம்மையார் ஒல்லி, கணவருக்கு நிகரான உயரம். ஆம், காஞ்சிபுரம் பட்டுப் புடவை, வைர மூக்குத்தி, கம்மல், நெற்றியில் குங்குமம், தலையில் மல்லிகை மலர் இவை அணிந்த வழிவழித் தமிழ் மரபில் வந்த பெண்ணோவியம்! கருணாநிதியுடன் நிதித் துறை மூத்த அதிகாரி, தனி மருத்துவர், தனிச்செயலர் இவர்களும் வந்திருந்தார்கள். அமைதியான, அறிவான குழுவினரான இவர்களை வரவேற்பதில் தனிமகிழ்ச்சியே இருந்தது. (தலைவர் கருணாநிதியின் ஆட்களைத் தேர்ந் தெடுக்கும்—தெரிந்து வினைசெய்யும் திறமும் அதைஅறிந்து போற்றும் திரு. இராமனின் திறமும் நினையத் தக்கன)

மேற்கு ஜெர்மனியில் உள்ள பன்னாட்டு உறவுமன்றம் கருணாநிதியின் வருகை, வரவேற்பு, போக்குவரத்து, தங்கும் உணவகம் ஆகியவற்றை ஏற்பாடு செய்திருந்தது. அந்த அமைப்பினரே மெத்த யோசனையுடன் போன் பல்கலைக் கழகத்தில் படிக்கும் ஓர் இந்தியத் தமிழ் மாணவரை ஜெர்மன் மொழி தெரிந்தவரை உடன் செல்லவும் மொழி பெயர்ப்புப் பணி புரியவும் ஏற்பாடு செய்திருந்தனர். ஆனால் திரு. கருணாநிதி தாம் வந்த இருபத்துநாலு மணி நேரத்தில் என்னையே தம்முடைய நாலுநாள் பயணத்தின் போதும் உடனிருக்கச் சொன்னார். அப்போது சப்பென்று 'அந்த மாணவனுக்குத் தமிழும் நன்றாகத் தெரியவில்லை; செர்மன் நன்றாகத் தெரியும் என்றும் தோற்றவில்லை' என்றார்.

அலுவல் சார்பான கட்டடங்களிலும் செய்தியாளர் நேர் காணல் கட்டங்களிலும் சமூக அளவளாவற் கூட்டங் களிலும் திரு. கருணாநிதி செந்தமிழிலேயே பேசினார்.

அவர் வாயிலிருந்து பொருத்தமான திருக்குறளும் பிறதமிழ் இலக்கிய மேற்கோள்களும் அழகாகவும் இயல்பாகவும் வந்தன. (ஒரு மொழி—அதுவும் தாய்மொழி கவன மாகவும் நுட்பமாகவும் பயன்படுத்தும்போது அதுதான் எவ்வளவு மயக்கக் கவர்ச்சியைத் தருகிறது!) தி.மு.க. இயக்கத்தின் குறிக்கோள்களையும், மைய மாநில உறவுச் சிக்கல்களையும், தமிழகத்திற்குக் கூடுதல் தன்னாட்சி பெறத் தன்கட்சி கொண்டுள்ள நோக்கத்தையும் திரு. கருணாநிதி தெள்ளத் தெளிவாக உணர்ச்சித் திறத் துடனும் விளக்கினார். (இந்தநேர்முகங்கள் பற்றிய விவரங் களும் கலைஞர் எழுதிய 'இனியவை இருபது' என்ற நூலில் (1973) உள்ளன. இந்நூலின் முன்னுரை 1-4-73 கலைஞ ரால் எழுதப்பட்டுள்ளது. ந.ச.)

திரு. கருணாநிதி ஆங்கிலத்தில் ஒரு சொல் கூடச் சொல்லவில்லை. ஆனால் அவர் பணிமுறை மொழி பெயர்ப்பாளரின் ஆங்கில மொழிபெயர்ப்புகளைக் கவன மாகக் கேட்ட வண்ணம் இருப்பதையும் தம் கருத்தைத் துல்லியமாகப் புலப்படுத்தாத எந்த ஓர் ஆங்கில மொழி யாக்கத் தவறையும் உடனுக்குடன் திருத்துவதையும் கண்டேன். ஒருகாலத்தில் சில காங்கிரஸ் தலைவர்கள் இருந்ததுபோல் தி.மு.க. தலைமை மதுவிலக்கு பற்றி வெறியாக இல்லை.அவ்வாறே புலாலுண்ணாமையின் நலங் கள் குறித்தும்அவர்கள் உணர்ச்சிமிகு உரைகள் நிகழ்த்தியது இல்லை. (ஜனதாவைச் சார்ந்த தமிழக முன்னாள் ஆளுநர் பிரபுதாஸ் பட்வாரிக்கும் இந்தியக் குடியரசின் முன்னாள் தலைவர் சஞ்சீவி ரெட்டிக்கும் நாமறிந்த வரையில் புலால் உணவு பற்றி எழுந்த கருத்து வேறுபாட்டால் சஞ்சீவி ரெட்டி தமிழக ஆளுநர் மாளிகையிலேயே தங்காமல் இருந்தது நினைவு கூரத்தக்கது. ஆன்மீகர்கட்கு மரக்கறி உணவே சிறந்தது என்பதையும் மறக்கவோ மறுக்கவோ முடியாது! ந. ச.) எவ்வாறானும் கருணாநிதி கண்டிப்பாக மதுவிலக்கைப் பின்பற்றியதைப் பார்த்தேன். அத்துடன்

அவர் தமக்கு மரக்கறி உணவே போதும் என்றும் அறிவித்திருந்தார். இதனால் அவருக்குத் தரப்பட்ட விருந்துகளும் அவர் கருத்திற்கு எற்றவண்ணமே இருந்தன. ஒருமுறை பணிமுறை சார்பற்ற விருந்தின்போது மதுவிலக்கு, மரக்கறி உணவு இரண்டு பற்றியும் நான் அவரிடம் பேசினேன். 'திரு. கருணாநிதி, இங்கே எந்த வகைப் புலால் கிடைக்கும் என்பது எனக்குத் தெரியாது என்று மரக்கறி உணவைப்பற்றிக் குறிப்பிட்டார். மது விலக்கு பற்றிக் குறிப்பிடும்போது 'அடுத்த முறை தேர்தலில் தி. மு க. வெற்றி பெற்றால் மதுவிலக்கைத் தளர்த்தும்' என்றார். அவ்வாறே நடந்தது.

திரு. கருணாநிதி தன்மதிப்பு, தன்னுயர்வு கொள்கை களில் விடாப்பிடியானர். தானும் தன் மனைவியும் மட்டு மின்றித் தன்குழுவைச் சார்ந்த ஒவ்வொருவரும் எங்குச் சென்றாலும் மரியாதையுடன் நடத்தப்பட வேண்டும் என்பதில் கருத்தாய் இருந்தார். அவரும் அவ்வாறே எங்குச் சென்றாலும் நடந்து கொண்டார். (கலைஞரின் தனிச்சிறப்புகளில் இதுவும் ஒன்று—ந.ச.) கலைஞரின் இந்த போக்கு அயல்நாடுகளில் பயணம் செய்த மைய அரசின் அமைச்சர்கள் உள்ளிட்ட பல 'பெரு' மக்களின் நடத்தைக்கு மாறாக அமைந்து மகிழ்வளித்தது. நானும் அவர் சென்ற விடமெல்லாம் சரியான மரியாதை முறைமை கடைப்பிடிக் கப்படுகிறதா என்பதைக் கண்காணிப்பதில் கருத்தாய் இருந்தேன்.

ஒருமுறை ஒரு சிக்கலான நிலைமை ஏற்பட்டது. மேற்கு ஜெர்மனியில் அப்போது ஆசிய வாரம். இதில் ஒரு நாள் மாலைநிகழ்ச்சிக்கு அவர் தலைமை விருந்தினர். அந்த நிகழ்ச்சியில் பத்மா சுப்பிரமணியத்தின் பரத நாட்டியமும் கேரள உத்யோக மண்டலியின் கதகளியும் இருந்தன. திரு. கருணாநிதி தமது காரிலிருந்து கலை அரங்கின் தலை வாயிலுக்கு வந்துவிட்டார். அவரை வரவேற்க எவரும் இல்லை. சற்றுநேரம் சுற்றும் முற்றும் பார்த்தார். என்னை நோக்கி, 'என்ன சொல்றீங்க ? நாம் திரும்பிப்

போய் விடலாமா ?' என்றார். இவ்வாறு சொல்லிவிட்டு மாபெரும் பெண்பாற் புலவர் அவ்வையாரின் வாசகம் ஒன்றை உள்ளத்தில் தைக்கும்படி உதிர்த்தார். 'மதியாதார் தம் வாசல்தனை மிதியோம்'. ஒரு மணித்துளி பொறுத்துக் கொள்ளுமாறு திரு. கருணாநிதியிடம் பணிவுடன் கேட்டுக் கொண்டேன். அதற்குள் விழா அமைப்பாளர்களும் பத்மாவின் அண்ணனும் ஓடோடி வந்தனர். முகமலர்ந்து (முகமலர ந. ச.) வரவேற்றனர்; நிலைமை நேராகியது; தப்பித்தோம்.

திரு. கருணாநிதியின் ஆளுமை, முழுக்க முழுக்க திருக்குறளும், பழந்தமிழ் இலக்கியங்களும், அரசியலும், தி.மு.கவும் மட்டும் அல்ல; பரிவும் அன்பும் நிறைந்த அவர் அடிக்கடி தன் குழுவைச் சார்ந்தவர்களின் நலங்களைக் கேட்டறிந்து கொண்டதுதான். ஒரு முறை பழைய நிகழ்ச்சிகளை நினைவு கூரும் பாங்கில் ஒருமுறை அவர் தமது ஆரம்ப இளமைக் காலத்தின் அடித்தள நிலையில் தமது இயக்கத்தைப் பரப்பப் பாடுபட்டபோது விடியற்காலை இரண்டு அல்லது மூன்று மணி வரை கூட உழைத்துவிட்டு நூல்களும் தாள்களும் சூழக்கிடக்கும் நிலையிலேயே தூங்கியதைச் சொன்னார். ஆம். அது தன் கட்டுப்பாடும் உறுதிப்பாடும் மிக்க 'மலையேறும்' முயற்சி.

இந்தியாவில் பள்ளிப் படிப்பை முடித்துவிட்டு மேற்படிப்புப் பற்றி எண்ணிக்கொண்டிருந்த என் மகள் அப்போது என்னுடன் இருந்தாள். இதை அறிந்ததும் திரு. கருணாநிதி புகழ்பெற்ற கொலோன் கிறித்தவ ஆலயத்தைக் காணச் சென்றபோது என்மகளையும் அழைத்து வருமாறு அன்புடன் கூறினார். (பணிமுறை இல்லாத் தனிமுறை! ந.ச.) அதைவிட அவ்வாறு நான் அழைத்துச் சென்றபோது திருமதி தயாளு அம்மாள் தமிழகத்திற்குத் திரும்பும்போது குழந்தைகட்குக் கொடுக்க வாங்கிய பரிசுப் பொருள்களில் ஒன்றை என் மகளுக்குத் தந்தபோது என் நெஞ்சம் நெகிழ்ந்தது. (திரு. கருணாநிதி திருமதி தயாளு)

திரு. கருணாநிதியிடம் புலமை மட்டும் இல்லை; அடக்கமும் மனித நேயமும் உடன் உறைந்திருந்தன. நன்னடத்தை பற்றிய அவர்தம் அழுத்தமான கொள்கை அயல்நாடுகட்கு வருகை புரியும் இந்தியப் 'பெரியமனிதர்' களிடமிருந்து அவரைப் ஒரு விதிவிலக்காகப் பிரித்துக் காட்டியது! மரியாதை, பண்பாடு ஆகியவற்றின் உறைவிடம் அவர். உண்மையில் 'பண்பு' என்ற உயர்தனித் தமிழ்ச் சொல்லின் இரத்தினச் சுருக்கம் கருணாநிதி.

திரு. என். வி. இராமன் தமது 'மூவுலகு' என்ற அண்மை நூலில் 'தூரத்துத் தொடர்புகள்' என்ற உள் தலைப்பில் 1—2 காந்தியும் நேருவும், 2—4 சுபாஸ் சந்திர போசும் வி. கெ. கிருஷ்ணமேனனும், 5. டாக்டர் எஸ். இராதாகிருஷ்ணன், 6. இந்திராகாந்தி, 7. மு. கருணாநிதி, 8. நிராட்சி சவுத்திரி, 9. என்.ஜி.கோரே என்ற வரிசையில் ஒன்பது பேர் பற்றி எழுதியுள்ளார். அவர்களுள் நால்வரே அவர் நேரில் அறிந்த அரசியல் ஆட்சியலாளர். 1. டாக்டர் இராதாகிருஷ்ணன், 2. இந்திராகாந்தி, 3. கருணாநிதி, 4. கோரே. இந்த நால்வருள்ளும் இந்திய கட்சி அரசியலில் மக்கள் செல்வாக்கு பெற்றவர் இருவர். ஒருவர் வடநாட்டில் பிறந்த பரம்பரையாகச் செல்வமும் செல்வாக்கும் படைத்த அலகாபாத் ஆனந்த பவனச் செல்வி; மற்றொருவர் திருக்குவளை கிராமத்தில் பிறந்த கலைஞர் மு. கருணாநிதி.

திரு. இராமன் இளமையிலேயே தமிழகத்தை விட்டு வெளிமாநிலங்கட்கும் வெளிநாடுகட்கும் சென்று விட்டவர். படிப்படியாக இந்திய/அயலகத் துறையில் பதவி உயர்வுகள் பெற்று இப்போதும் பெங்களூரில் இருப்பவர்.

தமிழர் என்ற பிறப்புரிமை உணர்வு மிக்க இந்த மனிதர் திருக்குறள் ஈடுபாடு மிக்கவர். தமது அயலக

அனுபவங்களைக் கூறும், இவரது அண்மை நூல் 'மூவுலகு'. இதில் முப்பாலிலிருந்து இரு குறள் மொழிகள் ஆங்கில ஆக்கத்தில் முகப்புத்தாளில் முத்திரையாக இடம் பெற்றுள்ளன. அவை வருமாறு :

யாதானும் நாடாமல் ஊராமல் என்னொருவன்
சாந்துணையும் கல்லாத வாறு (397)

எவ்வது உறைவது உலகம் உலகத்தோடு
அவ்வது உறைவது அறிவு (436)